تاميلي

للمسلمين الجدد

سلسلة الهداية (7)

# பரிசுத்தவான்களின் வரலாறு

# இஸ்லாத்தின் இறைதூதர்

# முஹம்மத்

## ஸல்லல்லாஹூ அலைஹி வஆலிஹி




ஆக்கம்

தர் ராஹெ ஹக் நிறுவனம்

பரிசுத்தவான்களின் வரலாறு

இஸ்லாத்தின் இறைதூதர்

# முஹம்மத்

ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி

ஆக்கம்

தர் ராஹெ ஹக் நிறுவனம்

வெளியீடு

அமீத் பப்ளிசர்ஸ்

பெங்களூர், இந்தியா

# பதிப்புரை

இந்தியா, இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் மற்றும் மியான்மார் போன்ற நாடுகளில் ஏராளமான தமிழ் பேசும் ஷீயாக்கள் வாழ்ந்து வருகிறார்கள். தமிழில் ஷீயாக்கள் பற்றிய நூல்கள் அரிதாக இருப்பது அவர்களுக்கும் அவர்களைப் பற்றி வாசித்தறிந்து கொள்ள விரும்பும் ஏனையோருக்கும் சங்கடத்தை ஏற்படுத்துகிறது.

அண்மைக் காலமாக மத்திய கிழக்கு நாடுகளில் ஏற்பட்ட பாரிய மாற்றங்கள் காரணமாக சீயா முஸ்லிம்கள் பற்றி ஊடகங்கள் நிறையவே -இல்லாததும் பொல்லாததுமாக- பேசத் தொடங்கின.

ஷீயாக்களின் நம்பிக்கைகள் மற்றும் செயற்பாடுகள் பற்றி ஆதாரபூர்வமாக விளக்கும் நூற்களின் தேவை நீண்ட காலமாகவே உணரப்பட்டு வந்தது. அப்பாரிய இடைவெளியை நிரப்பும் விதத்திலும் நமது இளம் சந்ததியினர் பயன்பெறும் வகையிலும் நாம் சில நூற்களை வெளியிடத் தீர்மானித்தோம்.

அஹ்லுல் பைத் நேசர்களாகிய நமது நம்பிக்கைக் கோட்பாடு, நமது அன்றாட நடைமுறை வாழ்வுக்கு உதவும் பிக்ஹ் சட்டதிட்டங்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி முதல் இமாம் மஹ்தி அலைஹிஸ்ஸலாம் வரையிலான பரிசுத்தவான்களின் வாழ்க்கை வரலாறு, அல்லாஹ்வோடு தனியாக உரையாடுவது போன்ற உணர்வைக் கொடுக்கும் பிரார்த்தனைகளளின் தொகுப்பு என பல்வேறு புத்தகங்களை இந்த வரிசையிலே நாம் வாசகர்களுக்கு சமர்ப்பிக்கிறோம்.

உங்கள் கைகளில் தவழும், பரிசுத்தவான்களின் வரலாற்றைக் கூறும் சிறு நூற்களின் தொகுதியை தர் ராஹெ ஹக் என்ற நிறுவனம் தயாரித்து முதலில் ஈரானில் வெளியிட்டது. பல மொழிகளிலும் பெயர்க்கப்பட்டு பல முறை பதிப்பிக்கப் பட்ட இந்நூல் வரிசையினை தமிழ் மொழியில் தருவது பற்றி நமது நிறுவனம் பெருமிதம் அடைகின்றது.

உண்மையைத் தேடி அறிந்து கொள்ள விரும்புகின்ற அனைவருக்கும் இந் நூல் வரிசை பயன் மிக்கதாக அமையும் என நம்புகின்றோம்.

அமீத் பப்ளிகேசன்ஸ் பி. லிட்.
பெங்களூர், இந்தியா

மே 20, 2005

# உள்ளடக்கம்

# 1. இஸ்லாம் தோன்ற முன்

இஸ்லாத்தின் தோற்றத்துக்கு முன்னர் உலகின் பல பாகங்களிலும் இருந்த மக்கள், சிந்தனை, மற்றும் கோட்பாடு ரீதியாகவும் தத்தமது தனிமனித சமூகப் போக்கு களிலும் மிக மோசமான நிலையில் வாழ்ந்து வந்தார்கள்.

உலகின் எல்லாப் பகுதிகளிலும் இந்நிலை ஒரே விதமாகக் காணப்படவில்லை. என்றாலும் கூட, சிந்தனைக் குளறுபடி, இத்துப்போன மனிதாபிமானமற்ற சமூக நடை முறைகள், மூடநம்பிக்கைகளினதும் வீண் கற்பனைகளின தும் ஆதிக்கம் மற்றும் சமூக, ஒழுக்கப் பிரச்சினைகள் பொதுவாக எல்லா இடத்திலும் காணப்பட்டன.

இஸ்லாம் வெளியாகும் முன்னரே, யூதர்கள், நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் கொண்டு வந்த தூய மார்க் கத்தை ஒரு கடுமையான சுமையாக மாற்றியமைத் திருந்தனர். அதன் அடிப்படைகளை இறுக்கமான, உயிரோட் டமற்ற சம்பிரதாயங்களிலும் சடங்குகளிலும் மட்டுப்படுத் தினர். உலகாயச் சிந்தனை மக்கள் மத்தியில் மிகப் பரவலாகக் காணப்பட்டது.

மனிதர்களின் ஒழுக்கச் சீர்திருத்தத்திற்கும் ஆன்ம பரிசுத்தத்திற்குமாக வந்த கிறிஸ்தவ சமயமும் இறுதியில் தேவாலய குருமார்களின் கையாடலால் திரிபடைந்து காணப்பட்டது. அவர்கள் அதன் உயிரோட்டத்தைச் சிதைத்து தத்தமது சுயநலன்களுக்காக அதனைப் பிரயோகித்தனர். அப்பாவிகளை அடக்கியாளும் சாதனமாக அது பிரயோகிக்கப்பட்டது. இவற்றுடன், இயல்பிலேயே கிறிஸ்தவம், பல்வேறு சமூக ஒழுங்குகளைத் தீர்மானிக்கப் போதுமான விரிவான சட்டதிட்டங்களைக் கொண்டிராததால் மனித சமூகத்துக்கு தலைமைத்துவம், விமோசனம் என்பவற்றை வழங்க முடியாமல் திண்டாடியது.

இதனால் பல்வேறு பிரதேசங்களில் வாழ்ந்த மக்களும் கரடுமுரடான சமூகப் பழக்க வழக்கங்களினதும் மூடநம்பிக்கைகளினதும் ஒழுக்க முரண்பாடுகளினதும் ஆதிக்கத்துக்கு உட்பட்டுக் காணப்பட்டனர்.

ஊழலும் அனாசாரமும் எங்கும் தாண்டவமாடின. சமயத்தின் பேரால் மூடநம்பிக்கைகளும் வரட்டு சித்தாந்தங்களும் மக்களை அடக்கியாண்டன.

பல் தெய்வக் கோட்பாடு, திரித்துவம் போன்றன மனிதர்கள் மீது திணிக்கப்பட்டிருந்தன. அதிகமானோர் சிலைகள், நெருப்பு, பசு, நட்சத்திரம் போன்றவற்றை, வணங்கி வந்தனர். இவற்றில் மிக இழிவானதாக ஆண், பெண் பாலுறுப்புகளையும் வணங்கிப் பூசிக்கும் பழக்கம் காணப்பட்டது.[1] எங்கும் பரவிக் காணப்பட்ட இக்குழப்ப நிலையும், ஒழுக்க வீழ்ச்சியும் ஆன்மீக சூனியமும் மனித சமுதாயங்கள் மத்தியில் அவநம்பிக்கையையும் அந்தகாரத்

*1. வில்டுராண்ட், மேற்கு நாகரிகத்தின் வரலாறு, பா.1, ப.95,301, பா.4, ப.304, பா.7, ப.95*

தையும் உருவாக்கியிருந்தன. இரத்தக் களரியும் அநீதியும் அடக்குமுறையும் எங்கும் பரவிக் காணப்பட்டன. உண்மையில், மனித சமூகம் அழிவினதும் நிரந்தர வீழ்ச்சியினதும் விளிம்பில் நின்று கொண்டிருந்தது.

## அரபுத் தீபகற்பம்

பாலைவனப் பிரதேசமான அரபு தீபகற்பம் வியப்புக்குரிய ஒரு நிலையில் இருந்து வந்தது. செந்தணல் கக்கும் சூடான நிலப்பரப்புகள், உயர்ந்த மணற்குன்றுகள், அரிதாகிப் போன நீர்வளம், ஆங்காங்கு காணப்பட்ட வரண்ட முட்செடிகள் என்பன அரேபியாவை அலங்கரித்தன. வீடுகள் எனப்படும் குச்சுக் குடிசைகளில் மனிதர்கள் என்ற ஓர் உயிரினம் அங்கு வாழ்ந்தது. பெரும்பாலும் பேரீத்தம் பழமும் அழுக்கு நீருமே அவர்களது மூச்சுக்காற்றைத் தக்க வைத்தது.

யுத்தங்களும் கோத்திரச் சண்டைகளுமே அரபுத் தீபகற்பத்தில் வாழ்ந்த குடிமக்களினது சமூக ஒழுங்கின் அடிப்படையாக இருந்தன. புனித மக்கா நகரம், சிலைகளுக்கான வணக்கஸ்தலமாகக் கணிக்கப்பட்டு வந்தது. பெரும்பாலான மக்கள் வட்டித் தொழில் செய்வோராகவும் தீனார்களுக்காகவும் திர்ஹம்களுக்காகவும் ஒருவர் மற்றவரின் இரத்தத்தை உறிஞ்சுவோராகவும் காணப்பட்டனர்.

கிராமப்புற அரபிகளின் வாழ்க்கை முறை, நாடோடி வாழ்வியல்பு, குபேரர்களின் ஆதிக்கம் இவையனைத்தும் அக்குடிமக்களுக்கு கடினமான வேதனையை உருவாக்கியிருந்தன. கோத்திரத் தலைவர்கள், பிரமுகர்களின் சுரண்டல்களினால் உருவான பொருளாதார ஏற்றத்தாழ்வு நிலை, மனித வாழ்வின் பொருளடக்கத்தை முற்றாக அழித்ததோடு, ஆரோக்கியமான சமூக வாழ்வை, வேதனை

யும் கவலையும் நிறைந்த, இருள் சூழ்ந்த ஒரு சூழலுக்குத் திருப்பி விட்டிருந்தது.

புனித மக்கா நகரில் வியாபாரத்தின் மூலமாக தொழிலையும் பிரபல்யத்தையும் பெற்றிருந்த பெரும் செல்வந்தர்கள், புறம்பான வழிமுறைகளூடாக பணத்தையும் பாரிய செல்வ வளத்தையும் ஒன்று குவித்ததிருந்தனர். பலவீனமான ஏழைகளைக் கடுமையாக சுரண்டிப் பிழைத் தனர். இது உண்மையில். ஒரே சமூகத்தில் அநீதியான பல்வேறு வகுப்பு வேறுபாடுகளை ஆழப்பதிந்திருந்தது.

அரபுக் கோத்திரங்கள், அவர்கள் வாழ்ந்த அக்கால மடமையின் காரணமாக, சிலைகளையும் இயற்கையின் வெளிப் பாடுகளையும் தாம் வணங்கும் அம்சங்களாக எடுத்துக் கொண்டிருந்தனர். மேலும் புனித கஃபாவை சிலைகளுக்கான இல்லமாகவும் மாற்றினர்.[2] அக்காலத்தில் அவர்களிடையே வழக்கத்திலிருந்த எந்தவொரு மரபும், எந்தவொரு வழிபாடும், இத்துப்போன எந்தவொரு நடைமுறையும் ஒரு சமூகம் தன் மாண்மியத்தை முற்றாக சிதைத்து அழித்து விடுவதற்குப் போதுமானதாக இருந்தது.

இஸ்லாத்திற்கு முன்னர் அரபு சமூகத்தினரிடையே மனிதாபிமானமற்ற வழிகேடுகள் உருவாக்கப்பட்டிருந்ததன் பலனாக, குழப்பங்களும் ஏற்றத்தாழ்வுகளும் ஏற்பட்டன. மனித உடல்கள் அவற்றின் உணவாகவும், அச்சம், திடுக்கம் என்பன அவற்றின் அடையாளமாகவும், வாள் அவர்களின் தர்க்கமாக வும் மொழியாகவும் இருந்த பயங்கர நிலை அவர்களிடையே உருவானது.

---

*2. பார்க்க: செய்யித் கூயீ, ஷரஹ் நஹ்ஜுல் பலாகா, பா.1, ப.173. உலக மதங்களின் வரலாறு (பாரசீக மொழி), ப.479.*

அரபு சமூகத்தினர் தமது இனத்தை உயர்வாகக் கருதினர், ஏனைய மனிதர்களை விட அரபிகள் மட்டுமே சிறப்பும் அந்தஸ்தும் மிக்கவர்கள் என்று பெருமிதம் கொண்டனர். அரபிகளின் இரத்தத்திற்கும் தேசியத்திற்கும் ஏனையோரை விட ஓர் உயர் நிலை இருப்பதாக அவர்கள் நம்பினர். தற்காலத்திலுள்ள தேசியவாத மற்றும் இனவாத உணர்வுகள் பிறிதொரு நிறத்தில் ஆரம்ப கால அறியாமை யுகத்தில் மிகச் சாதாரணமாகக் காணப்பட்டது.[3] சமகால அரபிகள் எல்லோரிடமும், அதிகரித்த செல்வமும் மற்றும் பிள்ளைகளுமே சிறப்பின் அடையாளம் என்ற தவறான கருத்து ஆழப்பதிந்திருக்கிறது. இவற்றை அடிப்படையாகக் கொண்டே ஒவ்வொரு கோத்திரத்தினரும் பெருமையடித்துக் கொண்டனர்.

கொலை செய்வதையும், பிறரது இரத்தத்தை ஓட்டுவதையும் அவர்கள் வீரமும் வலிமையும் மிக்க செயல்களாகக் கருதினர். மேலும், காட்டுமிராண்டித்தனம், துரோகம், அடர்ந்தேறல், அநீதி, தற்பெருமை முதலான பண்புகளும் அவர்களிடையே மலிந்திருந்தன. அவர்களது அளவு கடந்த கோரச் செயலானது, தமது பாவமறியா பெண் குழந்தைகளை உயிருடன் புதைத்ததாகும். "அவர்களுக்கு பெண்குழந்தைகளைக் கொண்டு நன்மாராயம் கூறப்பட்டால், கோபம் ஏற்பட்ட நிலையில் அவர்களது முகங்கள் கறுத்து விடும்" (16:58) என அல்குர்ஆன் கூறுவதும் இதனைத் தான்.

அவர்கள், தமது பிற்போக்கான சிந்தனையின் பிரகாரம், பெண் குழந்தைகளை உயிருடன் புதைத்து விடுவதன் மூலமாக அக்குழந்தையின் பிறப்பினால் தமக்கேற்பட்ட அவமானம் களையப்படுவதாகவும் எதிர்காலத்தில் ஏனைய

---

*3. முஹம்மத் குதுப், 20ம் நூற்றாண்டின் அறியாமை, (பார்ஸி), ப.479.*

ாத்திரத்தினர் தம்மீது மேலாதிக்கம் செலுத்தும் இழிநிலை
ிருந்து தாமும் தமது குடும்பத்தினரும் விடுவிக்கப்
வதாகவும் அவர்கள் கருதினர். இது தொடர்பாக கருத்
ாரக்க வந்த இமாம் அலீ அலைஹிஸ்ஸலாம், நஹ்ஜுல்
ாகாவில், அரபிகளின் சமூக வாழ்க்கை பற்றி இவ்வாறு
ரிக்கின்றார்கள்;

"அரபிகளே! நீங்கள் தீய மார்க்கத்தில் இருந்தீர்கள். தீய
ழ்வு வாழ்ந்தீர்கள். வறண்ட கற்களுடனும், செவிப்புலனற்ற
ழ்க்கையுடனும் பிணைக்கப்பட்டிருந்தீர்கள். தீயவற்றை
நந்தி, மோசமானவற்றை உண்டீர்கள், உங்களது
த்தத்தை ஓட்டினீர்கள், உங்களது குடும்ப உறவைத்
ாடித்தீர்கள். சிலைகள் உங்களிடையே நட்டு வைக்கப்
டிருந்தன. பாவங்கள் உங்கள் மத்தியில் பரவியிருந்தன"[4]

இவ்வாறு அரபுத் தீபகற்ப குடிமக்கள், குழப்பம் மற்றும்
றத் தாழ்வுகளிலான பெரும் பின்னடைவுக்கு மத்தியில்
ழ்ந்து வந்தார்கள். தமது அறியாமை, மற்றும் அலட்சியத்
காரணமாக காட்டுமிராண்டித் தனத்தின் முழு வடிவம்
அவர்கள் திருப்பி விடப்பட்டிருந்தார்கள். இச்சையில்
ழ்க்கையை வீணடித்ததோடு, மூடநம்பிக்கைகளும்
டு வேதாந்தங்களும் சமூகக் குளறுபடிகளுமே அவர்க
வாழ்க்கை வழிமுறையாகப் போற்றப்பட்டது.[5]

இந்த ஒழுங்கற்ற சமூகத்தை மீளக் கட்டியெழுப்புவ
தும் சீர்த்திருத்தத்தை ஏற்படுத்துவதற்கும் மனித வாழ்க்கை
அனைத்து பகுதிகளையும் ஒருங்கிணைத்த அடிப்படைப்
சி ஒன்று அவசியமாக இருந்தது. அதேவேளை,

---

*ஹ்ஜுல் பலாஹா, திமிஷ்க் பதிப்பு, ப.66, பய்ழுல்*
*லாமின் விளக்கவுரை, 26வது குத்பா, பா.1, ப.83.*
*லைக்களஞ்சியம், தாயிரத்துல் மஆரிப், 3ம் பதிப்பு. ப.255*

இப்புரட்சிக்கு தலைமை தாங்குபவர், சுயநல நோக்கங்கள் அற்றவராகவும் ஏனையோரின் உரிமைகளை மீறாதவராகவும் தனக்கு முரண்படுவோர் மீது கடும் போக்கைக் கடைப்பிடிக் காதவராகவும் இருப்பதற்காக, மேலுலக சக்தியினால் உறுதிப்படுத்தப்பட்ட, அல்லாஹ்வின் புறத்திலிருந்து தெரிவு செய்யப்பட்ட ஒருவராக இருப்பதும் அவசியமாக இருந்தது.

அந்த தலைவர், அல்லாஹ்வுடைய வழியில் மட்டுமே செயற்படக்கூடிய தெய்வீக மனிதராகவும் சமாதானத்திற்காகப் பாடுபடுபவராகவும் மனித சமூகம் முழுவதையும் முற்போக் கான நிலைக்கு இட்டுச் செல்லபவராகவும் இருக்க வேண்டும். ஏனெனில், சந்தேகமின்றி, ஒரு தலைவர், ஆன்மீக உயிரோட் டத்திலும், உயர் ஒழுக்கப் பண்புகளிலும் ஈடுபாடற்றவராக இருந்தால், தனது ஆளுமையில் சிறந்த மனிதப் பண்பு களுக்கும் ஆற்றல்களுக்கும் இடம் இருந்திருக்காது. இத்தகைய தலைவர் எப்போதும் ஒரு சமூகத்தின் வெற்றிக்கோ, அதன் சமாதானத்திற்கோ கால்கோளாக அமையமாட்டார்.

விண்ணுலகின் மூலமாக உறுதிப்படுத்தப்பட்ட தலைவர் கள் மாத்திரமே, மனித சமூகத்தின், தனிமனித, சமூக விவகாரங்களில் உறுதியான, ஆழமானதுமான அடிப்படை மாற்றத்தை தோற்றுவிக்க முடியும்.

இனி இந்த உலகளாவிய புரட்சிக்குரிய புதிய தலைவரு டைய ஆளுமையின் பால், அவர் இவ்வுலகில் அறிமுகப் படுத்திய மாற்றங்கள் எவையென நாம் எமது பார்வையை செலுத்துவோம்.

## 2. பிறப்பும் சிறு பராயமும்

புனித மக்கா நகரம் அமைதியான இருளில் மூழ்கியிருந்தது. பால்நிலவு மாத்திரம் வழமை போன்று அந்த கறுப்பு மலைகளுக்குப் பின்னாலிருந்து உதயமாகி, நகர்ப்புறக் கட்டிடங்கள் அற்ற விசாலமான மக்கா நகர வீடுகள் மீது தன் அழகிய வெண்ணிற ஒளிக்கீற்றுகளைப் பரப்புவதற்காக, மெதுவாக வான்முகடு நோக்கி உயர்ந்து கொண்டிருந்தது.

இரவு ஆரம்பித்து, அதன் அரைப்பகுதி நேரமும் கடந்து விட்டது. பாலைநில ஹிஜாஸ் பூமியில் சாயல். மென்மையான இளந்தென்றலின் சுகமான அரவணைப்பு புத்துணர்ச்சியை ஊட்டி, மனோவமைதியை வழங்கிக் கொண்டிருந்தது. அந்த சுவையான நொடிப் பொழுதுகளில், நட்சத்திரங்கள் கூட தெளிவான ஒளியை வீசிப் பிரகாசித்து பார்ப்போரைப் பரவசத்தில் ஆழ்த்தியது.

மக்கா நகர மக்கள் அனைவரும் இனந்தெரியாத ஓர் அழகிய இன்பக் கிளுகிளுப்பைத் தம்முள் உணர்ந்தார்கள். பின்னிரவின் நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. கவர்ச்சி யான குரல் மிக்க பின்னிரவுப் பறவைகள், தமது இசை கலந்த அழகிய பாடல்களின் மூலம் உள்ளங்களை உணர்ச்சி யூட்டிக் கொண்டிருப்பது, இனிய சுவனத்தின் எழில்தோற்ற நிலையை முன்னிறுத்திக் கொண்டிருந்தது. அந்த நேரத்தில், அவை தமது விருப்பத்திற்குரிய இறைவனுடன் நேரடியான உரையாடலில் ஈடுபட்டிருப்பது போன்ற கற்பனைத் தோற்றம் மனங்களில் நிழலாடியது.

மக்காவின் வான்முகடு, தனது அன்புக்கும் விருப்பத் திற்குமுரிய ஒருவரின் இவ்வுலகுக்கான வருகையை ஆவலுடன் எதிர்பார்த்து, எச்சக்தியும் ஆதிக்கம் செலுத்தாத ஏகாந்தமான மௌனத்தில் ஆழ்ந்திருந்தது.

எல்லோரும் தத்தமது ஆழ்ந்த உறக்கத்தில் இலயித் திருந்தனர். அன்னை ஆமினா மாத்திரம் விழிப்புடன், அவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்த பேற்றுக்கான மகிழ்ச்சி கலந்த வேதனைக்குள் ஆட்பட்டிருந்தார்.

வேதனை படிப்படியாக அதிகரிக்கலாயிற்று. திடீரென அவர்கள், தமது அறையில் ஒளி பிரகாசிக்கின்ற, தூய நறுமண வாடை வீசுகின்ற, அழகும் கண்ணியமும் மிக்க சில பெண்களைக் கண்டார்கள். இதற்கு முன்னர் ஹஸரத் ஆமினா, அப்பெண்களுடன் பழகியிருக்கவில்லை; அறிந்திருக்க வுமில்லை. நன்கு அடைக்கப்பட்ட ஓர் அறைக்குள் உட்பிர வேசிப்பது இவர்களுக்கு எப்படிச் சாத்தியமாயிற்று என ஹஸரத் ஆமினா வியந்தார்கள்.[6]

---

*6. பிஹாருல் அன்வார், பா.15, ப.325*

எனினும், அவர்களது அருமைக் குழந்தை உலகிற்கு முகம் காட்டியபோது, அந்த தடுமாற்றம் ஆமினா அம்மையாருக்கு அதிகம் நீடிக்கவில்லை. குழந்தை பிறந்தது. அது ரபீஉல் அவ்வல் பதினேழாம் நாள் பின்னிரவு நேரம்[7]. தமது குழந்தையின் வரவால், சில மாத எதிர்பார்ப்புகளிலிருந்து விடுபட்ட ஆமினா அம்மையார், தமது மகிழ்ச்சி மிக்க கண் குளிர்ச்சியை அக்குழந்தையில் உணர்ந்தார்கள். ஆமினாவின் இருள் நிறைந்த இல்லத்தை ஒளிப்பிரகாசமாக்கிய அந்த செழிப்பான குழந்தையின் பிறப்பால் அனைவரும் மகிழ்ச்சியில் திளைத்தார்கள்.

அந்தக் கணங்களிலும், மரணத்தின் கொடுங்கரம் விட்டு வைக்காத தமது கணவரை அன்னை ஆமினா நினைவு கூரத் தவறவில்லை. சிரியாவிலிருந்து திரும்பி வந்து கொண்டிருக்கையில், மதீனாவுக்கு அண்மையில் வபாத்தாகி அங்கேயே நல்லடக்கம் செய்யப்பட்ட ஹஸரத் அப்துல்லாஹ், அன்னை ஆமினாவை அவரது வயிற்றுச் சுமையுடன் தனிமையில் விட்டுச் சென்றார். தமது அன்புக் குழந்தையைக் காண முடியாத அவரது நிலையையிட்டு ஆமினா மனக் கிலேசம் கொண்டார்கள்.[8]

அற்புதக் பிறப்பு

குழந்தை -முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி- பிறந்த போது, அவர்களது பிறப்புடன் இணைந்ததாக வானத்திலும் பூமியிலும் குறிப்பாக, அக்கால நாகரிகத்தின் பிறப்பிடமாகக் கருதப்பட்ட கிழக்கில் பல அற்புதங்கள் நடந்தேறின.

---

*7. மே.கு. ப.250*

*8. காமிலுத் தவாரிக், 2ம் பதிப்பு, ப.10, தபக்காத், பா.7, ப.61. மற்றும் பிஹார் பா.15, ப.125*

தற்காலத்தில விரைவான தொடர்பு சாதனங்களின் பங்களிப்பினால், பாரிய நிகழ்வுகள் பற்றிய அறிவிப்பு உடனடியாக எம்மை வந்தடைந்து விடுவது போல், நபிகளாரின் பிறப்பு, இயற்கையினூடாக மக்களுக்கு உடனுக்குடன் உணர்த்தப்பட்டது. ஏனெனில், மனித உயர்வையும், முற்போக்கின் அடித்தளத்தையும் கட்டியெழுப்புவதற்காக அக்கால அழிச்சாட்டியங்களை இல்லாமற் செய்வதற்கும், இத்துப்போன நடைமுறைகளையும் வழக்காறுகளையும் அழித்தொழிப்பதற்கும் முடியுமான நிலை இப்புதிய குழந்தைக்கு இருந்தது. இவையனைத்திற்காகவும், இருட்செறிவின் முடிவையும், ஒளிப் பிரகாசத்தின் வரவையும் அறிவிப்பது, எச்சரிக்கை அறிவிப்பாளர்களுக்கு அவசியமாக இருந்தது.

இவ்வாறான நிகழ்வுகளில் முக்கியமான ஒன்றாக, அசைக்க முடியாத பலம் பொருந்திய பேரரசாக நிலைத்து நின்று, உலகின் மொத்தப் பார்வையையும் தன்மீதும், தன் அரசாட்சி மீதும் பதிய வைத்திருந்த ரோமச் சக்கரவர்த்தி அனூஷிரவானின் மாளிகையின் பதினான்கு மாடங்கள் அன்றைய தினம் பூமியில் சரிந்தன.[9] ஆயிரம் வருடங்களாக அணையாது எரிந்து கொண்டிருந்த பாரசீகர்களின் பெரும் நெருப்பு, அன்றை தினம் திடீரென அணைந்து தூர்ந்தது.[10]

இவ்வாறு, அல்லாஹ்வுடைய அத்தாட்சிகளைப் பற்றியும், இயற்கையைப் பற்றியும் தமது ஆன்மாக்களைப் பற்றியும் சிந்திப்பதை விட்டு விட்டு குருட்டு வழிபாட்டிலும் பிடிவாதத்திலும் திளைத்திருந்த குருமாரும், சமயத் தலைவர்களும் நடைபெறும் நிகழ்வுகளையிட்டு திடுக்கமுற்றனர். வானத்திலிருந்து ஏதோ ஒரு செய்தி அறிவிக்கப்படுகின்றது என்பதையும்,

---

*9. பிஹாருல் அன்வார் பா.15, ப.258*
*10. மே.கு. பா.15, ப.258-263*

இன்றைய நாளுக்கு பாரிய ஓர் அம்சம் இருக்கின்றதென் பதையும் அவர்கள் உணர்ந்து கொண்டனர்.

பொங்கி வழிந்த ஸாவா பிரதேசத்தின் பெரும் குளம் திடீரென வரண்டு போனமை அப்பிரதேச மக்களை உலுப்பி விட்டது.[11]

**அன்னை ஹலீமா**

தமது குழந்தைகளை கிராமப் புறங்களில் வாழும் செவிலித் தாய்மாரிடம் ஒப்படைக்கும் வழக்கம் அரபிகளிடம் நீண்ட காலமாக நிலவி வந்தது. குழந்தைகள் அமைதியான சூழலில் சிறப்பாக பயிற்றுவிக்கப்பட வேண்டும் என்பதற் காகவே இந்த ஏற்பாடு.

கிராமப் புறங்களில் சுத்தமான காற்று, அமைதியான சூழல், நகர்ப்புற நெருக்கடிகள் மற்றும் இடைஞ்சல்களை விட்டும் நீங்கிய செம்மையான வாழ்க்கை முறை என்பன அமைந்திருந்தன. இவற்றுடன், அரபிகள் அல்லாதோருடன் தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்ள முடியாதிருந்தமையினால், கிராமப்புறக் குடிகளிடையே, அடிப்படையாக, அரபு மொழியில் சிறந்த மொழியாளுமையும் காணப்பட்டது.[12]

இவற்றோடு அன்னை ஆமினாவிடம் தாய்ப்பால் குறை வாக இருந்தமையாலும். நபிகளாரின் பாட்டனார் அப்துல் முத்தலிப், குழந்தைக்குப் பாலூட்டுவதற்காக, விசுவாசமுள்ள, அன்புடனும் ஒழுக்க வாஞ்சையுடனும் பராமரிக்கக் கூடிய சிறந்த செவிலித் தாயைத் தேடினார்.

---

*11.* மே.கு.
*12.* ***அஸ்ஸீரதுல் ஹலபிய்யா**, பா.1, ப.99*

வீரத்திற்கும், மொழியாளுமைக்கும் புகழ்பெற்ற பனூ ஸஅத் கோத்திரத்தைச் சேர்ந்த அன்னை ஹலீமாவை இதற்குப் பொருத்தமானவராக அவர் அடையாளங் கண்டார்.

அன்னை ஹலீமா தூய கற்பொழுக்கமுள்ள பெண்களில் ஒருவராகக் இருந்தார். அவர் சிறுவர் முஹம்மதை -ஸல்லல் லாஹு அலைஹி வஆலிஹி- கிராமப் புறத்திலிருந்த தமது வீட்டுக்கு அழைத்துச் சென்று தனது மகனைப் போல், அதை விடவும் அதிகமாக, அன்பு செலுத்தி பராமரித்து வந்தார். முதன் முதலாகப் பார்த்த நொடிகளிலிருந்து, அவரது உள்ளம் முழுவதிலும் அந்தக் குழந்தை மீதான அன்பும் நேசமும் நிரம்பியிருந்தன.

அவ்வருடத்தில், பனூஸஅத் கோத்திரத்தாருக்கு கடுமை யான பஞ்சமும், பட்டினியும் ஏற்பட்டிருந்தது. பூமி வரண்டு போயிருந்தது. மழையில்லை, பயிர்களில்லை, கால்நடைகளுக்கு உணவில்லை.

எனினும், இந்தச் சிறுவர் அந்தக் கிராமப் புறத்தை வந்தடைந்த போது, ஹலீமா நாயகியின் மனையெங்கும் செழிப்பும் மகிழ்ச்சியும் கோலோச்சத் தொடங்கின. மெலிந்து உடல் வற்றியிருந்த அவரது ஆடுகள் நன்கு கொழுத்தன. வரட்சியிலிருந்து மீண்டு, அவரது தாய்ப்பாலும் அதிகமாக சுரந்தது. அப்பிரதேசமே ஏழ்மை, இழப்பு, பஞ்சம் என்பவற்றில் இருந்து விடுபட்டதோடு, அவரும் அவரது பிள்ளைகளும் திருப்திகரமான அமைதியான மகிழ்ச்சி நிரம்பிய வாழ்க்கையை அனுபவிக்கலாயினர்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, ஏனைய குழந்தைகளைப் போன்றில்லாமல், அவர்களை விட முந்திக்

கொண்டு நடைபயின்றார், நாவாற்றல் செறிந்தவராகவும் விளங்கினார்.

பனூஸஅத் கோத்திரத்தாரிடையே, ஏற்பட்ட திடீர் செழிப்பும் வளமும் நபியின் வருகையின் மூலமாகவே ஏற்பட்டன என்பதை அனைவரும் மிக இலகுவாக அறிந்து கொண்டிருந்தனர். மேலும் இந்தக் குழந்தை விசேஷமானது என்பதையும் உணர்ந்தார்கள். ஹலீமாவின் கணவர் ஹாரிஸ் தமது மனைவியைப் பார்த்து ஒருமுறை இவ்வாறு கூறினார்; "ஹலீமா! நிச்சயமாக நீ செழிப்புமிக்க ஒரு சந்ததியிலுள்ள வரையே சுமந்து வந்திருக்கிறாய்."[13]

## நெருக்கடிகள்

சிறுவர் -முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி- தமது ஆறாம் வயதை அடைந்தார்கள். அவர்களது தாயார் ஹஸரத் ஆமினா, பனூ நஜ்ஜார் கோத்திரத்தின் தமது தாய் வழிச் சகோதரர்களை சந்தித்து, அத்தோடு தமது கணவர் அப்துல்லாஹ்வின் கப்றையும் தரிசிக்கும் நோக்குடன் நபிகளாரை அழைத்துக் கொண்டு மதீனா நகருக்குச் சென்றார்கள்.[14]

மதீனாவில் தமது சந்திப்புகளை முடித்துக் கொண்டு, பிரயாண ஏற்பாடுகளுடன் மக்காவுக்குத் திரும்பிக் கொண்டிருக்கும் வழியில், கொடிய நோயொன்று ஆமினாவுக்கு ஏற்பட்டது. அப்வா நகரில் அவர் இவ்வுலக வாழ்வை நிறைவு செய்து கொண்டார்[15] இவ்வாறாக நபி பெருமான், பெற்றோ

*13. பிஹார், பா.15, ப.331-395, இப்னு ஹிசாம், ஹி.1375 பதிப்பு, பா.1, ப.159-160, ஸீரா ஹலபிய்யா, (ஹி.1382), பா.1, ப.99.*
*14. பிஹார், பா.15, ப.402, 406.*
*15. ஸீரா இப்னு ஹிஷாம், பா.1, ப.168*

ரின் அன்பும் பராமரிப்பும் அவசியமாக இருந்த வயதில் தன் தந்தையும், தாயும் இழந்த நிலைக்குத் தள்ளப்பட்டார்கள்.

### சிறப்புகள்

பெருமான் முஹம்மதின் -ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி- பிறப்பும், அதையொட்டிய நிகழ்வுகளும் மாத்திரம் சிறப்புக்குரிய விடயங்களாக இருக்கவில்லை. நபிகளாரின் நடைமுறைப் போக்குகள், அவர்களது வயதையொத்த ஏனைய குழந்தைகளின் போக்குகளிலிருந்து முற்றிலும் தனித்துவமான வையாக அமைந்திருந்தன. இதுவே, கூடுமான வரை அவர் களை மரியாதைப்படுத்துமாறும் சங்கைப்படுத்துமாறும் ஏனை யோருக்கு ஹஸரத் அப்துல் முத்தலிப் ஆணையிடுவதற்கு காரணமாகவும் அமைந்தது.[16]

நபிகளாரின் பெரிய தந்தை ஹஸரத் அபூதாலிப், தமது சகோதரரின் புதல்வரது குழந்தைப் பருவம் பற்றி இவ்வாறு விபரிக்கின்றார்கள்; "முஹம்மதிடம் எந்தவொரு பொய்யையும், அறிவுக்கு முரணான எந்தவொரு செயலையும் நான் காணவில்லை. அவர் உரிய இடத்திலன்றி சிரிக்கவில்லை. தேவையற்ற விடயங்களைப் பேசவில்லை. கூடுதலான நேரத்தை தனிமையிலே கழித்தார்கள்"[17]

சிறுவன் முஹம்மதுக்கு -ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி- ஏழு வயதான போது, யூதர்களின் அவதானம் அவர்கள் மீது விழுந்தது. நபி, ஹராமான எதனையும் உட்கொள்ள முடியாது என்றும், ஐயத்திற்குரிய விடயங்களை யும் அவர் தவிர்ந்து கொள்வார் என்றும் அவர்கள் ஏற்கனவே வாசித்தறிந்திருந்தனர்.

---

*16. பிஹார், பா.15, ப. 366, 382, 402,*
*17. மே.கு.*

இதனைப் பரீட்சிக்க விரும்பிய அவர்கள், ஒரு கோழியைத் திருடி, அதனை அபூதாலிபின் வீட்டுக்கு அனுப்பி விட்டு, நடைபெறுவதை அவதானித்துக் கொண்டிருந்தனர். உணவின் தன்மையை உணராத அனைவரும் அதனை உட்கொண்டனர். ஆனால், நபிகளார் மாத்திரம் அதிலிருந்து தவிர்ந்து கொண்டார்கள். அடுத்த முறை, பின்னர் பணம் தருவதாகக் கூறி வாங்கிய ஒரு கோழியை அனுப்பி வைத்தனர். அது சமைக்கப்பட்ட போது இதில் எனக்குச் சந்தேகம் இருப்பதால் உண்ண முடியாது என்று தவிர்ந்து கொண்டார்கள்.

நபியவர்கள் மனித சமூகத்திற்கான இறைதூதைச் சுமப்பதற்கான பயிற்றுவிப்புக்கு உட்பட்டிருக்கும் நிலையில், அவர்களது உடலிலும் இரத்தத்திலும் ஹராம் கலக்காதிருப்ப தற்காக அதனை உட்கொள்வதிலிருந்து அல்லாஹ் அவர் களைப் பாதுகாத்தான்.

இதனடிப்படையில், இந்தக் குழந்தையிடம் ஏதோவொரு விசேஷம் உள்ளதென்பதையும், இவர் வாக்களிக்கப்பட்டவராக இருக்கக் கூடும் என்பதையும் அவர்கள் உணர்ந்தனர்.[18]

குறைஷி குலத்தின் தலைவராகவும் முக்கியஸ்தராகவும் இருந்த அப்துல் முத்தலிப் தமது ஏனைய பேரக் குழைந்தை களைப் போன்று நபிகளாருடன் நடந்து கொள்ளவில்லை. மாறாக, எப்போதும் அவர்களுக்கு உயர்ந்த இடத்தைக் கொடுத்து, மதித்து வந்தார்.

கஃபாவின் நிழலில் அப்துல் முத்தலிபுக்கென தனியான விரிப்பு விரிக்கப்பட்டிருக்கும். அந்த விரிப்பின் உயர்நிலை கருதி, அவரது புதல்வர்களும் கூட, அதனை நெருங்காது,

---

*18. மே. கு., பா.15, ப.336*

அதன் ஓரங்களில் சூழ்ந்து அமர்ந்திருப்பர். அப்துல் முத்தலிபுடைய ஆளுமையும் சமூக அந்தஸ்தும் அந்த விரிப்பை நெருங்க விடாது அனைவரையும் தடுத்து வந்தது. ஆனால், முஹம்மத் -ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி- மாத்திரம், தாம் விரும்பிய போதெல்லாம் அந்த விரிப்பை நெருங்கிச் செல்லலாம், சிலவேளை பாட்டனாரை முந்திச் சென்று அமருவார்கள்.

அவ்வாறான நேரங்களில் அவர்களது தந்தையின் சகோதரர்கள், அந்த விரிப்பை நெருங்க வேண்டாமென அவர்களைத் தடுக்க முனைவர். ஆனால், அப்துல் முத்தலிப், நபிகளாரை அழைத்து அணைத்துக் கொள்வார்கள். அங்கிருப் போரைப் பார்த்து இவ்வாறு கூறுவார்கள்; "எனது பிள்ளையை விட்டு விடுங்கள். அல்லாஹ் மீது ஆணையாக, அவருக்கு ஒரு மகத்தான விசேஷம் உண்டு."[19]

19. *மே.கு., பா.15, ப.142, இப்னு ஹிஷாம், பா.1, ப.168 1:.168*

## இளமை நிகழ்வுகள்

முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, அநாதையென்ற வலியை அனுபவித்தவர். குழந்தைப் பருவத்தை, தமது பாட்டனார் அப்துல் முத்தலிப், மற்றும் பெரிய தந்தை அபூதாலிப் ஆகியோரின் நிழலில் கழித்தார்கள். அநாதைப் பருவ சோதனைகள் சந்தேகமின்றி, அவர்களது பரிசுத்த ஆன்மாவை ஆழ்ந்த கவலையிலும், கடிய கைசேதத்திலும் ஆழ்த்தின. இவ் ஆரம்ப வருடங்கள், அவர்களது மகத்தான மனித ஆளுமையை வலுப்படுத்தும் பயிற்சிக்கு இன்றியமையாதவையாக அமைந்திருந்தன. இந்நிகழ்வுகளும், அவற்றையொட்டிய பாதிப்புகளும் பெருமானாருக்கு பொறுமை காத்தல், பொறுப்புகளைச் சுமத்தல் போன்ற சிறந்த பாடங்களை வழங்கின.

ஹஸ்ரத் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, குழந்தைப் பருவத்தைக் கடந்து, சக்தியும் திறனும் வாய்க்கப்

பெறும் கட்டிளம் பருவத்தை அடைந்தார்கள். அவர்களின் அறிவும், பக்குவமும் வளர்ச்சியுற்றன. நபியவர்கள், தாயின் அன்பையும், தந்தையின் அரவணைப்பையும் இழந்தாலும் அதற்குப் பதிலீடாக அவர்களது பெரிய தந்தை அபூதாலிபை சிறந்த பொறுப்பாளராகவும் பராமரிப்பாளராகவும் அல்லாஹ் ஏற்படுத்திக் கொடுத்தான். தமது தந்தை அப்துல் முத்தலிபின் நல்லெண்ணத்தைப் பெற்றிருந்த அபூதாலிப், முஹம்மத் ஸல்லல்லாஹுு அலைஹி வஆலிஹி அவர்களின் பராமரிப்பை பொறுப்பேற்றார்.

மிகச் சிறந்த பொறுப்பை ஏற்றுக் கொண்ட அபூதாலி பிடம், நபிகளார் மீதான அன்பு மேலும் அதிகரித்தது. தமது குடும்பத்தினரில் ஒருவராக அவரை இணைத்துக் கொண்டு, தமது வீட்டிலேயே அவர்களை வாழவும் செய்தார்கள். அபூதாலிபுக்கு, முஹம்மத் ஸல்லல்லாஹுு அலைஹி வஆலிஹி, தமது அன்புச் சகோதரனின் நினைவுச் சின்னமாகவும், தமது தந்தையின் இறுதி நல்லுபதேசமாகவும் இருக்கும் நிலையில், இது எவ்வாறு சாத்தியமற்றதாக இருக்க முடியும்?

இவ்வாறுதான், அபூதாலிப், நபிகளாரின் இரண்டாவது தந்தையாகவும், பராமரிப்பு மிக்க பெரிய தந்தையாகவும், சிறந்த போஷகராகவும் தொழிற்பட்டார்கள். இதனால், பெரிய தந்தைக்கும், அவரது சகோதரரின் மகனுக்கும் இடையே, ஒருவர் மற்றவரை பிரிந்திருக்க முடியாத நிலை தோன்றுமளவு, அன்பினாலும், பாசத்தினாலும் பலமான இணைப்பு உருவாகியது.

ஹஸ்ரத் அபூதாலிப் அவர்கள், முஹம்மத் ஸல்லல் லாஹுு அலைஹி வஆலிஹி அவர்களின் கையைப் பற்றிக் கொண்டு, உக்காஸ், மஜ்னா, துல்மஜாஸ் போன்ற பிரபல்யம் மிக்க அரபு சந்தைகளுக்கெல்லாம் சென்று சுற்றி வருவார்.

ஒரு தடவை, அபூதாலிபுக்கு வியாபார நிமித்தம் சிரியாவுக்குச் செல்ல வேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஆனால் முஹம்மதை -ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி- பிரிந்து செல்வதற்கு அவரால் முடியவில்லை. குறிப்பாக, அந்தப் பயணம் தவிர்க்க முடியாததாக ஆகிவிட்டதை உணர்ந்த அபூதாலிபுக்கு முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி மீதான அன்பும், பிரிந்திருக்க முடியாத நிலையிலான இரக்கமும் மிகைத்தன.

இறுதியில், அப்பிரயாணத்தில் அவர்களையும் தம்மோடு சேர்த்துக் கொண்டு சொன்னார்கள்; "அல்லாஹ் மீது ஆணையாக, இவரையும் என்னுடன் இணைத்துக் கொண்டே நான் புறப்படுவேன். அவர் என்னைப் பிரிந்திருக்க மாட்டார். நானும் அவரை ஒருபோதும் பிரிந்திருக்க மாட்டேன்"

அவ்வேளையில், முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி சிரியாவின் நீண்ட பாதையைக் கடந்து செல்வதற் காக பெரிய தந்தையுடன் ஒட்டகத்தில் ஏறி தமது முதலாவது சிரியாவுக்கான பயணத்தை ஆரம்பித்தார்கள்.[20]

### கிறிஸ்தவ மதகுரு புஹைறாவுடன்

ஒரு நாள், குறைஷியரின் வியாபாரக் குழு சிரியாவின் புறநகர்ப்பகுதியில் அமைந்துள்ள சிறிய கிராமமான புஸ்ராவை[21] வந்தடைந்தது. அப்போது, தனது வணக்க ஸ்தலத்திலிருந்து வெளியே தலைநீட்டிப் பார்த்த புஹைறா எனும் ஒரு கிறிஸ்தவ மதகுரு, புஸ்ராவின் பக்கமாக வந்து கொண்டிருக்கும் வியாபாரக் கூட்டத்தைக் கண்டு. கடினமான திடுக்கமும் வியப்பும் கொண்டார்.

---

*20. இப்னு ஹிஷாம் பா.1, ப.168*
*21. மே.கு., பா.1, ப.168*

வான் மேகத்தின் ஒரு பகுதி, அக்கூட்டத்தினரில் சிலருக்கு மேலால் நிழல் கொடுத்துக் கொண்டிருந்தது. அவர்கள் நடந்தால், அதுவும் அவர்களுக்கு மேலால் செல்கிறது. அவர்கள் நின்றால் அதுவும் நிற்கிறது. அவர்கள் போகும் திசையெங்கும் அதுவும் உடன் செல்கிறது.

புஹைறா அதனைக் கண்ட போது, தனது வணக்க ஸ்தலத்திலிருந்து இறங்கினார். பின் தன் பணியாள் ஒருவரை அவர்களிடத்தில் அனுப்பி இவ்வாறு அழைப்பு விடுத்தார். "குறைஷி குலத்தினரே! நான் உங்களுக்காக உணவு தயார்படுத்தி வைத்துள்ளேன். இன்றைய தினம் நீங்கள் என்னுடைய விருந்தாளிகள்."

மதகுருவின் அழைப்புக்கு அவர்கள் பதிலளிக்கும் பொருட்டு, அவரிடத்திற்கு சமுகம் தந்தனர். நபிஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வயதில் சிறியவராக இருந்ததனால், அவர்களை தமது பொருட்களிடத்தில் விட்டு விட்டு வந்தனர்.

புஹைறா, தான் எதிர்பார்த்த விதத்தில் மேகம் வராததால் அவர்களிடத்தில் கேட்டார்; "உங்களது கூட்டத்தைச் சேர்ந்தவர்களில் யாரேனும் இங்கு சமுகம் தராது இருக்கின்றார்களா?" அதற்கு அவர்கள், "எல்லோரும் வந்துவிட்டனர். வயதில் குறைந்த ஒரு சிறுவர் மாத்திரம் வரவில்லை" புஹைறா கூறினார்; "அவரையும். அழைத்து வாருங்கள்"

சிலர், அங்கிருந்து சென்று முஹம்மத் (ஸல்) அவர்களை அழைத்து வந்தனர். அவர்களைக் கண்ட புஹைறா, திடுக்கமுற்று, நபிகளாரை மிக உன்னிப்பாக கவனிக்கலானார். எல்லோரும் தமது விருந்தை முடித்துக் கொண்டு பிரிந்து செல்லும் வரை, கண்சிமிட்டாது நபிகளாரையே அவர் அவதானித்துக் கொண்டிருந்தார். அதன்பின் முஹம்மத் (ஸல்)

அவர்களை நெருங்கிய புஹைறா, நபிகளாருடன் ஒரு சம்பாஷணையை மேற்கொண்டார்.

புஹைறா; சிறுவரே! லாத், உஸ்ஸா கடவுள்கள் மீது ஆணையாகக் கேட்கின்றேன். நான் கேட்பவற்றுக்கு நீங்கள் பதில் சொல்ல வேண்டும்.

முஹம்மத் (ஸல்); லாத், உஸ்ஸாவின்[22] மீது ஆணையிட்டு என்னிடம் எதையும் கேட்க வேண்டாம். அல்லாஹ் மீது ஆணையாக, அவ்விரண்டையும் போல் எனக்கு வெறுப்பானது வேறெதுவுமில்லை.

புஹைறா ; அல்லாஹ் மீது ஆணையாகக் கேட்கின்றேன். நான் கேட்பவற்றுக்கு நீங்கள் உண்மையான பதில் கூற வேண்டும்.

முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி; உங்களுக்குத் தேவையானதைக் கேளுங்கள். நிச்சயமாக நான் எப்போதும் உண்மை பேசக்கூடியவனே.

அவர்கள் இருவரிடையேயும் நிகழ்ந்த சிறிய சம்பாஷணையின் பின், மகிழ்ச்சியுற்ற புஹைறா, ஆர்வ மேலிட்டு நபிகளாரின் கைகளிலும் பாதங்களிலும் முத்தமிட்டார். "அவர் இவர்தான், அவர் இவர்தான்" என்று கூறியவராறு நபிகளாரை உச்சி முகர்ந்தார்.

"என்ன விடயம்?" என அபூதாலிப் வினவிய போது, "இந்தச் சிறுவர் உங்களிடம் எப்படி?" என வினவினார். "இவர் என்னுடைய பிள்ளை" என அபூதாலிப் பதிலிறுத்தார்கள்.

---

*22. லாத்தும் உஸ்ஸாவும் அரபியர் வணங்கிய சிலைகள்.*

அதற்கு புஹைறா, "இவர் உங்களது மகனில்லை. இந்தச் சிறுவரது தந்தை இப்போது உயிருடன் இருக்க முடியாது" எனக் கூறினார்.

அபூதாலிப் "உண்மை கூறினீர்கள். இவர் என்னுடைய சகோதரனின் புதல்வர்" என்றார்.

புஹைறா, "உண்மை கூறினீர்கள். உங்களது சகோதர ரின் புதல்வரை உங்களது ஊருக்கு அழைத்துச் செல்லுங்கள். அவரது விடயத்தில் யூதர்களிடம் எச்சரிக்கையாக இருந்து கொள்ளுங்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக, அவர்கள் இவரைக் கண்டு, நான் அறிந்திருப்பதைப் போன்று அறிந்து கொள்வார்களானால், அவரை அழித்து விட முனைவர். நிச்சயமாக இது தான் உங்களது சகோதரரின் புதல்வரது விடயத்தில் கூறப்பட்டுள்ளது. இது மிக முக்கியத்துவம் வாய்ந்த விடயமாகும்" என்று கூறினார்.

அதைக் கேட்ட அபூதாலிப், "இவர் பிற்காலத்தில் என்ன செய்ய இருக்கின்றார். இவருக்கும் யூதர்களுக்குமான விடயம் என்ன?" என வினவினார். அதற்கு புஹைறா, "நிச்சயமாக நான் அவரது இரு கண்களுக்கிடையிலும் நபித்துவத்தின் அடையாளங்களைக் காண்கின்றேன்" எனக் கூறினார்.

அபூதாலிப், "இவற்றை எங்கிருந்து அறிந்து கொண்டீர் கள்?" என வினவிய போது, புஹைறா கூறினார்:

"அவருக்கு நிழல் கொடுத்து வரக்கூடிய மேகத்தின் மூலமாகவும், அவரது பண்புகள், வர்ணனைகளை நான் பார்த்துள்ள வேதங்களின் மூலமாகவும், அவரது ஆன்மீக வீச்சுக் கொண்ட அமைதியான சப்தத்தின் மூலமாகவும், இன்னும் பல்வேறு விடயங்கள் மூலமாகவும் நான் அது பற்றி அறிந்து வைத்துள்ளேன்."

இறுதியாக அபூதாலிப் கூறினார்; "நிச்சயமாக அல்லாஹ் பின்னாளில் அவரை கைவிட்டுவிட மாட்டான். அவரது விரோதிகளான யூதர்களிடமிருந்து அவரைப் பாதுகாப்பான்."[23]

அந்த நாளின் பிற்பகல் நேரத்தில் பிரயாணக் குழு புறப்படத் தயாரானது. நடந்த விடயம் பற்றிய ஒரு சலசலப்பு அவர்களது பேச்சுகளிடையே தென்பட்டது. எல்லோரும் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களையே பார்த்து பார்த்து தங்களுக்குள் பேசிக்கொண்டு வந்தார்கள்.

இடையனாக

ஹஸ்ரத் அபூதாலிப் குறைஷி குலத்தின் மிகப்பெரும் தலைவராகவும் முக்கியஸ்தராகவும் கணிக்கப்பட்டு வந்த போதிலும், அவரது பொருளாதாரம், அவரது பெரிய குடும்பத்தின் சுமைகளை தீர்த்து வைக்கக்கூடிய அளவுக்கு போதுமானதாக இருக்கவில்லை.

முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி தமது வாலிபப் பருவத்தை அடைந்த போது, தமது பெரிய தந்தையின் குடும்பச் சுமையை இலகுவாக்குவதற்காக தமக்கென ஒரு வேலையை தெரிவு செய்து கொள்ள விரும்பினார்கள். இப்போது, நபியவர்கள், தமது ஆன்மீக நிலைக்குப் பொருத்தமானதும் தமது விருப்பத்திற்கு உடன்படக்கூடியதுமான எந்த வேலையை தெரிவு செய்தார்கள் என்பதை நாம் பார்ப்போம்.

அல்லாஹ், முஹம்மதை -ஸலல்லல்லாஹு அலைஹி வஆலிஹி- மனித சமூகம் அனைத்துக்கும் தூதுவராக ஆக்கவிருந்தான். மக்களது அறிவையும் வாழ்வையும்

---

*23. ஸீரா இப்னு ஹிஷாம், பா.1, ப.168*

ஆக்கிரமித்த பிழையான கோட்பாடுகள் மற்றும் தவறான மரபுகள் என்பவற்றோடு மோதி, வழிகாட்டும் ஒரு தலைமைத் துவத்தின் கடிவாளத்தை அவர் எதிர்பார்த்திருந்தார். தமது மூதாதையர்களின் மார்க்கத்தைக் கண்டு அவர்களது சுவடு களைப் பின்பற்றிக் கொண்டிருந்த ஒரு பிடிவாதம் மிக்க சமூகத்தின் கடுமையான எதிர்ப்புக்கு அவர்கள் முகங் கொடுக்கவேண்டியிருந்தது.

இதனால், நகர்ப்புற நெருக்கடிகள், நகரவாசிகளின் விவாதங்கள், அவர்களது தீய நடவடிக்கைகள் மற்றும் உலகாசைகளிலான ஈடுபாடு முதலானவற்றை விட்டும் விலகி இருப்பதற்கான பயிற்சியாக, கால்நடை மேய்த்தலை தொழிலாகத் தேர்ந்தெடுத்தார்கள். மறுபுறத்தில், பாலைநிலங் களில் விதம் விதமான இயற்கையின் வெளிப்பாடுகள் பற்றிய சிந்தனைக்குரிய, பொருத்தமான சந்தர்ப்பத்தை வழங்குவது இதன் நோக்கமாகும். ஐயமின்றி, இவையனைத்திலும் நபியவர்களுக்கு எதிர்கால தயார்படுத்தலுக்கான பெரும் பயிற்சி இருந்தது.

அவ்வாறே, மக்காவைச் சேர்ந்த தமது உறவினர், மற்றோரின் மந்தைகளையும் அவர் மேய்ச்சலுக்காக கொண்டு சென்றார். அதன் மூலம் கிடைக்கும் வருமானத்தை பெரிய தந்தையிடம் கொடுத்து வந்தார்.[24]

இந்தப் பருவத்தில் அவர்களது நேர்மையும், பிறரது சொத்துகளிலான பேராசையின்மையும், ஆடுகள், அவற்றின் தோல், பால் போன்ற தமது பொறுப்பின் கீழுள்ளவற்றின் மீதான மோசடியின்மையும் மக்காவாசிகளிடையே பிரபல்ய

---

*24. மே.கு., பா.1, ப.168*

மாகியது. மக்கள், 'முஹம்மத் உண்மையாளர்' என்று அவரை அழைக்கத் தொடங்கினர். [25]

## நபிகளாரின் ஒழுக்கம்

பருவ வயதினது தாக்கத்தின் ஆரம்ப நிலையில், மனிதனிடத்தில் சக்தியும் சுயவிருப்பும் தொடங்குகின்ற போது, குழந்தையானது, தனது குழந்தைப் பருவத்தைக் கடந்து, மனித வாழ்வின் முக்கியத்துவம் வாய்ந்த மற்றொரு பரிமாணத்தை அடைகின்றது. அதுவே இளமைப் பருவமாகும்.

ஆன்மாவுக்கு அச்சுறுத்தலான இந்தப் படித்தரத்தில் ஓர் இளைஞன் பண்பாட்டுப் பிறழ்விலும், அநாச்சாரங்களிலும், பாவச் செயல்களிலும், இச்சைகளுக்கு அடிமையாவதிலும் விழுந்து விடக்கூடும்.

இத்தருணத்தில், ஒரு கண்காணிப்பாளரோ, பொறுப்பாளரோ இருந்து, அந்த இளைஞனின் கைகளைப் பற்றி, இழிவான செயல்களில் அவன் வீழ்ந்து விடாது தடுக்கவில்லையென்றால், அல்லது, அந்த இளைஞனே சுயகட்டுப்பாட்டின் மூலமாக இத்தகைய வீண் விளையாட்டுகளிலும், அநாச்சார உலகிலிருந்தும் தவிர்ந்து கொள்வதற்கான பக்குவம் பெறவில்லையென்றால், நிச்சயமாக அந்த இளைஞன், ஆரோக்கிய வாழ்வின் நிறத்தைக் கூட காணமுடியாதவாறு மிக மோசமான பின்னடைவுக்கு உட்பட்டுவிடுவான்.

ஹஸ்ரத் –முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி- அவர்களோ, வீண் விளையாட்டுகளையும் களியாட்டங்களையும் தம் பிரத்தியேக அடையாளமாகவும், இழிவான பண்பாடுகளையும் பாவச்செயல்களையும் தம்

---

25. *மே.கு. ப.1, பா.168*

கலாசாரமாகவும் கொண்டு, பாலியல் வேட்கையிலும் அதன் அநாச்சாரங்களிலும் மூழ்கியிருந்த ஒரு பிறழ்வுக்குட்பட்ட சமூகச் சூழலில் வாழ்ந்தார்கள். இளைஞர்கள் மட்டுமன்றி, நடுத்தர வயதினர், வயோதிபர்கள் கூட, கொடிகள் மூலம் அடையாளப்படுத்தப்பட்ட விலை மாதுகளின் வீடுகளுக்கு செல்லும் நிலையிருந்தது.

இந்த ஒழுக்க வீழ்ச்சியின் விளைவான இழிவும், பின்னடைவும் அந்த மக்களை, தமது இச்சைகளுக்கு அடிமையாகும் நிலைக்குத் தள்ளியது.

தீமையும் அநாச்சாரமும் நிறைந்த இது போன்ற ஒரு சமூகத்தின் மத்தியில் தமது வாலிபப் பருவத்தை அடைந்து கொண்ட முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, தமது இருபத்தைந்தாவது வயது வரை திருமண பந்தத்தில் இணையாது இருந்தார், சூழலில் நடைபெற்ற இவ் அநாச்சாரங்கள் எவையும் அவர்களில் எவ்வித தாக்கமும் செலுத்தவில்லை. எவ்வித பாவச்செயலையும் அவர்கள் சிறுவராக இருந்த காலத்திலும் கூட மேற்கொண்டிருக்க வில்லை.

மாறாக, அனைவரும் -அன்பர்களும் பகைவர்களும்- நபியவர்கள் ஒழுக்கம், சிறப்பு, பூரணத்துவம் என்பவற்றில் முன்மாதிரியாக இருந்ததாக சான்றளித்தனர்.

இந்த விடயம், நபிகளார் அன்னை கதீஜாவை திருமணம் செய்து கொண்ட நிகழ்வையொட்டி பாடப்பட்ட கவிதைகளில் முழுமையான கண்ணியத்துடன் வெளிப்படுகின்றது. இக்கவிதையில் நபிகளாரின் பண்புகளினதும் பரிபூரணத்துவத்தினதும் ஒரு பகுதி குறிப்பிடப்படுகின்றது.

அந்தக் கவிஞர் கூறுவதை கேட்போம்,

கதீஜாவோ! மனிதர்கள் மத்தியில்
உயரந்தவரைப் பெற்றுக் கொண்டீர்.
மனு.ஜின் வர்க்கத்தினரில் பெருமைக்குரியவரான
முஹம்மதை குறிப்பிடுகின்றேன்;
ஏனைய காலங்களில் பெண்கள் பெற்றெடுத்தவர்கள்
எவரிலும் அவருக்கு இணையில்லை.
அவருக்கு சங்கையும் உயர்வும் நாணமும் உண்டு.[26]

மற்றொரு கவிஞர் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களது சிறப்புகளின் முன்னால் பயபக்தியுடன் நிற்கின்றார்.

படைப்புகள் அனைத்துடனும்
நபிகளார் நிறுக்கப்பட்டால் அவரே கனத்துவிடுவார்.
அவரது சிறப்புகள் வெளிப்படையானவை
குறைஷியருக்கு இது தெளிவான விடயமாகும்.[27]

---

*26. பிஹாருல் அன்வார், பா.16, ப.74*
*27. மே.கு., பா.15, ப.75*

# 4. திருமணம்

வாலிபம் என்பது கட்டிளம் பருவமாகும். அது ஒவ்வொரு தனிநபரிடமும் உணர்வு ரீதியான வெளிப்பாடு களையும், பக்குவத்தையும் திறந்து விடுகின்ற பருவமாகும். ஓர் இளைஞனோ, யுவதியோ இந்த வாழ்வுப் படித்தரத்தை அடைந்து கொள்கின்ற போது, எதிர்ப்பாலார் மீதான தேவையை ஆழமாகவே உணர்கின்றனர். இந்த அத்தியவசியத் தேவை நிவர்த்தி செய்து வைக்கப்படாது, திருமண பந்தம் பிரச்சினைக்குள்ளாக்கப் படுமென்றால், இந்த உணர்வானது, அவ்விரு பாலாரது ஆரோக்கிய வாழ்வை நிர்மூலமாக்கி விடும், அமைதியான சுகவாழ்வின் இன்பத்தையும் அவர்களை விட்டுத் தடுத்து விடும்.

இஸ்லாம் இந்த மனிதத் தேவை முறையாக நிவர்த்தி செய்யப்படுவதை இன்றியமையாததெனக் காண்கின்றது. அதனால், சமூகத்தின் மத்தியில் பாலியல் சீர்கேடுகள் தலைதூக்காத வகையில், ஒழுங்குபடுத்தப்பட்ட சரியான அமைப்பில் அதற்குத் தீர்வு காண விழைகின்றது.

இதற்காக, இஸ்லாம் வாலிபப் பருவத்தில் திருமணம் செய்வதைப் பரிந்துரைக்கின்றது. அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்ளுமாறும், குடும்பத்தின் கஷ்டங்கள், வறுமை பற்றி அச்சமுறாதிருக்குமாறும் அது அழைப்பு விடுக்கின்றது.

*"உங்களில் எவருக்கும் வாழ்க்கைத் துணையில்லா விட்டால், அவர்களுக்குத் திருமணம் செய்து வையுங்கள். உங்களது அடிமைகளில் நல்லோர்களுக்கும் திருமணம் செய்து வையுங்கள். அவர்கள் ஏழைகளாக இருந்தால், அல்லாஹ், தன்னுடைய அருளைக் கொண்டு அவர்களை செல்வந்தர் களாக ஆக்கி வைப்பான். அல்லாஹ் விசாலமானவனும் நன்கறிந்தோனுமாவான்."* (அல் குர்ஆன் 4:31-32)

எனினும், சில தனிநபர்களுக்கு திருமணத்திற்கான பூர்வாங்க ஏற்பாடுகளை ஒழுங்கு செய்து கொள்வதில் பிரச்சினைகள் ஏற்படும், இது போன்ற சந்தர்ப்பங்களில், அதற்கான வாய்ப்புத் தோன்றும் வரைக்கும் திருமணத்திற்கு அத்தியாவசியமான மற்றும் பயன்பாடான உபகரணங்களை ஒழுங்கு செய்வதற்கான பிரயத்தனங்களை மேற்கொள்வ தோடு தமது இறையச்சத்தின் மீது சாய்ந்து, கற்பொழுக் கத்தின் மீது உறுதி மிக்கவர்களாக இருப்பது அவசியமே.

ஹஸ்ரத் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, தமது இருபத்தைந்தாம் வயது வரையும்[28] திருமணத்தை முன்னெடுக்க இயலாத சிரமமான நிலையிலேயே வாழ்ந்து வந்தார்கள். இதனால், திருமண வாழ்க்கைக்கான அத்தியவசி யப் பொருட்களையும், ஒழுங்குகளையும் பெற்றுக் கொள்வ தற்கான சந்தர்ப்பத்தை எதிர்பார்த்து பொறுமைகாத்த வண்ணம் இருந்தார்கள்.[29]

## அன்னையின் யோசனை

ஹஸரத் கதீஜா பொருள் வளம் மிக்க, சிறப்பும் அந்தஸ்தும் கொண்ட ஒரு பெண். சில வியாபாரிகளை

---

*28. பிஹார், பா.16, ப.3, யாகூபியின் தாரீக், பா.பா.2, ப.15*
*29. அஃயானுஸ் ஷீஆ, பா.2, ப.8, ஹலபிய்யா, பா.1, ப.152.*

வேலைக்கமர்த்தி, அவர்கள் மூலமாக தமது பொருளா தாரத்தை வர்த்தகத்தில் ஈடுபடுத்தி பொருளீட்டி வந்தார்கள்.

நகர வாசிகள், தமது அமர்வுகள், பேச்சுகளில் பிரஸ்தாபித்து வந்த நபிகளாரின் வாய்மை, நேர்மை, உயர் ஒழுக்கம் பற்றி அன்னை கதீஜாவும் கேள்வியுற்றார். நபிகளாரிடம் ஒருவரை அனுப்பி, தமது பணியாளான மைஸராவை துணைக்கு அழைத்துக் கொண்டு, தமது பண்டங்களை சிரியாவுக்கு எடுத்துச் சென்று, வர்த்தக நடவடிக்கையில் ஈடுபடுத்த வருமாறும், ஏனையோரை விட அதிக கொடுப்பனவு வழங்குவதாகவும் அழைப்பு விடுத்தார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களும், வயோதிபத்தை அடைந்து, குறைந்த செல்வமும், அதிகரித்த குடும்பமுமாக மிகுந்த சிரமத்துடன் வாழ்ந்து கொண்டிருந்த தமது அன்புக்குரிய பெரிய தந்தை அபூதாலிபிற்கு இதன் மூலம் உதவ முடியும் என்ற நோக்கின் அடிப்படையில் அந்த அழைப்பை ஏற்றுக் கொண்டார்கள்.[30]

யார் அந்த கதீஜா?

அவர், குவைலிதின் மகள் கதீஜா. மிகவும் பிரசித்தியும் செல்வாக்கும் பெற்றவர், நற்குணப் பெட்டகம். மக்கா நகர செல்வந்தர்களில் அதிக தரும சிந்தை கொண்டவர். அவர் நாற்பது வயதை அடைந்து விட்ட நிலையிலும், அவரது சிறப்பு, குலப்பெருமை, பொருளாதார வளம் என்பவற்றைக் குறி வைத்து, குறைஷி வம்ச பிரமுகர்கள் பலர், அவரை மணந்து கொள்ள விருப்பம் தெரிவித்தனர்.

---

*30. இப்னு ஹிஷாம், பா.1, ப.188, பிஹார், பா.16, ப.22 1∴188*

ஆனாலும், அவர்கள் அனைவரும் தனது பொருளாதாரத்தின் மீது கொண்ட ஆர்வத்தின் காரணமாகவே தன்னை முன்னோக்குகின்றனர் என்பதை உணர்ந்து கொண்டதனாலும், தனக்கு பொருத்தமானவர்களாக அவர்களில் எவரையும் அடையாளங்கண்டு கொள்ள முடியாது போனதனாலும் கதீஜா நாயகி, அந்தக் குறைஷியர் அனைவரது அழைப்பையும் நிராகரித்தார்கள்.[31]

### சிரியாவுக்குப் பயணம்

குறைஷியரின் வர்த்தகக் குழு சிரியா பயணத்துக்கான ஏற்பாடுகளை செய்து கொண்டிருந்த வேளையில், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களும் இறுதியாக தமது பயணத்துக்கான ஏற்பாடுகளை நிறைவு செய்தார்கள். அன்னை கதீஜா, தமது பணியாளான மைஸராவை அழைத்து, முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களுடன் எப்போதும் உடனிருக்குமாறும், அவர்களது தேவைகளை அறிந்து பணிவிடை செய்யுமாறும் பணித்தார்கள்.

இந்தப் பயணத்தின் அனைத்து விளக்கங்களையும் இச்சிறு நூலில் நம்மால் கூற முடியாது. எனினும், சுருக்கமாகக் கூறுமிடத்து, இந்தப் பயணமானது, பல வழிகளிலும் முழுமையான நன்மையும் செழிப்பும் மிக்கதாக அமைந்திருந்தது எனலாம்.

முதலாவதாக, முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களுக்கும், கதீஜா நாயகியாருக்கும் பாரிய இலாபத்தை இப்பயணம் ஈட்டிக் கொடுத்தது. இரண்டாவதாக, குறைஷியரின் பிரயாணக் குழு மத்தியில் நபிகளாரின் முழுமையான ஆளுமைப் பண்புகளை அது அடையாளப்படுத்

*31. பிஹார், பா.16, ப.12, தபரியின் தாரீக், பா.3. ப.1127*

தியது. இவற்றுடன், முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களிடத்தில் அவதானித்த அடையாளங்களின் நிமித்தம், மிகப்பாரிய ஒரு மகத்துவம் அவர்களுக்கு இருப்பதாகக் கூறிய மற்றுமொரு கிறிஸ்தவத் துறவியை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி சந்தித்தார்கள். [32]

இறுதியாக, இந்தப் பயணமானது, நபிகளாருக்கும் கதீஜா நாயகியாருக்குமிடையில் புனிதமான திருமண இணைப்பு ஏற்படுவதற்கான பூர்வாங்க நிகழ்வாகவும் அமைந்தது.

மக்காவை வந்தடைந்ததும், மைஸரா, கதீஜா நாயகியாரிடம் சென்று, தாம் அடைந்து கொண்ட அளவற்ற இலாபத்தையும், தாம் அனுபவித்த செழிப்பு நிலையையும் பற்றி விபரித்ததோடு, முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களைப் பற்றியும், அவர்களது கரங்களில் தான் கண்டு கொண்ட அற்புதங்களையும், அவற்றுடன் இணைந்ததாக இருந்த வியத்தக்க அம்சங்களையும், கிறிஸ்தவப் பாதிரியாரிடமிருந்து தான் செவியுற்றவற்றையும் எடுத்துக் கூறினார். [33]

ஏற்கனவே நபிகளாரின் சிறப்புகள், உயர் பண்புகள் பற்றியும், யூத அறிஞர்கள் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி தொடர்பில் கூறிய கருத்துகளின் படி, அவர்களது உயர்நிலை, மற்றும் குறைஷி குலப் பெண்களில் சிறந்த ஒருவரையே அவர்கள் திருமணம் செய்வார்கள் என்ற உண்மை பற்றியும் அன்னை அறிந்து வைத்திருந்தார்கள்.

மைஸராவிடமிருந்து இவையனைத்தையும் செவிமடுத்த போது, இவ் உண்மைகள் அனைத்தும் இணைந்து, அவர்களது

---

*32. இந்த மதகுரு சிறுவயதில் சந்தித்தவர் அன்று.*
*33. அல் காமில், இப்னு அதீர், பா.2,ப.39. பெய்ரூத், ஹி.1385*

உள்ளத்தில் நபிகளார் மீதான வலுவான அன்புக்கு அடித்தளமிட்டன. அதன் விளைவாக, தான் எதிர்பார்த்துத் தேடிய, தனக்குப் பொருத்தமான கணவராக தாம் இனங் கண்டு கொண்ட முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களைத் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்ற உள்ளார்வம் அவர்களுக் கேற்பட்டது.[34]

இவ் ஆர்வம் மேலும் அதிகரித்த போது, அவர்கள், முந்திய வேதங்களை பின்பற்றக்கூடிய கிறிஸ்தவராக இருந்த தமது உறவினரான வரகா இப்னு நௌபலிடம் சென்று இது பற்றி எடுத்துரைத்தார்கள். கிறிஸ்தவப் பாதிரியார் கூறியதாக மைஸரா கூறிய விடயங்களையும், நபிகளாருடன் தொடர்பான இன்னும் பல அம்சங்களையும் எடுத்துக் கூறினார்கள். அனைத்தையும் கேட்ட வரகா இப்னு நௌபல் கூறினார்;

"கதீஜாவே இவையனைத்தும் உண்மையென்றால், அவர்தான் இந்த சமூகத்தின் நபியான முஹம்மத் ஸல்லல் லாஹு அலைஹி வஆலிஹி ஆவார்."[35]

எனினும், நபிகளாரை திருமணம் செய்வதற்கான இந்த உள்ளார்வத்தை எவ்வாறு சேர்ப்பிப்பது? ஏனெனில், குறைஷிப் பெண்கள் மத்தியில் கௌரவமான அந்தஸ்தைக் கொண்டிருந்த நிலையில், இவ்விடயத்தை வெளிப்படையாகச் சொல்வது அவ்வளவு இலகுவாக இருக்கவில்லை.

திருமணம்

அன்னை கதீஜா நாயகியவர்கள், தமது நெருங்கிய தோழியும், இரகசியங்களை அறிந்தவருமான நபீஸா பிந்து

*34. பிஹார், பா.16, ப.20-21*
*35. மே.கு.*

மனிய்யா என்ற பெண்ணை முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களிடம் அனுப்பி, திருமணம் தொடர்பான அவர்களது கருத்தையும் நிலையையும் அறிந்து வருமாறு பணித்தார்கள். நபிகளாரிடம் வந்த நபீஸா, இவ்வாறு தன் உரையாடலை மேற்கொண்டார்:

நபீஸா: தாங்கள் திருமணம் செய்து கொள்ளலாமே?

முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி: திருமணத்திற்கான ஆயத்தங்கள் எதுவும் என்னிடத்திலில்லை.

நபீஸா: அவ்வாறானால், அழகும், செல்வமும், சிறப்பும், பொருத்தமும் உள்ள ஒருவரிடத்திலிருந்து தங்களுக்கு அழைப்பு விடுக்கப்பட்டால் அதனை ஏற்றுக் கொள்வீர்களா?

முஹம்மத் (ஸல்): அத்தகைய பெண் யார்?

நபீஸா ; அவர்தான் கதீஜா.

முஹம்மத் (ஸல்): அவருடன் நான் எப்படி? அவர் குறைஷிப் பிரமுகர்கள் பலரையும் நிராகரித்தவராயிற்றே?

நபீஸா: அது என் பொறுப்பு. அதனை நான் மேற்கொள்கின்றேன்.[36]

கதீஜா நாயகியவர்கள் தம்மை திருமண செய்ய விருப்பம் கொண்டுள்ள விடயத்தை நபியவர்கள் தமது பெரிய தந்தையர்களிடம் எடுத்துரைத்தார்கள். அது கேட்டு மகிழ்ச்சியும் திருப்தியும் அடைந்த அவர்கள், அதற்கான ஏற்பாடுகளில் ஆர்வத்துடன் ஈடுபட்டனர். கதீஜாவின் இல்லத்திற்குச் சென்று, ஏற்பாடுகளைச் செய்து திருமண விழாவையும் நடாத்தி முடித்தனர்.[37]

---

*36. அஸ்ஸீரதுல் ஹலபிய்யா, பா.1, ப.152, அஃயான், பா.2, ப.8*
*37. பிஹார், பா.16, ப. 56-73*

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, தமது மனைவி கதீஜாவுடன் வாழ்ந்த இருபத்தைந்து வருடங்களும் அவர்களது திருமண வாழ்வில் மிகச் சிறந்த நாட்களாக அமைந்திருந்தன.[38]

அன்னை கதீஜா அவர்கள், நபிகளாருக்கு சிறந்த வாழ்க்கைத் துணைவியாக மட்டும் இருக்கவில்லை. அதற்கும் மேலாக, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களது வாழ்க்கையில் நபித்துவத்திற்கு முன்னரும் பின்னரும் அவர்களுக்கு சிறந்த உதவியாளராகவும், ஒத்தாசையாளராகவும் இருந்தார்கள். நபிகளாரின் அழைப்பை ஏற்று முதன் முதலில் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட பெண்மணியும் அவர்களாவார். தமக்குச் சொந்தமான அனைத்து பொருளாதார வளங்களையும் இஸ்லாத்தின் வழியில் செலவிடுவதற்காக நபிகளாரிடம் ஒப்படைத்தார்கள்.[39]

இத்திருமணத்தினூடாக, அல்லாஹ் ஆறு குழந்தைகளை நபிகளாருக்கு அருளினான். அவர்களில் ஆண் குழந்தைகளான காசிம் மற்றும் தாஹிர் ஆகியோர் நபிகளாருக்கு நபித்துவம் கிடைக்குமுன்னரேயே மக்காவில் காலமானார்கள்.

ஏனைய நால்வரும் பெண்குழந்தைகளாகும். அவர்கள் முறையே ருகையா, ஸைனப், உம்முகுல்ஸூம், மற்றும் அவர்களில் மிகச் சிறந்தவரான பாத்திமா ஸலாமுல்லாஹி அலைஹா ஆகியோர்.[40]

கதீஜா நாயகியாரின் பண்பும், உதவியும் நபிகளாரின் உள்ளத்தில் மிகவும் உயர்ந்த இடத்தைப் பெற்றிருந்தன.

---

*38. மே.கு., பா.16, ப.7,10,11, அஃலாம், ப.146*
*39. மே.கு., பா.16, ப.10-71, அஃயான், பா.2, ப.8*
*40. மே.கு., பா.16, ப.3, அஃலாம், ப.146, அஃயான், பா.2, ப.18*

ஜீவிதத்தில் மட்டுமன்றி, மரணத்திற்குப் பின்னரும் கூட அவர்களை நபிகளார் ஆழமாக நேசித்து வந்தார்கள். கதீஜா நாயகியாரை நினைவு கூரப்பட்டால், நபிகளாரிடத்தில் கவலையின் அடையாளங்கள் வெளிப்படும். அவர்களது பிரிவையிட்டு சில நேரங்களில் அழக்கூடியவர்களாகவும் நபியவர்கள் இருந்தார்கள்.[41]

கதீஜா நாயகியாருக்கு நாற்பது வயதாக இருக்கும் நிலையில் அவர்களை நபிகளார் திருமணம் செய்து கொண்டார்கள். நுபுவ்வத்தின் பத்தாம் ஆண்டில், தமது அறுபத்தைந்தாம் வயதில் கதீஜா நாயகியார் இறையடி சேர்ந்தார்கள்.[42] அவர்கள் உயிரோடு இருக்கும் வரை, வேறு யாரையும் நபியவர்கள் மணந்து கொள்ளவில்லை.

அன்னை கதீஜா ஸலாமுல்லாஹி அலைஹா, விசுவாசமுள்ள நம்பிக்கைக்குரிய தூய மனைவியருக்கு சிறந்த முன்மாதிரியாக இருந்தார்கள். அல்லாஹ், அவர்களுக்கு அருள் புரிவானாக.

---

*41. மே.கு., பா.16, ப.8, 13.*
*42. மே.கு.*

# 5. நபிகளாரின் மனைவியர்

அபாண்டம்

கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில், காழ்ப்புணர்ச்சி கொண்ட மேலைத்தேய எழுத்தாளர்கள் இஸ்லாத்தை நோக்கி கடுமையான தாக்குதல் தொடுக்க ஆரம்பித்தார்கள். இவை, மனிதர்களை வழிகெடுப்பதற்காகவும், இஸ்லாத்தை விட்டும், அவர்களை திசைதிருப்பி விடுவதற் காகவும், மேற்கொள்ளப்பட்டன. பொதுவாக இஸ்லாத்தின் குறிக்கோள்கள், உள்ளடக்கங்கள், மற்றும் வரலாறு என்பவற்றைத் திரிபுபடுத்தக் கூடிய, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களது யதார்த்தத் தோற்றத்தை மலினப்படுத்தக்கூடிய அவதூறும் அபாண்டங்களும் நிரப்பப் பட்ட நூற்களினூடாக இவை நிறைவேற்றப்பட்டன.[43]

இத்தகைய எழுத்தாளர்கள் தமது வாதத்தை ஊர்ஜிதப் படுத்துவதற்கான முதலாவது சான்றாகக் கொண்டிருந்தது, சில காழ்ப்புணர்வு மிக்க புத்தகங்களாகும்.

---

*43. வோல்டேயரின் நோக்கில் இஸ்லாம், 2ம் பதிப்பு, ப.5*

இவ்வடிப்படையில், பதினைந்தாம் நூற்றாண்டில் வெளியிடப் பட்ட ஜே.ஏ: மோர் (John Andre Moure) என்பவர் எழுதிய "முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களது மார்க்கத்துக்கான எதிர்க்கருத்துகள்" என்ற நூலை இங்கு நாம் சுட்டிக்காட்ட முடியும்.

பின்வந்த அதிகமான கிறிஸ்தவ எழுத்தாளர்கள், ஒருபுறம், அரபு மொழிப்புலமையற்றவர்களாக இருந்ததனாலும், மறுபுறம் அவர்களது நூல்நிலையங்களில் இஸ்லாமிய அடிப்படை நூற்கள் இல்லாதிருந்தத்னாலும் இஸ்லாத்திற்கெதிரான தமது நூற்களில் அதிகமான கருத்துகளை எடுத்தாளக் கூடியளவு முக்கிய ஆதாரநூலாக இந்நூல் கணிக்கப்பட்டது.[44]

விபச்சார குற்றத்தினை சில நபிமார்கள் மீது இணைத்துக் காட்டியுள்ள புனித நூற்களைக் கொண்ட இவர்களே.[45] இறைத்தூதர் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களைப் பற்றியும் தவறான முறையில் "நிச்சயமாக முஹம்மத் காம வேட்கை நிறைந்த, இச்சைக்கு அடிமையான ஒரு மனிதராக இருந்தார்" என்றும், தன்னைப் பின்பற்றுவோரை ஒரே நேரத்தில் நான்கு பெண்களுக்கு மேல் மணம் புரிந்து கொள்ள வேண்டாமென்று கூறிவிட்டு, தான் மாத்திரம் அதிகமான திருமணங்களை செய்திருந்தார் என்றும் இழுக்காக எழுத முனைகின்றனர்.[46]

தமது உண்மைக்குப் புறம்பான பொய்ப் பிரசாரங்கள் மூலம், இஸ்லாத்தைப் பற்றி எதுவும் அறியாத நிலையில் வாசகரது உள்ளத்தில் இஸ்லாத்தின் தூதுவரின் தோற்றத்தை

---

*44. மே.கு., ப.6*
*45. வேதாகமம், சாமுவேல் 2:2*
*46. ஹைக்கல், முஹம்மதின் வாழ்வு, ப.315*

அசிங்கப்படுத்திக் காண்பிக்க முனைகின்றனர். இத்தகு செயல் மூலம், இஸ்லாத்திற்கும் அதன் துரித வளர்ச்சிக்கும் அதன் விரிவான பரவலுக்கும் இடையில் இடைவெளியை ஏற்படுத்த விழைகின்றனர். ஆயினும், இம்முயற்சியானது மிக இழிவான தோல்வியை அடைந்துவிட்டது.

காலம் நீடிக்கவில்லை. வீண்பிடிவாதத்தை விட்டும் தூரமான அறிவுபூர்வமான ஆய்வுகளை மேற்கொள்ளக்கூடிய நடுநிலையான பல கிறிஸ்தவ அறிஞர்களும் எழுத்தாளர்களும் தோன்றி, தமது அடையாளங்களையும் வழிமுறைகளையும் சீரமைத்து, இஸ்லாத்தின் தூதுவர் செல்நெறி பற்றி சரியான ஆய்வை மேற்கொள்ளவும், நபிகளாரின் புனிதத்துவத்தைப் பாதுகாக்கவும் முன்வந்தனர், தமது சமூகத்தின் பிடிவாதக் குணம் கொண்ட எழுத்தாளர்களினால், அல்குர்ஆனுக்கும் நபி அவர்களுக்கும் எடுத்துரைக்கப்பட்ட அநீதியான எழுத்துகளுக் காக பெருந்தன்மையுடன் மன்னிப்பும் கேட்டுக் கொள்ளவும் விரும்பினர்.

வரலாற்றின் தீர்ப்பு

நடுநிலையான முஸ்லிம், கிறிஸ்தவ வரலாற்றாசிரியர்கள், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களது பலதார மணம் என்பது பாலியல் வேட்கையை அடிப்படையாகக் கொண்டதல்ல என்பதை உறுதிப்படுத்தியுள்ளார்கள். நபியவர் கள், தன் வயதுக்கு இணையான அழகிய ஓர் யுவதியை மணந்து கொள்ள பிரயாசையுறும் கட்டான இளமைப் பருவத்தின் இருபத்தைந்து வயதை எட்டியிருந்த நிலையில், நாற்பது வயதை பூர்த்தி செய்திருந்த குவைலிதின் மகள் கதீஜாவை மணந்து கொண்டவர். இத்தகைய ஒரு நபியின் விடயத்தில் முறையற்ற பாலியல் வேட்கையெனக் குற்றம் காண்பது எவ்வாறு சாத்தியமாக முடியும்?

அதுமட்டுமன்றி, நபி (ஸல்) அவர்கள் கதீஜா பிராட்டியாருடன் எவ்வித முரண்பாடுமற்று, மிக்க மகிழ்ச்சியுடனும் முழுமையான ஆனந்தத்துடனும் இருபத்தைந்து வருடங்கள் வாழ்ந்திருந்தார்கள்.[47] தம்மை மணந்து கொள்வதை பெருமையாகவும், கௌரவமாகவும் கருதி அதிகமான மக்கா நகர மங்கையரும், அழகிய யுவதிகளும் முன்னின்ற போதும், கதீஜா நாயகியுடனான அந்த வாழ்க்கைக் காலம் முழுவதிலும், வேறு எந்தப் பெண்ணையும் மணந்து கொள்ளச் சம்மதிக்கவில்லை.

இதன்படி, முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, பாலியல் வேட்கை நிறைந்த ஒரு சாதாரண மனிதராக இருந்திருப்பின், அந்த நீண்ட காலம் முழுவதும், தமது வயதையொத்த அழகிய இளம் யுவதிகளை மணந்து கொள்வதை விட்டும் அவர்களை எதுவும் தடை செய்திருக்க மாட்டாது.

இப்படிக் கேட்டால்.....

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, செவ்விய இளமைப் பருவ நிலையில் இருக்கும் போது, நீண்ட ஆயுள் கொண்ட ஓர் இளம் யுவதியை மணந்து கொள்ளாது, தனது வாழ்க்கையில் வாலிப வயதைக் கடந்து, நாற்பதை அடைந்திருந்த ஒரு பெண்ணை மணந்து கொள்ள முன்வந்தமைக்கான காரணம் என்ன?

நபியவர்களது பிந்திய பத்து வருடங்களின் போது, ஒருபுறம் முதுமையும், மறுபுறம் இஸ்லாமிய சாம்ராஜ்யத்தின் தொடரான உள்ளக-வெளிப்புற பிரச்சினைகளும், பெண்களைப் பற்றிய சிந்தனையில் இலயிப்பதற்கு அவர்களுக்கு சந்தர்ப்பம் வழங்கியிருக்க முடியாது. அவ்வாறிருந்த போதும்,

---

*47. முரூஜ் அல் தஹப், பா.2, ப.287*

நபியவர்கள், குறிப்பிட்ட அக்காலப்பகுதியில், பல பெண்களை மணந்து கொண்டார்களெனின், அதற்கான காரணம் என்ன?

இது, விதவைப் பெண்களைப் பாதுகாப்பதற்கும், அநாதைகளை ஆதரிப்பதற்குமாக, அவர்கள் சுயமாக மேற் கொண்ட மிகப் பெரும் பயிற்சியாக இருக்க முடியாதா? அல்லது, ஒவ்வொரு பெண்ணும் தூய ஒழுக்கமும் நற்பண்பும், தனித்துவமான இரசனையும் கொண்டுள்ள நிலையில், இன்ப உணர்வுடனும், இச்சை, சுவை மீதான வேட்கையுடனும் பல பெண்களோடு வாழ்க்கை நடாத்துவதென்பது சாத்தியமா?

இவை, அவதூறு சொல்லக்கூடிய அந்த எழுத்தாளர் களிடம் நாம் முன்வைக்கும் வினாக்கள். ஆனாலும், அவர்களி டம் பதிலன்றி தடுமாற்றமே எஞ்சுகின்றது. நிச்சயமாக முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள், எப்போதுமே காம வேட்கை மிகைத்த ஒருவராக இருக்க வில்லை என்பதையும் பாலியல் இச்சைகளுக்கு அடிமைப்பட் டிருக்கவில்லை என்பதையும் அவர்கள் நன்கறிந்து கொள்ள வேண்டும். நபிகளார் மீது இத்தகைய அவதூறுகளைக் கூறுவ தெல்லாம், இஸ்லாத்தின் மீது கொண்ட காழ்ப்புணர்ச்சி யினாலும், விரோத மனப்பாங்கினாலுமேயன்றி வேறில்லை.

இறுதியாக, நடுநிலையான கிழக்கத்திய அறிஞரான ஜோன் டெவன்போர்ட் கூறுவதை இங்கு முன்வைக்கின் றோம். "ஒன்றுக்கு மேற்பட்ட பெண்களை மணந்து கொள்வது மிகச் சாதாரண விடயமாகக் கருதப்பட்ட ஒரு சூழலில், இருபத்தைந்து வருடங்களாக ஒரே பெண்ணைப் போதுமாக் கிக் கொண்டு வாழ்ந்த ஒரு மனிதரை காமவேட்கை மிகைத்தவர் எனக்கூறுவது எப்படி சாத்தியமாகும்?"[48]

---

*48. முஹம்மதிடமும் குர்ஆனிடமும் மன்னிப்புக் கோரல் (பார்ஸி மொழிபெயர்ப்பு) ப.35*

மணந்த மனைவியர்

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, கதீஜா நாயகியாரின் மறைவுக்குப் பின் பல மனைவியரை தேர்ந்தெடுத்துக் கொண்டார்கள். அவர்களாவன, ஸௌதா, ஆயிஷா, ஹப்ஸா, உம்மு ஹபீபா, உம்மு சல்மா, ஸைனப் பிந்து ஜஹ்ஷ், ஸைனப் பிந்து ஹுஸைமா, மைமூனா, ஜுவைரிய்யா, ஸபிய்யா மற்றும் மாரியா ஆகியோராகும்.[49]

இந்தப் பெண்களை திருமணம் செய்ய நபியவர்கள் தீர்மானித்தமைக்குரிய காரணங்கள் பற்றி இங்கு நாம் ஆராயலாம். இதன்படி, நபியவர்கள் பலதார மணத்தை மேற்கொண்டமைக்கான நோக்கங்களாக பின்வருவனவற்றை நாம் கூற முடியும்.

I. அபலைகளுக்கு ஆதரவு

தமது பாதுகாவலரை, அல்லது பராமரிப்பாளரை இழந்த நிலையில், பல்வேறு சிரமங்களை எதிர்கொள்ளும் அநாதைகளை ஆதரிக்கும் நோக்கம். குறிப்பாக, சில பெண்கள், தமது கணவரை இழந்த பின், அவர்களது கோத்திரத்தாரிடமே மீள ஒப்படைக்கப்படக்கூடிய அச்சுறுத்தல் நிலை தோன்றியிருந்தது. இந்நிலையானது, மதம் மாறுதல், மீளவும் இறை நிராகரிப்பில் விழுதல் போன்ற கசப்பான விடயங்களுக்குக் காரணமாகலாம் என்ற அச்சம் இருந்தது.

அன்னை ஸௌதா (ரழி) அவர்களது விடயத்தில் இந்நிலையே இருந்தது. மதீனாவிலிருந்து எத்தியோப்பியாவுக்கு தமது கணவருடன் ஹிஜ்ரத் மேற்கொண்ட ஸௌதா நாயகி, அங்கு கணவரை இழந்து விதவையானார்கள். ஆதரிப்பாரோ,

---

*49. பிஹார், பா.22, ப.200-204*

பராமரிப்பாரோ யாருமின்றி மீண்டும் காபிர்களான அவர்களது கோத்திரத்தினரிடமே திரும்பிச் செல்ல வேண்டிய நிலை அவர்களுக்கு ஏற்பட்டது. இந்நிலையில் தான், நபி ஸல்லல் லாஹு அலைஹி வஆலிஹி, கதீஜாவை இழந்த பின் முதலில் செளதாவை மணந்து, அபயமளித்தார்கள்.[50]

ஸைனப் பிந்து ஹுஸைமா அவர்களது நிலையும் இவ்வாறே அமைந்திருந்தது. 'ஏழைகளின் தாய்' என்று புகழப்படுமளவு வறியோருடன் மிக அன்பாகவும் கொடைத் தன்மையுடனும் நடந்து கொண்டவர் ஸைனப். கணவரை இழந்த பின் கொடிய வறுமையினால் பெரிதும் பாதிக்கப் பட்டார்கள். அக்கஷ்டங்களிலிருந்து அவர்களை விடுவிப்பதற் காகவே நபியவர்கள், ஸைனபை மணந்து கொண்டார்கள். எனினும், நபிகளாரின் காலத்திலேயே அப்பெண்மணி இறையடி சேர்ந்து விட்டார்.[51]

இவ்வாறு தான் உம்மு ஸலமா அவர்களது நிலையும் அமைந்திருந்தது. பேணுதலும், உறுதியான ஈமானும் கொண்டு அழகிய நற்குணத்துடன் காணப்பட்ட அவர்கள், அநாதைகளுடன் சிரமப்பட்டுக் கொண்டிருந்ததனால், நபியவர்கள், அப்பெண்மணியை மணந்து கொண்டாரகள். [52]

## 2. வழக்காறுகளைச் சீர்திருத்தல்

நபியவர்களின் வளர்ப்பு மகனான ஸைத் இப்னு ஹாரிஸா மணம் புரிந்திருந்த, நபியவர்களுடைய தந்தையின் சகோதரியின் புதல்வியான ஸைனப் பிந்து ஜஹ்ஷ் விடயத்தில் இவ்வாறே நிகழ்ந்தது.

---

*50. ஹைக்கல், ப. 319*
*51. மே.கு., ப.320, பிஹார், பா.22, ப.203*
*52. ஹைக்கல், ப.321*

சமூக ஏற்றத்தாழ்வுகளை இஸ்லாம் நிராகரிக்கின்றது என்பதற்கு உயிரோட்டமான சான்றாக இருக்க வேண்டும் என்ற நோக்கின் அடிப்படையில், நபியவர்களது ஆலோசனை யின் பிரகாரம் இத்திருமணம் நடந்தேறியது. ஏனெனில், ஸைனப் குறைஷி குலத்தின் தலைவராகவும் பிரமுகராகவும் இருந்த அப்துல் முத்தலிபுடைய பேரக் குழந்தைகளில் ஒருவராக இருந்தார். அதேவேளை, ஸைத் நபியவர்களால் உரிமையிடப்பட்டு, பின்பு வளர்க்கப்பட்ட ஓர் அடிமையாக இருந்தார்.

ஸைனப், தனது பரம்பரைச் சிறப்பு, தனித்துவம் என்பவற்றைப் பிரஸ்தாபித்து ஸைதிடம் உயர்வும் பெருமையும் பேசியதன் விளைவாக, அவர்களது வாழ்க்கை, மண வாழ்விற்கு வேண்டிய நல்லியல்புகளை விட்டும் தூரமான, கசப்பு மண்டியதாக அமைந்துவிட்டது.

மணவிலக்குக் கோரி, திருமண உறவிலிருந்து பிரிந்து விடுவதென்ற இறுதி முடிவுக்கு வந்துவிட்டதனால், முரண்பாடு களைக் களைந்து, ஒற்றுமைப்பட்டு திருமண உறவை நீடிக்கு மாறு நபியவர்கள் கூறிய உபதேசம் அவ்விருவருக்கும் எவ்விதப் பயனுமளிக்கவில்லை.[53]

ஸைத், தலாக் சொன்னதன் பின், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி ஸைனபை மணந்து கொள்வதற்கான திருமண உடன்படிக்கையை மேற்கொண்டார்கள். இது, அக்கால அரபிகள் மத்தியில் பெரும் பிரதிபலிப்பை ஏற்படுத்து மளவு செல்வாக்குச் செலுத்தி வந்த அறியாமைக்கால வழக்காறு ஒன்றைக் களைவதற்காக, இறைவனின் புறத்திலிருந்து வெளியான கட்டளையின் மூலமாக இடம் பெற்ற ஓர் அம்சமாகும்.

---

*53. பிஹார், பா. 22, ப.214 - 218*

அதாவது, அறியாமைக் கால அரபிகள், தாம் தத்தெடுத்து வளர்க்கின்ற பிள்ளைகள், தமது சொந்தப் பிள்ளைகளுக்குண்டான சட்டங்களையே வாய்க்கப் பெறுவார் கள் என்று உறுதி கொண்டிருந்தார்கள். இதனால், தமது சொந்த மகன் திருமணம் செய்திருந்த ஒரு பெண்ணை தாம் மணம் செய்து கொள்ளாதிருப்பது போன்றே, தமது வளர்ப்பு மகன் திருமணம் செய்திருந்த பெண்ணையும் மணம் புரியாதவர்களாக இருந்து வந்தனர்.[54]

குற்றச்சாட்டுகள்

குருட்டுப் பிடிவாத குணம் கொண்ட சில கீழைத்தேய எழுத்தாளர்களால் பொய்யான, திரிபுபடுத்தப்பட்ட சந்தேகங் களை இணைத்துக் கொள்வதில் இருந்தும் சில புனைவுகளை அறிமுகம் செய்வதிலிருந்தும் தவிர்ந்து கொள்ள முடியவில்லை. நபிகளார், ஸைனபை மணம் புரிந்து கொண்டது தொடர்பில் தமது இஷ்டத்திற்கேற்ப, மிக அநாகரிகமான ஒரு கதையை, அவர்கள், பரப்பியதை நாம் காண்கின்றோம்.

அவர்களது அவதூறுக்கேற்ப நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி ஸைனபின் மீது ஆசை கொண்டவர் களாகவும், வசீகரிக்கக் கூடிய அற்புதமான அவளது அழகின் மீது உள்ளார்வம் கொண்டவர்களாகவும் இருந்ததனாலேயே, அவரை தலாக் சொல்ல வேண்டிய ஒரு நிலையை ஸைதுக்கு ஏற்படுத்தினார்கள் எனக் கூறுகின்றனர். நாம் நடுநிலைப் போக்குடன் சிந்தித்தால், இது முற்றிலும் உண்மைக்குப் புறம்பான வாதமென்பது தெளிவாகிறது.

இது வெளிப்படையான வரலாற்று, பகுத்தறிவு ரீதியான அனைத்து ஆதாரங்களுக்கும் முரண்படக்கூடியதாகும்.

---

*54. பார்க்க, அல்குர்ஆன், ஸூரா அல் அஹ்ஸாப், வசனம்.37*

ஏனெனில், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி இந்தளவுக்கு தமது இச்சைக்கு அடிமைப்பட்டவர்களாகவும் இளம் பெண்களினதும் அவர்களது அழகினதும் மயக்கத்தில் தமது சிந்தனையை ஈடுபடுத்திக் கொள்ளக் கூடியவர்களாக வும் இருந்திருந்தால், மேலும், நபியவர்களை குழப்பத்தில் ஆழ்த்தக் கூடிய அளவு மிகப்பெரும் உயர் நிலையை ஸைனபின் அழகு பெற்றிருந்தால், அவர் கன்னிப் பெண்ணாக இருக்கும் போதே அவரைத் திருமணம் செய்து கொண்டிருக்கலாமே

அதற்கு முன்னர், ஸைனபின் அழகைப் பற்றி நபியவர்கள் அறிந்திருக்கவில்லை எனக்கூற முடியுமா? நபிகளாரின் மாமியின் மகளாக, நெருங்கிய உறவாக, நபியவர்களை விட்டும் தூரமாகாத நிலையில் அவர் இருந்து வந்திருக்கையில், இது எப்படி சாத்தியமாகும்? எனினும், இந்தப் புனைகதைகளை அவர்கள் கூறுவதெல்லாம், அவர்களது அக-புற பார்வையை குருடாக்கி விட்ட அவர்களது பிடிவாதத்தின் காரணமாகவேயன்றி வேறில்லை.

3. கைதிகள் மற்றும் அடிமைகளுக்கு விடுதலை

ஜுவைரியா விடயத்தில் இவ்வாறே நிகழ்ந்தது. அவர், பிரபல்யமான முஸ்தலக் கோத்திரத்தைச் சேர்ந்தவர். அக்கோத்திரத்தினர், முஸ்லிம்களுக்கெதிராக யுத்தத்தை பிரகடனம் செய்திருந்தனர். அவர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையிலான ஒரு யுத்தத்தின் போது, முஸ்லிம்களது கை ஓங்கியிருந்தது. அந்தக் கோத்திரத்திலிருந்து பெருந்தொகை யானோர் சிறைப்பிடிக்கப் பட்டிருந்தனர். அவ்வாறு சிறைப் பிடிக்கப்பட்டவர்களுள், அக்கோத்திரத்தின் தலைவர் ஹாரிஸ் என்பவருடைய மகள் ஜுவைரிய்யாவும் ஒருவர். நபி ஸல்லல் லாஹு அலைஹி வஆலிஹி, ஜுவைரிய்யாவை கௌரவப்படுத்

தும் நோக்கில் அவரை சிறையிலிருந்து விடுதலை செய்த தோடு, திருமணமும் செய்து கொண்டார்கள்.

ஜுவைரிய்யாவை மணம் புரிந்து கொண்டதன் மூலமாக, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, தம்மால் சிறைப் பிடித்து வைக்கப்பட்டுள்ள முஸ்தலக் கோத்திரத்தின் உறவின ராகி விட்டார்கள் என்பதை அறிந்த முஸ்லிம்கள், அத் திருமணத்தை கண்ணியப்படுத்தும் பொருட்டு, தம்மிடம் தடுத்து வைக்கப்பட்டிருந்த முஸ்தலக் கோத்திரத்தின் அனைத்து கைதிகளையும் விடுதலை செய்தார்கள். வரலாற் றாசிரியர் இப்னு ஹிஷாம் எழுதுகின்றார்; "இத்திருமணத்தின் பொருட்டினால் முஸ்தலக் கோத்திரத்தைச் சேர்ந்த நூறு கைதிகள் விடுதலை செய்யப்பட்டார்கள்."[55]

4. உறவுகளை வளர்ப்பது

பெரிய அரபு கோத்திரங்களுடன் இணைப்பினை ஏற்படுத்திக் கொள்வது, அதன் தனிநபர்களை ஈர்த்தெடுப்பது, அவர்களிடமிருந்து பாதுகாப்பை ஏற்படுத்திக் கொள்வது மற்றும் மனிதர்களை தமது புதிய மார்க்கத்துடன் தொடர்புபடுத்துவது ஆகிய நோக்கங்களுக்காகவும் அண்ணல் நபிகளார் சில திருமணங்களை மேற்கொண்டார்கள்.

இவ்வழியில் அன்னை ஆயிஷா, ஹப்ஸா, உம்மு ஹபீபா, ஸபிய்யா, மைமூனா (ரழி) ஆகிய பெண்களை நபியவர்கள் மணந்து கொண்டார்கள்.

உம்மு ஹபீபா, அறியாமைக் காலத்திலும், இஸ்லாத்திற் குப் பின்னரும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களோடும், அவர்களது குடும்பத்தினரோடும் பகிரங்கமாக

---

*55. இப்னு ஹிஸாம், பா.3, ப.295*

விரோதம் பாராட்டி வந்த அபூசுப்யானின் மகளாக இருந்தார். தனது கணவருடன் அவர் எத்தியோப்பியாவுக்கு ஹிஜ்ரத் மேற்கொண்ட போது, அங்கு அவரது கணவர் மதம் மாறி, கிறிஸ்தவராகி மரணித்தார். முஸ்லிமாக இருந்த உம்மு ஹபீபா, நபியவர்களுக்கும், அவர்களது இஸ்லாமிய அழைப்புக் கும் பெரும் எதிரியாக இருந்த தனது தந்தையிடமோ, குடும்பத்தாரிடமோ திரும்பிச் செல்ல முடியாத நிலையில், அச்சத்துடனான தடுமாற்றமும், பெரும் மனக்கிலேசமும் கொண்டார். இந்நிலையில், தடுமாற்றத்திலிருந்து அவரை விடுவித்த நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, ஒருபுறம், அவருக்கு பாதுகாவலரையும் பொறுப்பாளரையும் ஏற்படுத்திக் கொடுக்கும் நோக்குடனும், மறுபுறம் உம்மு ஹபீபாவின் கோத்திரத்தினரான பனூஉமையாக்களின் உள்ளங்களை வெல்லவும் உம்மு ஹபீபாவை மணம் புரிந்தார்கள்.[56]

இவ்வாறு தான், யூத பனூநழ்ர் கோத்திரத்தின் தலைவரான ஹய்யிப்னு அஹ்தபின் புதல்வி ஸபிய்யாவுடைய விடயத்திலும் நிகழ்ந்தது. இக்கோத்திரத்தினர், நபியவர்களுடன் செய்து கொண்டிருந்த ஒப்பந்தத்தை முறித்து விட்டு, முஸ்லிம்களுடன் யுத்தத்தில் இறங்கினர். முஸ்லிம்கள், பெருந் தொகையான யூதர்களை வெட்டியும், சிறைப்பிடித்தும் தமது வெற்றியை உறுதி செய்து கொண்டனர்.

கொலைசெய்யப்பட்டவர்களில் ஸபிய்யாவின் தந்தையான ஹய்யிப்னு அஹ்தபும் அடங்கியிருந்தார். அக்கோத்திரத்தா ரிடையே ஸபிய்யாவுக்கிருந்த கௌரவத்தையும் உயர் அந்தஸ்தையும் அறிந்த நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, பெரும் ஆபத்திற்குரியவர்களாயிருந்த யூத பெரும் கோத்திரத்தாருக்கும் தமக்குமிடையே ஒரு தொடர்பை

---

*56. அல் இஸ்பா வல்இஸ்தீஆப், ப.305, மவ்கூஅத் ஆலின்னபீ, ப.369, இப்னு ஹிசாம், பா.1, ப.223, அ'.லாம், ப.141*

தோற்றுவித்துக் கொள்ளும் நோக்கில், ஸபிய்யாவை மணந்து கொள்ள அபிப்பிராயப்பட்டார்கள். [57]

மைமூனா, அரபு கோத்திரங்களிடையே புகழ் பெற்ற, பனூ மஹ்ஸூம் கோத்திரத்தைச் சேர்ந்தவர். ஹிஜ்ரி ஏழாம் வருடம், அவரை நபியவர்கள் மணந்து கொண்டார்கள். [58]

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களது மனைவியரில் அன்னை ஆயிஷாவைத் தவிர ஏனைய அனைவரும் விதவைகளாகவும், தமது செழுமையான இளமைப் பருவத்தைக் கடந்து வந்தவர்களாகவுமே இருந்தார்கள். ஆகவே, நபியவர்கள் பலதார மணம் புரிந்து கொண்டமை, இச்சைகளுக்கு அடிமையாகி, அற்ப பாலியல் வேட்கைகளைத் தீர்த்துக் கொள்வதற்கான சந்தர்ப்பத்தைப் பெற்றுக் கொள்வதல்லாமல், தூய்மையான குறிக்கோள்களையும், உயர்ந்த இலட்சியங்களையும், சமூக சீர்திருத்தத்தையுமே நோக்காகக் கொண்டிருந்தது என்பதற்கு இவ்விடயத்தில் தெளிவான ஆதாரம் இருக்கின்றது. ஏனெனில், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, மனித சமூகத்தை நன்குணர்ந்த மாபெரும் ஆளுமையும் புனிதத்துவமும் நிறைந்த ஓர் அற்புத மனிதராக இருந்தார்கள்.

---

*57. மே.கு., மவ்ஸூஆத், ப.345, அஃலாம், ப.142*
*58. பிஹார்,பா.22, ப.203, இப்னு ஹிசாம், ப.372, மவ்ஸூஆத், ப.404.*

# நபித்துவத்துக்கு முன்னர் இறைதூதரின் ஆளுமை

## சூழல் தாக்கம்[59]

மனோ தத்துவ அறிஞர்கள் ஊர்ஜிதம் செய்வதாவது; ஒரு சமூக சூழலும், சுற்றாடலும் தான் ஒவ்வொரு தனி மனிதனின் ஆளுமையின் அடித்தளமாகும். அவ்வாறே சமூக நடைமுறைகளோடு ஒத்திருந்து உடன் படுவதும் சமூக வோட்டத்தோடு தானும் அடிபட்டுச் செல்லுவதும் ஆளுமையில் செல்வாக்கும் செலுத்தும் காரணிகள் ஆகும்.

சிலர், இக் கொள்கையிலிருந்து விதிவிலக்குப் பெற முடியாதவாறு, அதனை பொதுவான ஒட்டுமொத்த கோட்பாடாகக் கணிக்கின்றனர், அதனை அடிப்படையாகக் கொண்டு சமூகத்தின் நடவடிக்கைகளை விளக்க முற்படுகின்ற அளவுக்கு, இவ்விடயத்தில் அளவுகடந்து போய்விடுகின்றனர்.

---

*59. பெருந் தலைவர்களும் சீர்திருந்தங்களும் (பார்ஸி), ப.37*

எனினும், ஒரு சமூகத்திற்கு, அதன் தனிநபர்களின் உயிரோட்டத்திலும், அவர்களது சிந்தனையின் வளர்ச்சியிலும் குறிப்பிட்டளவு தாக்கமே இருக்கின்றதென்பதை நாங்கள் ஏற்றுக் கொள்ளாதிருக்க முடியாது.

இதன்படி, சிறப்பும், இறையச்சமும் உள்ள ஒரு சமூகம், நல்லியல்பும் தூய்மையும் உள்ள ஒரு முன்மாதிரியை தம்மிடையே உருவாக்கி வளர்த்துக் கொள்ளும். அதேபோன்று, நெறிபிறழ்வும், தீய தன்மையும் கொண்ட ஒரு சமூகம், அதன் தனிநபர்களை வழிகேடும், குழப்பமும் மிக்க ஒரு சூழலுக்கே இழுத்துக் கொண்டு வந்து சேர்க்கும்.

இதன்படி, ஒரு மோசமான சமூகத்தின் நடைமுறைப் போக்குகளிலிருந்தும், அதன் குழப்பங்கள், இச்சைகளின் தாக்கங்களிலிருந்தும் விடுபட்டதாக தன் பாதையை வகுத்துக் கொள்ள சக்தி பெறும் ஒருவர், நிச்சயமாக சாதாரண இயல்புக்கு அப்பாற்பட்ட ஒரு மனிதராகவே கணிக்கப்பட வேண்டியவராகின்றார்.

## அரபு சமூக சூழல்

உலகம் முழுவதும், குறிப்பாக அரபு தீபகற்பம், அறியாமையிலும், மூடத்தனத்திலும் மூழ்கி, குழப்பங்களினதும் மூடக்கொள்கைகளினதும் நெருப்பில் எரிந்து கொண்டிருந்தது. ஒளியிழந்த அறியாமை அரபியரது வாழ்வின் வான்பரப்பை காரிருளாக மாற்றிவிட்டிருந்தது. அவர்களது வாழ்நாட்கள் நெருக்கடியும், மூதேவித்தனமும், கஷ்டமும் கோலோச்சுகின்ற, கசப்பு மண்டிய நாட்களாக மாறியிருந்தன. அவர்களது பொருளாதாரங்கள், அதிகமாக கொள்ளை, பறிமுதல் மூலமாகவே குவிக்கப்பட்டன, அவர்கள் அதிகமாக இரத்தம் ஓட்டியதெல்லாம் அநீதிக்காகவும் பகைமைக்காகவுமே.

வீண் சந்தேகங்களும், தீய கற்பனைகளும், சமூக ஏற்றத்தாழ்வுகளும் அவர்கள் மத்தியில் பெரும் ஆதிக்கம் செலுத்தியதோடு, அவர்களிடையே சட்டங்களாக நோக்கப்படும் அளவுக்கு அவை இறுக்கமான பிடியையும் கொண்டிருந்தன. அவர்களது சமூகத்தின் மத்தியில் இல்லாதிருந்த ஒரே விடயம் சட்ட ஒழுங்கும், நீதியுமாகும்.

கற்சிலைகளை வடிவமைத்து அவற்றை தெய்வமாகப் பூசித்து வந்தமை அறியாமைக்கு சிறந்த சான்றாக விளங்கியது.[60] கோழைத்தனம் மிக்க, உள்ளம் இறுகிய சில செல்வந்தர்கள், பலவீனர்களின் இரத்தத்தை உறிஞ்சிக் கொண்டும், அநாதைகளின் பணத்தை அநீதியாப் பறித்துக் கொண்டும், உடலை வருத்தி உழைக்கக்கூடிய ஏழைகளின் வருமானத்திலிருந்து மோசடி செய்து வயிறு வளர்த்துக் கொண்டும் இவையனைத்திற்கும் மேலாக பெருமை, ஆணவம் என்ற அந்தரத்தில் மிதந்து கொண்டும், தங்கம், வெள்ளியை பதுக்கி வைத்துக் கொண்டு, இவையனைத்தும் தடுக்கப்பட்ட அந்த ஏழைகளின் பெயரில் ஆடம்பரமான, கேளிக்கையான, விரயமான வாழ்வை அனபவித்துக் கொண்டும் இருந்தனர்.

வியாபாரம், மற்றும் கொடுக்கல்-வாங்கல்களிலான அவர்களது வழிமுறையானது பெரும் குழப்ப நிலையைத் தோற்றுவித்திருந்தது. கணவன்-மனைவியரில் ஒவ்வொருவரும் மற்றவரது கடனை அடைப்பதற்கான பொறுப்புடையவர்களாக இருந்தனர். ஒரு பெண், தான் பெற்ற கடனை அடைக்க முடியாது போனால், குறித்த கடனை மீளப்பெறுகின்ற வரை, கடன் வழங்கியவன், அப்பெண்ணை தனக்குரியவளாக தடுத்துவைத்துக் கொள்ள முடியும்.[61]

---

*60. வில் டுராண்ட் (பார்ஸி), பா.11, ப.1-10, அல் துர்ரத்துழல் பய்ழா பீ சரஹி குத்பத்தி பர்திமதிஸ் ஸஹ்ரா, ப.27, 54.*
*61. பரீத் வுஜ்தி, தாயிரத்துழல் மஆரிப், பா.5, ப.250*

அவர்கள், தமது ஆன்ம பூரணத்துவம், அறிவியல் உருவாக்கம் என்பவற்றில் பெருமிதம் கொள்வதற்குப் பதிலாக, தமது மூதாதையர், குடும்பத்தினர், மற்றும் கோத்திரங்களின் பெருமையையே போற்றி வந்தனர். தமது கோத்திரத்தாரின் அதிகரித்த எண்ணிக்கையைக் கொண்டு பெருமை பாராட்டிக் கொள்ள அவர்கள் விரும்பினால், தமக்குரிய மையவாடிக்குச் சென்று, அங்குள்ள மண்ணறைகளை கணக்கிட்டுப் பார்ப்பார்கள்,[62] தமக்குப் போட்டியாக உள்ள பிறிதொரு கோத்திரத்தை விட தாம் எண்ணிக்கையில் அதிகமானவர்கள் என்பதை நிறுவும் ஆதாரமாக அது அவர்களுக்கிருந்தது.

மதுபானத்தில் மூழ்கி விடுவது, விபச்சாரத்தில் ஈடுபடுவது, காமவேட்கை மிக்க செயல்களை மேற்கொள்வது, காரணமின்றி இரத்தத்தை ஓட்ட வைப்பது, இவையே அவர்களுக்கு விருப்பமுள்ள அவர்களது நாளாந்த நடவடிக் கைகளாக அமைந்திருந்தன.[63] வெட்கம், நாணம் என்பவற் றிலிருந்து எந்தவொரு வகையையும் அவர்கள் உணர்ந் திருக்கவில்லை

அவர்களது புகழ்பெற்ற அரபுக் கவிஞனான இம்ரஉல் கைஸ், பிரபல்யமான தனது கவிதையொன்றில், எவ்வித வெட்கமோ கூச்சமோயின்றி, தனது சிறிய தந்தையின் மகளுடன் தான் நடந்து கொண்ட இழிவான பாலியல் சேஷ்டைகளையும், அவள் மீதான தன் காதலையும், வர்ணிக்கின்றார். ஆச்சரியமான விடயம், அக்கவிதையை அரபு இலக்கியத்தின் உன்னதமான முன்மாதிரியாகக் கணிக்கின்ற னர். புனிதமான கஃபாவின் சுவர்களில் தொங்கவிடப் படுவதற்கும் அது தகுதி பெற்றிருந்தது.[64]

---

*62. மஜ்மஉல் ப்யான், பா.10, ப.534 (புதிய படிப்பு)*
*63. சூபி மூய்ப், அல் அஸ்ருல் ஜாஹிலீ, பதி.5, மிஸர், ப.70*
*64. அல் ஸூஸானீ, சரஹு முஅல்லகாதுஸ் ஸப்உ, ப.3*

இது, இருண்ட வான்வெளியில், இஸ்லாம் தன் ஒளிக் கீற்றுகளை பரப்பிய சமூகத்துடைய ஒழுக்க, மற்றும் நடைமுறை முதலான அவர்களது நிலைமை பற்றிய சுருக்கமான விவரணமாகும்.

தெளிவான விடயம் யாதெனில், இத்தகைய சமூகச் சூழலின் தாக்கங்களுக்கு உட்படாத, அதன் அருவருக்கத் தக்க விடயங்களால் அழுக்கடையாத ஒரு மனிதர், நிச்சயமாக தனித்துவமான, தெய்வீகப் பண்பு கொண்ட ஒரு மனிதரா கவே இருக்க முடியும். இதன் மூலம், மனித சமூகத்தின் தலைமைத்துவத்திற்கும், தீங்கான அதன் நடைமுறைகள், பிரச்சினைகளிலிருந்து அச்சமூகத்தை விடுவிப்பதற்கும் தகுதி யான ஒருவராகவும் அவர் ஆகிவிடுகின்றார்.

## நபிமார்கள், சமூகத்தின் தலைவர்களே

ஒட்டுமொத்தமாக மனிதர்கள் எல்லோரும் சிலைகளின் பால் கவனம் செலுத்திய சந்தர்ப்பத்தில், எவரிடமிருந்தும் கல்வியைப் பெற்றுக் கொண்டிராத முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி மாத்திரம் ஹிரா மலைக்குகையில் தியானித்துக் கொண்டிருந்தார்கள்.[65] அங்கு, பயபக்தியும் உள்ளச்சமும் கொண்டவர்களாக, உலகத்தைப் பற்றியும், சிருஷ்டிகர்த்தா, தனது மகத்துவத்தையும் வல்லமையையும் பறைசாற்றுமாறு உலகில் படைத்துவைத்துள்ள அழகிய நுட்பங்கள் பற்றியும் சிந்தித்துக் கொண்டிருப்பார்கள்.

"நீர் இதற்கு முன்னர் எந்தப் புத்தகத்தையும் படித்ததோ உம் கைகளால் எதையும் எழுதியதோ கிடையாது. அப்படியிருக்க உண்மைக்கு மாறாக அவர்கள் சந்தேகம் கொள்வது எவ்வாறு?" குர்ஆன் 29:48)

---

*65. பிஹார், பா.18, ப.280*

அல்லாஹ்வுடைய கண்காணிப்பினாலும், வழிகாட்டலினாலும் சூழப்பட்ட முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, ஆரம்பத்தில் இருந்தே சத்தியத்தின் நேரான பாதையைக் கண்டு அதில், எவ்வித தடுமாற்றமோ, சங்கடமோ இன்றி, முழுமையான உறுதியுடனும், உள்ளமைதியுடனும் நடந்தார்கள்.[66] அவர்கள், தமது சமூகத்தின் தவறான மரபுகள், தூர்ந்து போன வழிபாடுகளைப் பற்றி சிந்திப்பதிலே தமது முதற் படிகளை ஆரம்பித்தார்கள்.

அவர்கள், தமது வாழ்நாளின் சில நொடிகளாயினும், சிலை வணக்கத்தை ஆதரிக்கவில்லை. மாறாக, ஏற்கனவே கூறப்பட்டது போல், அச்சிலைகளின் நாமங்களை செவிமடுப்பதையும் விரும்பவில்லை.[67]

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களது மகத்துவம், தூய்மை, ஒழுக்கம் என்பவையே, அச்சமயத்தில், மனிதர்களுடைய பொதுவான, பிரத்தியேகமான ஒன்றுகூடல்களினதும், அமர்வுகளினதும் பேச்சாக இருந்தன. நபியவர்களின் வாய்மை, நேர்மை, மனத்தூய்மை முதலானவை, "அல்அமீன்" என்ற பட்டத்தை அவர்களுக்குப் பெற்றுக் கொடுத்தன. இப்பண்புகளே, கதீஜா நாயகி அவர்கள், தமது வர்த்தகத்தில் ஈடுபடுத்துவதற்கு நபியவர்களை தேர்ந்தெடுக்கவும் அடிப்படையாயிற்று.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களது நல்லொழுக்கங்களும், நடைமுறைகளும், பிற மனிதர்களுடனான நற்பழக்க வழக்கங்களும், மனிதர்களது உள்ளங்களில் நுழைந்து, அவர்களை கவர்ந்திடும் சக்தி பெறுமளவு, உயர்ந்த, உச்ச எல்லையை அடைந்திருந்தன.

---

*66. மே.கு. பா.18, ப.277-281, பய்ழுல் இஸ்லாம், ப.802*
*67. அஃலாம், ப.17-18, பிஹார், பா.15, ப.140*

ஹஸ்ரத் அம்மார் இப்னு யாசிர் (ரழி) அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்; "நான், நபியவர்களின் நுபுவ்வத்திற்கு முன்னர், அவர்களுடன் சேர்ந்து ஆடு மேய்த்துக் கொண்டிருந் தேன். ஒரு நாள், நபியவர்களை அணுகி, நாளை பஹ்ற் எனுமிடத்திலுள்ள மேய்ச்சல் நிலத்துக்கு ஆடுகளைக் கொண்டு செல்வோம் என்று அவர்களுக்கு ஆலோசனை கூறினேன்.

மறுநாள் நான் அங்கு சென்று பார்த்த போது, எனக்கு முன்பாகவே அவர்கள் அங்கு வந்து விட்டிருப்பதைக் கண்டேன். ஆனால், தமது ஆடுகளை மேயவிடாமல் தடுத்து வைத்திருந்தார்கள். "ஏன் ஆடுகளை மேயவிடாது தடுத்துக் கொண்டிருக்கிறீர்கள்?" என்று நான் கேட்ட போது, "இருவரும் இணைந்தே ஆடுகளை மேயவிடுவதாக நான் உங்களுக்கு வாக்களித்திருந்தேன். அதனால், உங்களுக்கு முன்னர், எனது ஆடுகளை மேயவிடுவதற்கு நான் விரும்பவில்லை" என்று பதிலிறுத்தார்கள்.[68]

இவ்வாறு, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, தமது சமூகத்துடைய வழிமுறையை விடுத்து, தமக்கென தனித்துவமான ஒரு பாதையை வகுத்துக் கொண்டிருந்தார் கள். அச்சமூகத்தாருடைய வழக்காறுகளோ, நடைமுறைகளோ, நபிகளாரில் எவ்வித பாதிப்பையும் தோற்றுவிக்கவில்லை.

எனினும், தமது சிருஷ்டிப்புக்கும், கண்காணிப்புக்கும் உரிய மறைமுகமான சக்தியுடன் தம்மை நேரடியாக இணைக்கக் கூடிய உயர்ந்த ஓர் அந்தஸ்தை அடைந்து கொள்கின்ற வரைக்கும் பரிபூரணத்துவம் வாய்ந்த ஒரு வழிமுறையைத் தேடுபவராகவே இருந்தார்கள்.

---

*68. பிஹார், பா.16, ப.224*

இதற்காகவும், இன்னும் பிற காரணங்களுக்காகவும் மனிதர்கள், நபியர்களை அபரிமிதமாக கௌரவப்படுத்தினர். பிரச்சினைகள் பலவற்றின் போது நபிகளாரது கருத்துகளின் மூலம் பயன் பெறக் கூடியவர்களாகவும் இருந்தார்கள்.

## ஹஜருல் அஸ்வத்

முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களுக்கு அப்போது வயது முப்பத்தைந்து. புனித கஃபாவின் கட்டடத்தை புனர்நிர்மாணம் செய்வதற்காக குறைஷியர் ஒன்றிணைந்தனர். குறைஷியரிடையே இருந்த ஒவ்வொரு கோத்திரத்தினரும் கஃபாவின் நிர்மாணப் பணிகள் மூலமான பெருமையைப் பெற்றுக் கொள்ள ஆர்வமுற்றதனால், அதன் பணிகள் பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு கோத்திரத்துக்கும் ஒவ்வொரு பணி வழங்கப்பட்டது.

"யா அல்லாஹ்! நாங்கள் நன்மையையே நாடுகின்றோம்" என்று கூறியவராக, வலீத் இப்னு முகீரா, புனர்நிர்மாணத்திற் காக கஃபாவின் சில பகுதிகளை இடித்தார். பிற மனிதர்களும் அவரைப் பின்பற்றி, அவருக்கு உதவினர். இப்ராஹீம் அலைஹிஸ் ஸலாம் நிர்மாணித்த அடித்தளம் வரை அது இடிக்கப்பட்ட பின், ஒவ்வொரு கோத்திரத்தினரும் கஃபாவில் தமக்கு வழங்கப்பட்ட பகுதியை நிர்மாணிக்கும் பணியில் ஈடுபட்டனர்.

ஹஜருல் அஸ்வத் கல்லை வைக்கின்ற இடம் வந்த போது, ஒவ்வொரு கோத்திரத்தாரிடையேயும் கருத்து முரண் பாடுகள் தலைதூக்கின. ஒவ்வொரு கோத்திரத்தினரும் தத்தமது குலப்பெருமையைப் பேசிக் கொண்டு, அதனை தாமே வைக்க வேண்டுமென்று வாதாடினர். யுத்தமொன்றுக் குத் தயாராகுமளவு, அவர்களிடையேயான முரண்பாடுகள் விஸ்வரூபமெடுத்தன.

பனூ அப்துத்தார் கோத்திரத்தினர், தாம் யுத்தமாயினும் மரணமாயினும் தயாராக இருக்கின்றோம் என்பதை வெளிக்காட்டுமுகமாக, தமது கைகளை இரத்தத்தில் தோய்த்து எடுத்துக் கொண்டு முன்வந்தனர்.

இந்தக் கொடூரமான முரண்பாடு நான்கு, அல்லது ஐந்து நாட்கள் வரை நீடித்தது. பின்னர், அவர்கள் அனைவரும் ஒன்றிணைந்து இதற்கான தீர்வு பற்றிய கலந்துரையாடலை மேற்கொண்டனர்.

குறைஷியரில் வயது முதிர்ந்தவராக இருந்த அபூஉமையா இப்னு முகீரா என்பவர் இவ்வாறு கூறினார்; "குறைஷி குலத்தினரே! இந்த பள்ளிவாயலின் வாயிற்கதவினூ டாக யார் முதன் முதலில் உட்பிரவேசிக்கின்றாரோ அவரை, நீங்கள் முரண்பட்டுள்ள விடயத்திற்கு தீர்ப்பளிக்கும் ஒருவராக ஏற்படுத்திக் கொள்ளுங்கள்."

அவரது ஆலோசனையை ஏற்றுக் கொண்ட மக்களனை வரும், யார் முதன்முதலில் நுழையப் போகின்றார் என்பதை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர். முதன்முதலாக அவர் களிடத்தில் நுழைந்தவர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களாவர்.

நபியவர்களைக் கண்டதும், "இவர் உண்மையாளர். இந்த முஹம்மதை நாங்கள் திருப்தி கொண்டோம்" என்று கூறினர். நபியவர்கள், குறைஷியரை சென்றடைந்த போது, செய்தியை அவர்களுக்கு எடுத்துக் கூறினர். அப்போது நபியவர்கள், "என்னிடம் ஒரு புடவையை எடுத்து வாருங்கள்" என்று கூறினார்கள். அது கொண்டு வரப்பட்டது. நபியவர்கள், தமது திருக்கரங்களால் ஹஜருல் அஸ்வத் கல்லை எடுத்து, அந்தப் புடவையில் வைத்தார்கள்.

பின்னர், "ஒவ்வொரு கோத்திரத்தினரும் இந்தப் புடவையின் ஓரங்களைப் பிடித்துக் கொள்ளவும்" என்று கூறினார்கள். எல்லோரும் அவ்வாறே செய்தவாறு அதனை, அதற்குரிய இடத்திற்கு உயர்த்திய போது, பிரச்சினைக்கான தீர்வை நாடி, நபியவர்கள் அந்தக் கல்லையெடுத்து அதன் இடத்தில் வைத்தார்கள். அதன்பின், புனர்நிர்மாணப் பணிகள் தொடர்ந்தன.[69]

இவ்வாறு, அதிகமானோரின் இரத்தத்தை ஓட்டுவதற்கு நிர்ப்பந்திக்கக் கூடியதும், மாபெரும் சோதனைகளையும், இழப்புகளையும் இழுத்துக் கொண்டு சேர்க்கக் கூடியதுமாக இருந்த பெரும் ஆபத்தான குழப்பமொன்றிலிருந்து குறைஷியரை விடுவிப்பதற்கான வலுவை நபியவர்கள், தமது மதிநுட்பம், மற்றும் சிந்தனைத் தூய்மையினூடாகப் பெற்றுக் கொண்டிருந்தார்கள்.

---

*69. இப்னு ஹிசாம், பா.1, ப.192-197, பிஹார், பா.15, ப.337,412*

# 7. வேத வெளிப்பாடு

## உலகளாவிய தூது

மேலே நாம் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களின் வாழ்க்கை வரலாற்றிலிருந்து சில பக்கங்களைப் புரட்டிப் பார்த்தோம். மகத்துவம், கண்ணியம், உயர்வு, முதலானவற்றினால் நிரப்பப்பட்ட அவர்களது வாழ்விலிருந்து சுவையான சில முன்மாதிரிகளை வாசித்தோம்.

இப்போது, நபிகளாரது தூய வாழ்வில் மிக முக்கியத்து வம் வாய்ந்த இன்னொரு கட்டத்தை நோக்குவோம்.

நபி முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, ஒழுக்க வீழ்ச்சியும் தடுமாற்றமும் ஆதிக்கம் செலுத்திய ஒரு சமூகத்தின் மத்தியிலே வாழ்ந்தார்கள். அந்த சமூகத்தில், நாகரிகத்தின் அறிகுறிகளையோ, நல்ல சூழலுக்கான அடையாளங்களையோ யாரும் உணர முடியாது. வழிகேடு, அறியாமையின் இருளையன்றி வேறெதனையும் காண முடியாதிருந்த, சீரற்ற அந்த சமூக சூழலைக் காணும் போது,

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களுக்கு கடினமான மனோவலியை ஏற்படுத்திற்று.

ஏகத்துவத்தின் வீடும், ஏகத்துவவாதிகளின் புகலிடமுமான புனித கஃபாவுக்குச் சென்றால், ஏக இறைவனான அல்லாஹ்வுக்கான வணக்கம் செய்வதற்குப் பதிலாக, அங்கு சிலைகளை வணங்குவதையும் அவற்றுக்கு சாஷ்டாங்கம் செய்வதையுமே கண்டு வந்தமை நபிகளாரை வெகுவாகப் பாதித்தது.

அச்சமூகத்தாரின் தீய சிந்தனைகளும், இழுக்கான அவர்களது வழக்காறுகளும் நபியைத் சிந்தனையிலும் கவலையிலும் மூழ்கடித்தன.

ஏழைகளின் வலியும், உரிமை மறுக்கப்பட்டவர்களின் ஓலங்களும் நபியவர்களை மேலும் சங்கடப்படுத்தின. அந்த மோசமான சமூகமெங்கும் பரவி, அதன் மீது தன் கறுப்பு இருளை அழுத்தி வைத்திருந்த சூதாட்டம், மதுபாவனை, கொலை, குற்றச் செயல்கள் மற்றும் ஏனைய கெட்ட நடைமுறைகளுக்கு மத்தியில், அச்சமூகத்தின் பெண்களுடைய அந்தஸ்து, இழிவான நிலையை அடைந்திருந்தமையை அவதானிக்கின்ற போது, நபியவர்கள் மிகக் கடுமையான கவலைக்கு உள்ளானார்கள்.

சில நேரங்களில், அந்த இருள் நிறைந்த சமூகத்தை விட்டும் ஒதுங்கி, அந்தக் கடினமான சமூகச் சூழலிலிருந்து தனிமைப்படுத்தப்பட்ட நிலையில் தமது ஆன்மாவை சற்று ஆசுவாசப்படுத்திக் கொள்ளவும், அமைதியான தனியான இடத்தில் தமது இரட்சகனை விளித்து அவனுடன் தனிமையில் சம்பாஷிக்கவும் ஹிரா மலைக்குச் சென்று வந்தார்கள்.

அதன் உச்சியில் உள்ள குகையில் இருந்த வண்ணம் அல்லாஹ்வுடைய அருளின் அடையாளங்களையும், அவனது வியப்புக்குரிய படைப்பினங்களையும் நுட்பமான அமைப்பு களையும் அந்த அடையாளங்கள் மூலமான படிப்பினை களையும் ஆற அமரத் தியானித்து அல்லாஹ்வை முழுமையாக வணங்கக் கூடியவர்களாகவும் இருந்தார்கள்.[70]

**தமது நாற்பதாவது வயதில்**

முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி நாற்பது வயதை அடைந்த போது, மிக உயர்ந்த, உலகளாவிய இறைதூதை அடைந்து கொள்வதற்கு தயார் நிலையில் இருந்தார்கள்.[71]

ஒரு நாள், ஹிரா மலைக்குகையில் வழமை போன்று அவர்கள் தியானத்தில் ஈடுபட்டுக் கொண்டிருந்த வேளை யில், திடீரென, தமது ஆன்மாவையும் உயிரையும் முழுமையாக நிரப்பி விடக்கூடிய ஓர் ஒளியை உணர்ந்தார்கள். ஆழ்ந்த ஆச்சரியத்தில் மூழ்கித் திடுக்கிட்டார்கள்.

அந்த வேளையில் தான், வஹியுடைய மலக்காகிய ஜிப்ரீல் அலைஹிஸ் ஸலாம் இறைவனின் தூதைச் சுமந்த வண்ணம் அங்கு தோன்றினார்.

அவர்கள், நபிகளாரைப் பார்த்து, 'ஓதுவீராக!' என்று கூறினார்கள். அந்த தெய்வீக, ஆன்ம நிலையில் மூழ்கியவர் களாக சில நொடிப்பொழுதுகளைக் கழித்த நபிஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள், பின் தமது பார்வையைச் சுழற்றி அங்குமிங்கும் பார்த்தார்கள். அப்போது, முன்னர்

---

*70. பிஹாருல் அன்வார், பா.18, ப.206*
*71. மனாகிப், பா.1, ப.40*

கேட்ட அதே சப்தம் மிகத் தெளிவாகவும், கண்ணியமாகவும் இரண்டாம், மூன்றாம் தடவைகளாக ஒலித்தன[72]. "ஓதுவீராக!"

"படைத்த உமது இரட்சகனின் திருநாமத்தினால் ஓதுவீராக! அவன் இரத்தக் கட்டியிலிருந்து மனிதனைப் படைத்தான். ஓதுவீராக! உமது இரட்சகன் மிக்க சங்கையாளன். அவன் எழுதுகோலின் மூலமாக மனிதனுக்கு கற்றுக் கொடுத்தான். மனிதனுக்கு, அவன் அறியாதவற்றை யெல்லாம் கற்றுக் கொடுத்தான்" (அல்அலக் : 1-5)

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, வியத்தகு உணர்ச்சியிலும் உற்சாகத்திலும் உடல் முழுக்கத் திளைத்தவர் களைப் போன்று ஆகிவிட்டார்கள். மகத்துவமும், உயர்வும் கொண்ட மாபெரியவனான அல்லாஹ்வுடன் நேரடி தொடர்பு கொண்ட நிலையில், இத்தகைய உற்சாகம் ஏற்படாதிருப்பது எப்படி? இவ்வாறு தான், நபிகளாரின் தூய ஆன்மா, உறுதியான கடமையின் பாலும், மகத்தான செல்நெறியின் பாலும் இணைந்து கொண்டது.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, அவர்கள் தமது ஆன்மாவில் நுபுவ்வத்தின் வலிமையை உணர்ந்தார்கள். கலக்கம், திடுக்கம் எதுவுமின்றி அமைதியிலும் திருப்தியிலும் மூழ்கியவர்களாக அவர்கள் இருந்தார்கள்.

### ஹிரா குகையில் என்ன செய்தார்கள்?

இது, சில மேற்குல எழுத்தாளர்களினதும், கீழைத்தேய அறிஞர்களினதும் பதிலிறுக்கப்பட்ட ஐயமாகும். அவர்கள் கூறுவதாவது: ஹஸ்ரத் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, ஹிரா குகையில் கழித்த நாட்களில் தௌராத்,

---

*72. காமில், பா.5, ப.48, தபரீ, தாரீக், பா.3, ப.1148*

இன்ஜீல் மற்றும் முந்திய நபிமார்களின் வேதங்கள் மற்றும் மார்க்க வழிமுறைகளை வாசித்து, அவற்றிலே ஆர்வத்துடன் மூழ்கிப்போவார்கள். இந்த செயலில் ஆழ்ந்த மகிழ்ச்சியையும் அவர்கள் கண்டார்கள்.[73].

நபியவர்கள், தௌராத், இன்ஜீல், மற்றும் முந்திய மார்க்கங்கள் என்பவற்றை வாசித்தறிந்த பின் சுயமாகவே இஸ்லாம் என்ற மார்க்கத்தை அறிமுகப்படுத்தினார் என்பது அவர்களின் கூற்றாகும்.

ஆனாலும், இவ்வாதம் மிகத் தவறானது என்பதை நிறுவு வதற்கு அதிகமான ஆதாரங்களும் சான்றுகளும் உள்ளன. அவற்றில் சிலவற்றை இங்கு சுட்டிக் காட்டுகின்றோம்.

1. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, தௌராத், இன்ஜீல், மற்றும் ஏனைய வேதங்களிலிருந்தே அல்குர்ஆனை உருவாக்கினார்கள் எனின், அவ்வேதங்களின் பழைய, புதிய ஏற்பாடுகளில் குறிப்பிடப்பட்டிருக்கின்ற அம்சங்களுடன், அல்குர்ஆனில் வந்துள்ள சிந்தனைகளும் கருத்துகளும் உடன் படுவது அவசியமாகும். ஆனால், அல்குர் ஆனுக்கும், அவ்வேதங்களுக்கும் இடையிலே கடுமையான வேறுபாடுகளை யும் அடிப்படையான முரண்பாடுகளையும் நாம் காண்கிறோம்.

2. மொழிவளம், நடை, வியப்புக்குரிய அமைப்பு முறை என்பவை அடங்கிய அல்குர்ஆன் வசனங்கள், அவை இறங்கிய காலத்திலும், அதற்குப் பிற்பட்ட காலத்திலும், பெரும் இலக்கியவாதிகளையும், மொழிவல்லுனர்களையும் பிரமிப்புடன் தாழ்பணியும் நிலைக்குள்ளாக்கியிருக்கின்றன. இந்த ஒரு விடயம் மட்டுமே, நபியவர்கள், உலகின் சிருஷ்டிகர்த்தாவான

---

*73. அல் இ்.தார் இலா முஹம்மத் (ஸல்) வல் குர்ஆன், ப.19*

அல்லாஹ்வுடன் நேரடித் தொடர்பு கொண்டிருந்தார்கள் என்பதை நிறுவுவதற்கு போதுமானதாகும்.

மேலும், நபியவர்கள் பிரதி பண்ணுவதற்கு, அல்குர்ஆனின் சொல்வளமும், அற்புதமான அமைப்பு முறையும் ஏனைய எந்த வேதங்களிலும் காணக்கூடியதாக இல்லை என்பதும் ஐயத்திற்கிடமின்றி சுட்டிக் காட்டப்படத்தக்கதாகும்.

4. அல்குர்ஆன் இவர்கள் வாதிடுவதைப் போன்று பைபிளின் இரு ஏற்பாடுகளிலிருந்து தான் தொகுத்து தோற்றுவிக்கப்பட்டதென்றால், அல்குர்ஆனில் உள்ளவற்றுக்கு நிகரான வசனங்களையோ, பிறிதொரு அல்குர்ஆனையோ உருவாக்கப் பிரயத்தனப்பட்டுக் கொண்டிருக்கும் அவர்களுக்கு, தமது கைகளின் பாவனையிலுள்ளவையான தௌராத், இன்ஜீல் வேதங்களை நன்கு வாசிப்பதனூடாக தமது இலக்கை அடைந்து கொள்வதும், அல்குர்ஆனின் நிகரற்ற தன்மைக்கு முடிவு கட்டுவதும் இலகுவாக இருக்க முடியமல்லவா? ஆனால், அல்குர்ஆனைப் போன்ற ஒன்றையோ, ஒரு அத்தியாத்தையோ உருவாக்குவதற்கு அவர்களால் இயலாது.

5. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, எழுத்தறிவற்ற 'உம்மி'யாக இருந்தார்கள் என்பதும், நுபுவ்வத்திற்கு முன்னர் எழுதவோ, வாசிக்கவோ முடியாதவர்களாக இருந்தார்கள் என்பதும் வரலாற்று ரீதியாக உறுதிப்படுத்தப்பட்ட விடயமாகும்.[74]

இதன்படி, எவரிடமிருந்தும் கல்வியறிவு பெறாத, அறிவு, ஞானம் என்பவற்றை விட்டும் வெகுதூரமான ஒரு சூழலில் எழுத்தறிவற்ற ஒரு மனிதரினால் அறிவியலும், ஞானவெளிப்பாடுகளும் நிறைந்த ஒரு நூலை உருவாக்க முடியும் எனின்,

---

*74. மே.கு., ப.18*

அதனை ஏற்றுக் கொள்வது எந்த புத்தியுள்ள மனிதனுக்காவது முடியுமா?

இஸ்லாத்தின் மீதும், அதன் நபியின் மீதும் இத்தகைய அபாண்டமான குற்றச்சாட்டுகளை சுமத்தக் கூடியவர்களிடம் நாம் கேட்கின்றோம்; எழுத்தறிவற்ற ஒரு நபியினால் எவ்வாறு தௌராத்தையும் இன்ஜீலையும் வாசித்தறிய முடியும்? எதிர்கால முன்னறிவுப்புகளுடன், கடந்தகால செய்திகளையும், மறைவான விடயங்களையும் அல்குர்ஆனில் குறிப்பிடுவதற்கு அவரால் எப்படி சக்தி பெற முடியும்?

வஹி என்றால் என்ன?

நிச்சயமாக, அல்லாஹ்வுக்கும் அவனது தூதர்களுக்கு மிடையே ஏதோ ஒரு வகையில் தொடர்பு இருக்கும் என்பது ஐயத்திற்கிடமற்ற உண்மையாகும். அதனூடாக அவர்கள், தமது சிருஷ்டிகர்த்தாவான அல்லாஹ்விடமிருந்து உண்மைகளை விளங்கிக் கொள்கின்றார்கள்.

இந்தத் தொடர்பானது, நபிமார்களின் ஆன்மா, அவர்களது ஆன்மீக பலம் ஆகியவற்றைப் பரிபூரணப்படுத்து வது, மிக உயர்ந்த, உச்சநிலையிலான மனிதப் படித்தரத்தை அவர்கள் அடையச் செய்வது போன்றவற்றையே காரணமாகக் கொண்டிருக்கின்றது.

இங்கு நாம் கவனிக்க வேண்டிய விடயமாவது, அல்லாஹ்வுடனான தொடர்பு நபிமார்களிடமிருந்து களையப் பட்டுவிடுமானால், அற்புதம், உயர்நிலை என்பவற்றிலிருந்து எதுவும் அவர்களிடம் எஞ்சியிராது. ஏனெனில், அவர்கள் தம்மிடம் கொண்டிருக்கக் கூடிய புனிதத்துவம், அந்தஸ்து அனைத்தும் உருவாக்கப்பட்டிருப்பது அல்லாஹ்வுடனான

தொடர்புக்கு தகுதியானவர்களாகவும் பொருத்தமானவர்களாக வும் அவர்கள் இருப்பதனாலேயாகும்.

எனவே, நபிமார்கள் கூறுகின்ற, பிரசாரம் செய்கின்ற விடயங்கள் அனைத்தும் சந்தேகம், தெளிவின்மை முதலான வற்றை விட்டும் முற்றிலும் அப்பாற்பட்டவையாகவே இருக்கும். ஏனெனில், அவர்கள் இறை அறிவின் தன்மை, அதன் அடிப்படை, அனைத்தையும் தெளிவாக அறிந்தவர்களாவர்.

இது, பிரத்தியேக ஆத்மீக பயிற்றுவிப்புகள் மற்றும் வணக்கம் சார்ந்த செயற்பாடுகளை மேற்கொள்ளும் போது சிலருக்கு ஏற்படக்கூடிய, 'கஷ்ஃப்' எனப்படும் ஆன்மீக வெளிப்பாடு போன்றதல்ல.

கஷ்ஃபுடைய அறிவைப் பொறுத்த வரை, அது ஏற்படக்கூடியவர், அடிப்படையான அறிவிலுள்ளவ ராகவோ, மிக உயரிய ஆன்மீக நிலையை அடைந்தவ ராகவோ இருப்பதில்லை. பெரும்பாலும் எண்ணங்களும் சந்தேகங்களும் நிறைந்தவையாகவும் உண்மைக்குப் புறம்பா கவும் அமைந்து விடுவது சகஜமாகும்.

நபிமார்களின் வேத வெளிப்பாடு கஷ்ஃபு எனப்படும் ஆன்மீக வெளிப்பாட்டை விட பல்லாயிரம் படிகள் மேலான தாகும் என்பது தெளிவான விடயமாகும். ஏனெனில் நபிமார்கள் போதிக்கும் எந்த விடயத்திலும் தெளிவின்மை இருப்பதில்லை. பிறரிடம் விளக்கம் கோர வேண்டிய அவசியமும் அவர்களுக்கில்லை. இதன்படி, நிச்சயமாக வஹ்றி என்பது, நபிமார்களுக்கும் அல்லாஹ்வுக்கும் இடையிலான ஒரு தொடர்பு என்பதை நாம் அறிந்து கொள்கின்றோம். இந்தத் தொடர்பானது, சில நேரங்களில் ஒரு மலக்கினூடாகவும், சில நேரங்களில் நேரடியாகவும் இடம்பெறும்.

## வஹி, ஒரு வகை நோயா?

சில மேற்கத்தேய எழுத்தாளர்கள் -அவர்கள் காழ்ப்புணர்வும் எதிர்நோக்கும் கொண்டவர்கள் என்பதில் எமக்கு எவ்வித ஐயமுமில்லை - நிச்சயமாக முஹம்மத் மீது வஹி இறங்குவதாகக் கூறப்படுவது, ஹிஸ்டீரியா அல்லது வலிப்பு போன்ற ஒரு வகையான நோயேயன்றி வேறில்லை என்று கூறுகின்றனர்.[75] இந்த சந்தேகம் அடிப்படையற்றதாகும். அதனை தெளிவு படுத்துவதையும், விளக்குவதையும் அவசியமாக நாங்கள் கருதவில்லை. ஏனெனில், இந்த நோய், குறிப்பிட்ட அதன் அறிகுறிகளையும், இயல்புகளையும் அந்த நோயாளியிடத்தில் கொண்டிருக்கும். ஆனால், நபிகளாரிடத்தில் இதற்கான எவ்வித அறிகுறிகளையும் யாரும் காண முடியாது.

ஜோன் டெவன் போர்ட் கூறுகின்றார்; 'நிச்சயமாக முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வலிப்பு நோயால் பீடிக்கபபட்டிருந்தார்கள் என்ற சிலரது எண்ணம், உண்மையிலேயே எவ்வித அடிப்படையும் ஆதாரமுமற்ற புனைவாகும். இவை, மனிதர்களுக்கு நபிகளாரின் புதிய சன்மார்க்க அழைப்பின் மீதான நம்பிக்கைகளில் சந்தேகத்தை ஏற்படுத்துவதற்காகவும், நபியவர்களை விட்டும் கிறிஸ்தவ உலகை திசைதிருப்பி விடுவதற்காகவும், நபிகளாருடைய ஆன்மீக, ஒழுக்க உயர் நிலைகள் மற்றும் அவர்களது ஆளுமை என்பவற்றின் மீதான வியப்பு, பிடிப்பு என்பவற்றுக்கு சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொடுக்காது எப்போதும் சந்தேகத்தினூடாக அவர்களை பார்க்கச் செய்வதற்காகவும், எதிர்ப்போக்குக் கொண்ட சில கீழைத்தேயர்கள் மேற்கொள்கின்ற முயற்சிகளில் சிலவாகும்'[76]

---

*75. ஹிஸ்டீரியா என்பது ஒருவகை மனநோயாகும்.*
*76. அல் இ:.திஸார், ப.20*

நபிகளார் பற்றிய இந்த தவறான அபிப்பிராயத்தின் பொய்த் தன்மை பற்றி நாங்கள் கூறுவதாவது; ஹிஸ்டீரியா நோய்க்குள்ளான ஒரு மனிதரில் வெளிப்படக்கூடிய கஷ்டங்கள், கூக்குரலிடல், ஓலமிடல் முதலான எந்தப் பண்புகளையும், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களிடத்தில் யாரும் கண்டிருக்கவில்லை. வஹியினுடைய, அது இறங்குகின்ற மிகக் கடினமான நிலையில் கூட, அவை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களிடம் காணப்படவில்லை.

தவிரவும், ஹிஸ்டீரியாவினால் பீடிக்கப்பட்ட ஒரு மனிதர், அது அவரை விட்டு நீங்கி, இயல்பான நிலைக்குத் திரும்பிவிடுகின்ற போது, நோய்வாய்ப்பட்டிருந்த சந்தர்ப்பத்தில் அவர் பார்த்த, கேட்ட, பேசிய விடயங்களை ஞாபகப்படுத்திக் கொள்ள முடியாதவராகவே இருப்பார். ஆனால், வஹியுடைய நிலையோ இதற்கு முற்றிலும் மாற்றமானதாக இருக்கின்றது. நபியவர்களிடத்தில் அவதானிக்கப்பட்டதெல்லாம், வஹி இறங்கிக் கொண்டிருக்கும் போது அவர்கள் எதுவும் பேசமாட்டார்கள். அதிலிருந்து நீங்கிவிடுகின்ற போது, அச்சந்தர்ப்பத்தில் தமக்கு அறிவிக்கப்பட்டவற்றில் தாம் பார்த்த, கேட்ட விடயங்கள் அனைத்தையும் எடுத்துக் கூற ஆரம்பித்து விடுவார்கள்.

ஹிஸ்டீரியா பீடித்த நோயாளியைப் பொறுத்த வரை, பெரும்பாலும் உறுப்புகளும் மூட்டுகளும் இணைந்த நிலையில், பயங்கரமான தோற்றமுடையவரைப் போன்றும், கொலை செய்யப்படக்கூடிய அளவு கொடூரமான வேதனைக்குள்ளானவர் போன்றுமே காட்சி தருவார். இந்த நிலையில், குறிப்பிட்ட அந்த விடயம் பற்றியதாகவே அவரது பேச்சு அனைத்தும் அமைந்திருக்கும். ஆனால், பதினான்கு நூற்றாண்டுகள் கடந்து விட்ட இற்றை வரை, மனித இயல்புக்கும், இயற்கைக்கும் முரணான, பலவீனமான எக்குறைபாட்டையும் கண்டு கொள்ள

முடியாத இஸ்லாத்தின் சட்டதிட்டங்களைப் போன்ற, நேர்வழி மிக்க கற்பித்தல்கள், மிகச் சரியான சட்டதிட்டங்கள், அறிவியல் அம்சங்கள் முதலானவற்றைப் பொதிந்ததாக பேச்சுகளையோ, வார்த்தையாடல்களையோ அமைத்துக் கொள்ளக்கூடிய எந்தவொரு ஹிஸ்டீரியா நோயாளியும் இதுவரை அறியப்படவில்லை.

### வஹியும் நவீன விஞ்ஞானமும்

சமகால உலகில் வெளிப்படுத்தப்பட்டுள்ள அறிவியல் கண்டுபிடிப்புகளும், முன்னேற்றங்களும் -சிலர் உருவகிப்பதற்கு மாற்றமாக- இஸ்லாத்தின் ஸ்தானத்தில் எவ்வித பாதிப்புகளையும் ஏற்படுத்தவோ, அதன் பெறுமதியில் எவ்வித குறைபாடுகளையும் உண்டாக்கவோ இல்லை.

மாறாக, அவை இஸ்லாத்தினது நிலையான இருப்பிடத்தை உறுதிப்படுத்தியதோடு, அதன் அடித்தளத்தையும், நிர்மாணத்தையும் மேலும் வலுப்படுத்தவும் உதவின.

செய்மதி, கம்பியில்லாத் தொடர்பு மற்றும் தொலைபேசி இணைப்புகள் போன்ற இவையனைத்தும், வஹி என்ற அம்சம், இயல்பான மனிதச் செயன்முறைகளுக்கும் படைப்பின் இரகசியங்களுக்கும் எப்போதும் முரண்படக்கூடியதல்ல என்ற உண்மையை ஊர்ஜிதம் செய்கின்றன. மனிதர்களுடைய இப்புதிய கண்டுபிடிப்புகள் எவையும் அல்லாஹ்வுடைய தொடர்பாடல்களுக்கு நிகராக முடியாது என்ற விடயம் ஒருபுறமிருக்க, மனிதர்களுடைய நலனுக்காக இத்தகைய தொடர்புகளை ஏற்படுத்தி வைத்திருக்கும் அல்லாஹ், தனக்கும் நபிமார்களான தனது தூதுவர்களுக்குமிடையே பிரத்தியேகமான தொடர்பை ஏற்படுத்திக் கொள்வதற்கான சாத்தியப்பாட்டை அடைந்து கொள்ளவும் ஆற்றலுள்ளவனாகவே இருப்பான் என்பதில் ஐயமிருக்க முடியாது.

மற்றொரு புறம், ஆவிகளுடன் உரையாடுதல், அபூர்வ காந்த சக்தி, டெலிபதி எனப்படும் தொலைத் தகவல் போன்ற அறிவியலின் கண்டுபிடிப்புக்கள். இனியும் நமது உலகின் யதார்த்தம் என்பது புலனுணர்வுகளுக்கு உட்பட்ட சடப்பொருட்களுடன் மட்டுமே வரையறுக்கப்பட்டுள்ளது என்ற எண்ணத்தை மாற்றியமைக்கப் போதுமானதாகும்.

இறுதியாக, நிச்சயமாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, மனிதர்களுக்கு வழிகாட்டவும், நேர்வழிப்படுத்தவும், வழிகேடுகள், நெறிபிறழ்வுகளிலிருந்தும் குழப்பம், அறியாமை என்பவற்றின் இருளிலிருந்தும் அவர்களை விடுவிக்க அல்லாஹ்வினால் தேர்ந்தெடுக்கப்பட்டவர் என்பதையும், இந்த உயரிய சிந்தனைகள், மகத்துவம் மிக்க வாழ்வியல் திட்டங்கள் அனைத்தும் வஹியின் மூலமாகவே அவர்களை வந்தடைந்தன என்பதையும் அறிவும் வரலாறும் நிரூபணம் செய்கின்றன.

இஸ்லாமிய உலகம், தனது மாபெரும் தலைவரும் இறைத்தூதருமான முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களையிட்டு பெருமிதம் கொள்கின்றது. ஏனெனில், அவர்களது இஸ்லாமிய தூது, அவர்களது காலத்திற்கும் உலகத்திற்கும் மட்டும் பயனளிக்கக் கூடிய அடிப்படையாக இருக்கவில்லை. மாறாக, இன்றைய நவீன உலகு வரையான சுமார் பதினான்கு நூற்றாண்டுகளாக, நேர்வழியிற் செலுத்தும் சிறந்த வழிகாட்டியாக அது செழிப்புடன் உயிர்வாழ்கிறது. மறுமை வரையும் இவ்வாறே நிலைபெற்றிருக்கும்.

நவீன சிந்தனையாளர்களும் அறிஞர்களும் இஸ்லாத்தின் மகத்துவத்தையும் அதன் ஆழத்தையும் அதன் நுட்பங்களையும் சட்டதிட்டங்களின் சீர்நிலையையும் அதிகமாக பயன்படுத்திக் கொள்வோராக மாறிவிட்டார்கள்.

# 8. பிரசார வழிமுறை

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, ஹிரா மலையிலிருந்து இறங்கி, தமது வீட்டை நோக்கி நடக்க ஆரம்பித்த போது, வேறொரு உலகத்தில் இருப்பது போல் தம்மை உணர்ந்தார்கள். ஏனெனில், மலைக்குச் செல்வதற்கு முன்னர் அவர்கள் நபியாக இருக்கவில்லை. இப்போது, உலகின் சிருஷ்டிகர்த்தாவான அல்லாஹ்வுடன் தொடர்பு கொண்டவர்களாகவும், புஹைரா உள்ளிட்ட மதகுருமாரும் அறிஞர்களும் தெரிவித்திருந்த நன்மாராயத்தையும் இறைதூதையும் சுமந்தவராக ஆகிவிட்டிருந்தார்கள்.

இப்போது, மிக முக்கியத்துவம் வாய்ந்த ஒரு மாபெரும் பொறுப்பு தமது தோளின் மீது சுமத்தப்பட்டுள்ளது என்பதை யும், அதனை பொறுப்புணர்ச்சியுடன் மேற்கொள்வது அவசியம் என்பதையும் அவர்கள் அறிந்தார்கள். அச்சமயத்தில் அவருக்கிருந்த கவலை, உண்மையில் தமது பாரிய பொறுவ்பை நிறைவேற்றுவது சம்பந்தமானதாகவே இருந்தது.

இந்த சிந்தனையானது, தாம் ஏற்றுள்ள பொறுப்பு மிகவும் கனதி வாய்ந்தது என்பதையொட்டியதாக மட்டும் இருந்ததேயன்றி, சிலர் எழுதி வைத்திருப்பது போன்று அவர்கள் தாம் நபியாக ஆகிவிட்டதை அறிந்து கொள்ளாதிருந்ததனால் அல்லது தமக்கு ஏதோ பீடித்திருக்கும் என்று அச்சம் கொண்டிருந்ததனால் அன்று. இவ்வாறான சிந்தனைகள் நபிகளாருக்கு ஏற்படுவதற்கு எவ்விதத்திலும் நியாயமில்லை. ஏனெனில், ஏற்கனவே பல நபர்களிடமிருந்தும் அவர்கள் கேட்டு அறிந்து வைத்திருந்த அவர்களது நபித்துவம், நன்மாராயம் பற்றிய விடயங்களும், 'முஹம்மதே! நீங்கள் அல்லாஹ்வின் தூதர்'[77] என்று நன்மாராயம் கூறிய ஜிப்ரீல் (அலை) அவர்களை, நபிகளார் கண்டதும், இவையெல்லாமே, தாம் இச்சமூகத்தின் நபி என்பதை அவர்கள் உறுதியாக அறிந்து கொள்வதற்குப் போதுமான விடயங்களாக இருந்தன.

அத்தோடு, அல்லாஹ், மனிதர்களை நேர்வழிப் படுத்துவதற்காக ஒரு நபியை தெரிவு செய்கின்ற போது, தான் அல்லாஹ்வின் புறத்திலிருந்து நபியாக அனுப்பப்பட்டுள்ளேன் என்பதை அவர், உறுதியாக அறிந்து, அமைதி பெறுவதற்கான தெளிவான சான்றுகளையும் அத்தாட்சிகளையும் அவருக்குக் காண்பிப்பது அவசியமாகும். அந்த நபி, தெளிவான உள்ளத்துடனும், ஆழமான உறுதியுடனும், வலுவான நம்பிக்கையுடனும் சீர்திருத்தப் பாதையிலும், நேர்வழியிலும் முயற்சிகளை மேற்கொள்ள பலம் பெறவேண்டும் என்பதற்கான ஏற்பாடே இதுவாகும்.

இதன்படி, நபி ஸல்லல்லாஹுஅலைஹி வஆலிஹி ஹிரா குகையில் முதன் முதலாக ஜிப்ரீல் (அலை) அவர்களை சந்தித்த போது, தாம் நபியாக ஆகிவிட்டதை அறிந்து

---

77. *ஸீரா இப்னு ஹிஷாம், பா.1, ப.2371*

கொள்ளவில்லையென்றும் அவர்களுக்கு பலமான நடுக்கமும் திடுக்கமும் ஏற்பட்டிருந்தது என்றும் அவர்கள் கதீஜா நாயகியாரிடம் விரைந்து சென்றார்களென்றும், கதீஜா நாயகி அவர்களே, நபிகளாரைத் தேற்றி, நீங்கள் இந்த சமூகத்தின் நபியாக வருவீர்களென ஆறுதல் கூறினார்களென்றும் கூறப்படுகின்ற விளக்கங்கள் அடிப்படையற்றவை என்பது புலனாகிறது.[78]

### நபிகளாரைக் காத்திருந்த அன்னை

வஹ்றி இறங்கியமை உள்ளிட்ட, ஹிரா குகை நிகழ்வுகள், நபியவர்கள் தமது வீட்டுக்குத் திரும்பிச் செல்வதைத் தாமதப்படுத்தின. பாசமிக்க கணவரது தாமதம் கதீஜா நாயகிக்கு கவலையை ஏற்படுத்திற்று. நீண்ட தாமதத்திற்குப் பின்னர் அன்புக் கணவர் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வீட்டினுள் நுழைவதையும் அவர்களிடத்தில் ஏதோ ஒரு மாற்றத்தின் பிரதிபலிப்பு தெளிவாகத் தெரிவதையும் அவதானித்த கதீஜா அவர்கள், தாமதம் பற்றி வினவினார்கள்.

நபியவர்கள், அன்றைய நாள் இடம்பெற்ற அனைத்து விடயங்களையும் தமது அருமை மனைவியிடம் எடுத்துக் கூறினார்கள். கதீஜா நாயகி அவர்கள் இது போன்ற ஒரு நாளையே நீண்ட காலமாக எதிர்பார்த்திருந்தார்கள். ஏனெனில், கதீஜா நாயகியவர்கள், நபியவர்களிடத்தில் ஒரு பெரும் மகத்துவம் இருக்கின்றது என்று உறுதிப்படுத்திய கிறிஸ்தவ, யூத அறிஞர்களின் நன்மாராயத்தை அறிந்திருந்தது போலவே, நபியவர்கள் சிரியாவில் வர்த்தக நடவடிக்கையில் ஈடுபட்டிருந்த போது, அவர்களைக் குறித்து கிறிஸ்தவ பாதிரி

---

*78. ஹய்கல், ப.134*

ஒருவர் 'இவர் இந்த சமூகத்தின் நபியாவார்'[79] என்று கூறியதாக தமது பணியாளான மைஸராவின் பேச்சிலிருந்தும் அறிந்து, அவ்விடயத்தில் தெளிவுபெற்றவராக இருந்தார்கள்.

இவையனைத்திற்காகவும், கதீஜா அவர்கள், முந்திய வேதங்களைப் பயின்ற கிறிஸ்தவராக இருந்த தமது சிறிய தந்தையின் புதல்வரான வரகா இப்னு நௌபலிடம் எழுந்து சென்று, நபியவர்கள் தாம் கண்டதாக, கேட்டதாக தம்மிடம் சொன்னவை அனைத்தையும் அவரிடம் கூறினார்கள். அவற்றைக் கேட்ட வரகா இவ்வாறு கூறினார்; 'இந்த வரகாவுடைய உயிர் எவன் வசம் இருக்கின்றதோ அவன் மீது ஆணையாக, நபி மூஸா அவர்களிடம் வந்த ஜிப்ரீல் தான் முஹம்மத் அவர்களிடத்திலும் வந்திருக்கிறார். நிச்சயமாக முஹம்மத் இந்த சமூகத்தின் நபியாவார்.'[80]

அன்னை கதீஜா நன்கு புரிந்து கொள்வதற்காக ஹஸ்ரத் ஜிப்ரீலின் வருகை மற்றும் வேத வெளிப்பாட்டின் சில அடையாளங்களையும் வரகா விளக்கிக் கொடுத்தார்.[81] அங்கிருந்து தமது வீட்டுக்குத் திரும்பி வந்த கதீஜா நாயகி, நபியவர்களிடத்தில் அவர்களது தூது தொடர்பாக உரையாடினார். பின்னர், இறைதூது பற்றி தனது தூய விசுவாசத்தைப் பிரகடனப்படுத்தினார்கள். முதன்முதலில் இஸ்லாத்தை ஏற்றவர் என்ற பெருமையையும் பெற்றுக் கொண்டார்கள்.

### நபியை ஏற்ற முதல் ஆண், அலீ

அரேபிய தீபகற்பத்தை கடும் பஞ்சம் வாட்டிய பொழுது ஹஸ்ரத் அபூதாலிபின் பொருளாதாரத்தையும் அது

---

*79. அஃலாமுல் வரா, ப.47*
*80. ஸீரா இப்னு ஹிஷாம், பா.1, ப.238*
*81. அல் மனாகிப், பா.1, ப.42*

கடுமையாகப் பாதித்தது. ஆதனால், அன்னாரின் சுமையை ஓரளவுக்கேனும் குறைக்கும் பொருட்டு அண்ணல் நபியவர்கள் சிறுவராக இருந்த ஹஸ்ரத் அலீயைத் தாமே பொறுப்பேற்றார்கள். ஒரு பாசமிக்க தந்தையினதும் தாயினதும் அரவணைப்பை நபிகளாரும் அன்னை கதீஜாவும் சிறுவர் அலீக்கு வழங்கிப் பயிற்றுவித்தனர்.[82]

அபார ஆற்றல்களும் கூரிய அறிவும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற அலீ, அண்ணலாருக்கு முழுமையாகக் கீழ்ப்படிந்து விசுவாசமாக நடந்து வந்தார்கள். வீட்டில் நடக்கும் விவகாரங்களில் எப்போதும் பங்கேற்றுக் கொண்ட அவர் நபிகளாரின் நம்பிக்கை, வாக்குமாறாமை போன்ற உன்னத பண்புகளை நன்கு கண்டு கொண்டார்கள். அன்னை கதீஜாவைத் தொடர்ந்து, அவர்களோடு பக்கத்தில் இருந்த ஹஸரத் அலீ அலைஹிஸ் ஸலாம், முழுமையான தெளிவுடன் நபியின் நுபுவத்தை ஏற்றார்கள். அதன் மூலம் இமாம் அலீ முதன் முதல் விசுவாசம் கொண்ட ஆண் ஆகிறார். அப்போது அவருக்கு வயது பத்து.[83]

### தொழுகை கடமையாதல்

அல்லாஹ்வின் ஏகத்துவத்தை அங்கீகரித்து அவனை மாத்திரம் வணங்கி அடிபணிவதை ஏற்று விசுவாசித்ததன் பின்னர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி மீதும் முஸ்லிம்கள் மீதும் அல்லாஹ் கடமையாக்கிய முதன்மையான மார்க்கக் கடமை தொழுகையாகும்.

மனிதனுக்கும், படைப்பாளனுக்கும் இடையில் தொடர்பை உறுதி செய்வதற்கும் கணக்கிட முடியாத

---

*82. இப்னு ஹிசாம், பா.1, ப.246, பிஹார், பா.18, ப.208*
*83. மே.கு., பா.1,ப.245, பிஹார், பா.18, ப.188, தபரீ பா.3,ப.1160*

அல்லாஹ்வின் அருட்கொடைகளுக்காக அவனுக்கு நன்றியறிதல் மேற்கொள்ளவும் உரிய சிறந்த சாதனம் தொழுகையாகும். இதனாலேயே, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, தமது உபதேசங்களிலும் தொழுகையின் முக்கியத்துவத்தை குறிப்பாக எடுத்துரைத்துள்ளார்கள். ஹதீஸ்களில் வந்துள்ளதாவது; 'தொழுகை, மார்க்கத்தின் தூணாகும்"[84] 'தொழுகையை அலட்சியம் செய்வோர் மறுமையில் எமது பரிந்துரையைப் பெற்றுக் கொள்ளமாட்டார்."[85]

அல்லாஹ், ஜிப்ரீல் அலைஹிஸ் ஸலாம் அவர்களூடாக, தொழுகையின் சிறப்பையும் அதனை நிறைவேற்றும் முறையையும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களுக்கு அறிவித்திருந்தான். நபியவர்கள், அவற்றை ஹஸரத் கதீஜா, ஹஸரத் அலீ ஆகிய இருவருக்கும் கற்றுக் கொடுத்தார்கள். அவர்களிருவரும் தொழுகையில் இணைந்து கொள்ள நபியவர்கள், அவர்களுக்கு இமாமாக நின்று முதன் முதலாக தொழுகையை நடாத்தினார்கள்.[86]

### மூன்று வருடங்கள்

முதற்கட்டப் பணியாக, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, தமது இரகசிய பிரசாரத்தை ஆரம்பித்தார்கள். இது மூன்று வருடங்கள் நீடித்தது. ஏனெனில், பொதுவாக அரபு தீபகற்பம் முழுவதும், குறிப்பாக மக்கா நகரம் இஸ்லாத்தின் பகிரங்க அழைப்பை ஏற்றுக் கொள்ளத் தயாரான நிலையில் இருக்கவில்லை. அந்நகர மக்கள், அல்லாஹ்வுக்கு இணைவைப்பதிலும், சிலைவணக்கத்திலும் நீண்ட காலங்களைக் கழித்திருந்தார்கள்.

---

*84. வஸாயில், பதிப்பு 2, ஹி.1384, பா.3, ப.17*
*85. மே.கு.*
*86. அஃலாம், ப.37. அது இரண்டு ரக்அத் தொழுகை.*

நபியவர்கள், ஆரம்பத்திலேயே இஸ்லாமிய அழைப்பை பகிரங்கப் படுத்தியிருப்பார்களானால், அவர்களது பரிசுத்த மான அடிப்படை நோக்கிலிருந்து அவர்களைத் திருப்பிவிடு மளவு கடினமான எதிர்ப்புகளையும் பிரச்சினைகளையும் எதிர் நோக்கியிருப்பார்கள். இந்நிலையில், பலதரப்பட்ட சிலைகளை வணங்கிக் கொண்டிருந்த இணைவைப்பாளர்கள் தம்மைப் பார்க்கும் படியாக, ஒரே சிருஷ்டிகர்த்தாவான அல்லாஹ்வுக்கு நன்றி தெரிவிப்பது, அவனைப் புகழ்வது, அவனை பிரார்த்திப் பது முதலானவற்றைப் பிரதிபலிக்கக்கூடியதும் ஆன்மீக ஞானங்களின் மொத்த வடிவமாகத் தென்படக்கூடியதுமான தொழுகையை நிலைநாட்டுவதற்காக நபியவர்கள் எழுந்து நிற்பார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களும், அவர்களுடன் ஹஸ்ரத் அலீ மற்றும் கதீஜா நாயகி ஆகியோரும், மஸ்ஜிதுல் ஹராமைப் போன்று மனிதர்கள் அதிகம் ஒன்று சேரக்கூடிய இடங்களுக்குச் சென்று, அங்கு எல்லோருக்கும் முன்னிலையில் கூட்டாக தொழுகையை நிறைவேற்றுவார்கள். இந்த நடைமுறை, ஒருவனான அல்லாஹ்வை வணங்குவதன் பால் மனிதர்களுக்கு அழைப்பு விடுப்பதில் செயல்ரீதியான நடவடிக்கையாக அமைந்தது.[87]

அஃபீப் என்பவர் குறிப்பிடுகின்றார்; 'நான் ஒரு வியாபாரியாக இருந்தேன். ஹஜ்ஜுடைய காலத்தில் மக்கா வுக்கு வந்து, அப்துல் முத்தலிபின் புதல்வரான அப்பாஸிடத் தில் சென்றேன். நாங்கள் அவரிடத்தில் அமர்ந்து கொண்டி ருந்த போது, ஒரு வாலிபர் அங்கு வந்தார். தனது பார்வையை வானத்தின் பக்கம் உயர்த்திவிட்டு, பின் கஃபாவை முன்னோக்கித் தொழ ஆரம்பித்தார். அதே சமயத்தில் ஒரு சிறுவர் வந்து, அவரது வலது பக்கத்திலும்,

---

*87. தாரீஹுத்தபரி பா.3, ப.1122*

ஒரு பெண் வந்து அவருக்குப் பின்னாலும் நின்று அவருடன் இணைந்து தொழுகையை மேற்கொண்டனர். நான் கேட்டேன்; "அப்பாஸே! இது என்ன மார்க்கம்? நான் இதை அறியவில்லையே?"

அப்பாஸ் கூறினார்; "இந்த வாலிபர் அப்துல்லாஹ்வின் புதல்வர் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி. அல்லாஹ் தான் வானங்களையும் பூமியையும் படைத்ததாகவும், அந்த அல்லாஹ் மக்களை நேர்வழிப்படுத்துவதற்காக தன்னை அனுப்பியுள்ளதாகவும் உறுதி கொண்டுள்ளார். இப்போதைய நிலையில், அவரது மார்க்கத்தில் மூன்று பேரைத் தவிர வேறு யாருமில்லை. அந்தப் பெண் அவரது மனைவி கதீஜா பிந்து குவைலித். அந்தச் சிறுவர், அவரது சிறிய தந்தையின் புதல்வர் அலீ இப்னு அபீதாலிப்."[88]

முஸ்லிம்களின் எண்ணிக்கை படிப்படியாக அதிகரிக்கும் வரை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி இதே நிலையையே தொடர்ந்து பேணிக் கொண்டிருந்தார்கள். முஷ்ரிகீன்கள் கிளர்ந்தெழுந்த போதும் அவர்களது அழைப்புப் பணி விரிவாக்கம் பெற்றது. இதன் பின், பகிரங்க இஸ்லாமிய அழைப்புக்கான களம் தயாராகி விட்டமையினால், அழைப்புப் பணியை பகிரங்கப்படுத்துமாறும், உறுதியுடன் அதனை முன்கொண்டு செல்லுமாறும் அல்லாஹ்விடமிருந்து நபியவர்களுக்கு கட்டளை வந்தது.

## நெருங்கிய உறவினர்களுக்கான அழைப்பு

முஸ்லிம்களின் எண்ணிக்கை அதிகமாகி, இஸ்லாமிய தூதுத்துவத்தை பகிரங்கப்படுத்துவதற்கு உதவியான சூழ்நிலையும் உருவாகி விட்டமையினால், நபியவர்களின் முதற்கட்டப்

---

*88. அஃலாம், ப.38, (ஹி.1390), தபரீ, பா.3, ப.1162*

பணி, அவர்களது நெருங்கிய உறவினர்களுக்கு இஸ்லாத்தின் பால் அழைப்பு விடுப்பதாக இருந்தது. இது தொடர்பில் கீழ்க்காணும் திருமறை வசனம் இறங்கியது; "உங்களது நெருங்கிய உறவினர்களுக்கு எச்சரிக்கை செய்வீராக!" (அஷ்ஷுஅரா: 214) இஸ்லாத்தின் பாலான முதலாவது பகிரங்க அழைப்பு நபியவர்களின் குடும்பத்தை நோக்கியதாக இருந்தமைக்கு இரு காரணங்களை முக்கியமாகக் குறிப்பிடலாம்.

ஒன்று, முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, தமது புதிய மார்க்கத்தின் பால் தமது உறவினர்களை அழைக்காது, பிறருக்கு எச்சரிக்கை செய்யச் செல்வது ஏன்? அவரது அழைப்பில் நன்மையும் ஆரோக்கியமும் இருந்தால், அவற்றை விட்டும் அவரது குடும்பத்தினரையும் உறவினர்களை யும் ஏன் தடுக்க வேண்டும் என்று சிலர் கேட்காமல் இருப்பதற்காக.

அடுத்தது, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, தமது தூதுத்துவத்தை பரப்புகின்ற விடயத்திலும், தம்மை விட்டும் அறிவிலிகளின் எதிர்ப்புகளைத் தடுக்கும் விடயத்திலும் ஒத்தாசையாக இருக்கக்கூடிய பாதுகாப்பு தேவைப்பட்டதால்.

இதனால், இந்த வசனம் இறங்கியதன் பின், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, ஒரு விருந்தை ஏற்பாடு செய்யுமாறும் அதற்கு தமது குடும்பத்திலுள்ள சுமார் நாற்பது நபர்களை அழைக்குமாறும் ஹஸ்ரத் அலீயைப் பணித்தார்கள்.

விருந்துக்கு அனைவரும் சமுகமளித்த போது, நபியவர்கள் குறிப்பிட்டளவு உணவைக் கொண்டு வந்தார்கள். அனைவரும் வயிறு நிரம்ப அவ் உணவை உட்கொண்ட போதும், அதிலிருந்து சிறிதளவும் குறையாதிருப்பதைக் கண்டதும் எல்லோரும் வியப்பும் திடுக்கமும் கொண்டனர்.

ஆனால், அபூலஹபோ அந்த ஒன்றுகூடலைக் குழப்பி விட்டதோடு, இது சூனியக்கார வேலை என்றும் கூறினார். நிச்சயமாக சூனியம் என்பது, யதார்த்தமாகவும் உண்மையாக வும் மனிதர்களை வயிறு நிரம்பச் செய்ய முடியாது என்பதையும், சூனியமானது, பரிபூரணமான வெளிப்பாட்டு அம்சமாக அமையாது என்பதையும் மறந்ததாகவே அவரது பேச்சு அமைந்திருந்தது.

இதனால், அந்தத் தடவை நபியவர்களால் எதையும் பேச முடியாது போனது. எனினும், தொடர்ந்து வந்த நாள், மீண்டும் அவர்களுக்கு அழைப்பு விடுத்து, முந்திய நாளின் அமைப்பைப் போலவே விருந்துமளித்த பின், உரையாற்றுவதற் காக அவர்கள் மத்தியில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி எழுந்து நின்றார்கள்.

"அப்துல் முத்தலிபின் சந்ததியினரே! அல்லாஹ் உங்களுக்கு மத்தியில் எச்சரிக்கை செய்யக் கூடியவராகவும் நன்மாராயம் கூறக்கூடியவராகவும் என்னை அனுப்பியுள்ளான். அல்லாஹ் மீது ஆணையாக, நான் உங்களுக்குக் கொண்டு வந்துள்ளதை விடச் சிறந்த ஒன்றை, அரபியரில் வேறெவரும் கொண்டு வந்திருக்க முடியாது. நான், இம்மைக்கும் மறுமைக்கும் சிறந்த ஒன்றை உங்களிடத்தில் கொண்டு வந்துள்ளேன். நிச்சயமாக எனது இரட்சகன், உங்களுக்கு அவன் பால் அழைப்பு விடுக்குமாறு என்னைப் பணித்துள் ளான். இந்தப் பணியின் மீது எனக்கு மந்திரி போன்று பக்கபலமாகவும், எனது சகோதரராகவும், வாரிசாகவும், பிரதிநிதியாகவும் இருக்கக்கூடியவர் யார்?"

அனைவரும் மௌனமாக இருந்தார்கள். ஆனால், ஹஸ்ரத் அலீ மாத்திரம் -சிறுவராக இருக்கும் நிலையிலே- உத்வேகத்துடன் எழுந்தார்கள். "அல்லாஹ்வின் தூதரே! நான் தங்களுக்கு உதவியாக இருக்கின்றேன்; உங்களை

எதிர்ப்பவரை நான் எதிர்ப்பேன்' என்று கூறினார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, ஹஸ்ரத் அலீயை அமரச் செய்துவிட்டு, மீண்டும் தமது கேள்வியை முன்வைத்தார்கள். இவ்வாறு மூன்று முறை கேட்டார்கள். ஒவ்வொரு தடவையும் ஹஸ்ரத் அலீ மட்டுமே எழுந்து நின்றார்கள்.

அப்போது தான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, ஹஸ்ரத் அலீயைப் பார்த்துச் சொன்னார்கள்: "இவர் தான் என்னுடைய சகோதரர், என்னுடைய வாரிசு, உங்கள் மத்தியில் என்னுடைய பிரதிநிதி. ஆகவே, அவருக்கு செவிசாயுங்கள், வழிப்படுங்கள்."[89]

அதே நாளில், மனிதர்களில் குறிப்பிட்ட தொகையினர் தமது இஸ்லாத்தை பகிரங்கப்படுத்திக் கொண்டார்கள்.[90]

எனினும், அறியாமையும் பிடிவாதமும் நபியவர்களை விசுவாசம் கொள்வதற்கு, ஆரம்பத்தில் அவர்களது குடும்பத் தினரையும் உறவினர்களையும் விடவில்லை. அந்த ஒன்று கூடல், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களுக் கான பாதுகாப்பைப் பொறுத்தவரை பயன்பாடு எதுவுமற்றதாக இருந்த போதிலும், அதிலே இரண்டு விடயங்கள் தெளிவாகி யிருந்தன.

ஒன்று, சிறிதளவு உணவின் மூலமாக நாற்பது பேருக்கு வயிறாற உணவளித்ததன் அடிப்படையில் நபியவர் களின் அற்புதத் தன்மை. இரண்டு, ஹஸ்ரத் அலீயுடைய விடயத்தில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி கூறிய சொற்கள். ஹஸ்ரத் அலீதான், எவ்வித முரண்பாடுமின்றி, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களுடைய வாரிசும்

---

*89. துபரி, பா.3, ப.1171-1173, அல் கதீர், பா.2, ப.278*
*90. யஃகூபீ, பா.2, ப.22*

பிரதிநிதியும் என்பதும் அவர்கள் தான் நபியவர்களுக்குப் பின் இஸ்லாமிய தூதுத்துவத்தின் தலைமைத்துவத்தைத் தொடர்வதற்காக தயார்படுத்தப்பட்டவர்கள் என்பதும் சந்தேகத்திற்கிடமின்றி தெளிவாகின.

இவ்வாறு பகிரங்கமான பிரசார நிலைக்கு இஸ்லாமிய அழைப்பு திரும்புவதற்கான ஆயத்தங்கள் மேற்கொள்ளப் பட்டன. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, சோர்வையும் சடைவையும் அறிந்திராத தமது ஆன்மாவை அதற்கான முயற்சியிலும் தொடர்பாடலிலும் ஈடுபடுத்திக் கொள்ள ஆரம்பித்தார்கள். அவர்கள், தமது பரிசுத்தமான பணியை நிறைவேற்றுவதை விட்டு சில நொடிப்பொழுதேனும் பின்வாங்கி விடவில்லை. அதேநேரத்தில், இஸ்லாத்தின் கொடி கண்ணியப்படுத்தப்பட ஆரம்பித்தது. சத்தியம் முன்னோக்கிச் செல்லத் தொடங்கியது. அதன் ஒளி, இருளை ஒழிப்பதற்காக பிரகாசமாக ஒளிரலாயிற்று.

## 9. பகிரங்க அழைப்பு

நுபுவ்வத்திற்குப் பின், மனிதர்களை இஸ்லாத்தின் பால் இரகசியமாக அழைத்துக் கொண்டிருந்த நிலையில் மூன்று வருடங்கள் கடந்து சென்று விட்டன. அறியாமையின் குழப்பங்கள் அழுக்கடைந்து போயிருந்த, இணைவைப்பினதும் வழிகேட்டினதும் சேற்றில் மூழ்கிப் போயிருந்த மக்களை மீட்டெடுக்கும் பணியில் நபிகளார் எந்த முயற்சியையும் விட்டு வைக்கவில்லை. அன்பு, மென்மை, இரக்கம், இனிமையான பேச்சு என்பவையே, மனிதர்களின் உள்ளங்களை அல்லாஹ் ஒருவனையே வணங்குவதன் பாலும், ஏகத்துவத்தின் பாலும் ஈர்க்கக் கூடிய சாதனங்களாக அமைந்தன.[91]

---

*91. இப்னு ஹிஷாம், பா.1, ப.262, யாகூபி, பா.2, ப.19*

எனினும், இந்த இரகசிய படித்தரமானது நீண்டகாலம் இருக்கவில்லை. ஏனெனில், இஸ்லாம் உலகளாவிய தூதாகும். அது, மனிதர்கள் அனைவரையும் சென்றடைவது அவசியம்.

"(நபியே!) உலகத்தார் அனைவருக்குமான அருளாகவே உம்மை நாம் அனுப்பியுள்ளோம்" (அன்பியா: 107)

எனவே, அழைப்பை பகிரங்கப்படுத்துவதும், உயர்வான அவர்களது தூது அருளப்பட்டுள்ள நோக்கங்களை வெளிப் படுத்துவதும் அவசியமாக இருந்தன.

## ஸபா மலையின் மீது

அல்லாஹ், அழைப்புப் பணியை பகிரங்கப்படுத்துமாறும் அனைத்து கோத்திரத்தாரிடையேயும் அதனை பரப்புமாறும் நபியவர்களைப் பணித்ததன் பின்னால், அக்கட்டளைக்கு அடிபணிந்த நபி (ஸல்) அவர்கள், தமது அழைப்பின் யதார்த்தத்தை பொதுவாக அனைவருக்கும் தெளிவுபடுத்த விரும்பினார், உயர்வான இடத்திலிருந்து உரையாற்ற வேண்டுமென்பதற்காக ஸபா மலையின் மீது ஏறினார்கள்.

அங்கு நின்றவாறு, "மக்களே!" என உயர்ந்த சப்தத்தில் அழைத்தார்கள்.[92] குறைஷியர் அவ்விடத்தில் ஒன்றுகூடி, "என்ன விடயம்?" என்று வினவினர்.

"எதிரிகள் உங்களைத் தாக்க வந்து கொண்டிருக்கின்றார்கள் என்று நான் கூறினால், நீங்கள் அதனை உண்மையென ஏற்றுக் கொள்வீர்களா?" என்று நபியவர்கள் குறைஷியரைப் பார்த்துக் கேட்டார்கள்.

---

*92. ஒரு முக்கிய விடயத்துக்கு மக்களின் கவனத்தை இழுக்க இப்படிச் செய்வது அரபு மக்களின் வழக்கம்.*

அவர்கள் அனைவரும் 'ஆம். ஏனெனில் நீர் பொய் சொல்வதை நாம் அறிந்ததில்லை.' என பதிலளித்தனர்.

உடனே நபியவர்கள், 'நான் உங்கள் மத்தியில் கடினமான ஒரு வேதனை பற்றி எச்சரிக்கை செய்கின்றேன். நரக நெருப்பில் இருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள்.[93] நான் உங்களது காவலாளி போன்று தூரத்தில் உங்களை நோக்கி வருகின்ற எதிரியை, வேதனையைப் பற்றி எச்சரிக்கை விடுக்கிறேன். நான் உங்களிடம் பொய் சொல்வேனா?'[94]

அதுகேட்டு, கிளர்ந்தெழுந்த அபூலஹப், நபியவர்களின் பேச்சு அங்கு வந்திருப்போரின் உள்ளங்களில் தாக்கத்தை ஏற்படுத்தி விடாதிருக்கும் படியாக அப்பேச்சை இடைநிறுத்திய தோடு, நபிகளாரின் புனிதமான முகத்தைப் பார்த்து, 'உமக்கு நாசம் உண்டாவதாக. இதற்காகவா எங்களை அழைத்தீர்?' என்று கேட்டார்.

இந்த இழிவான பேச்சினால், அங்கு ஒன்று சேர்ந்தி ருந்த அனைவரையும் கலைத்து விடவும் நபியவர்களின் அழைப்பை மலினப்படுத்தவும் முயன்றார்.

அல்லாஹ்வையும் அவனது தூதரையும் நிராகரித்து இழிவுபடுத்தியமைக்கான கூலியாக, அபூலஹபை சபித்து ஓர் அல்குர்ஆனில் ஓர் அத்தியாயமே இறங்கியது.[95]

'அழியட்டும் அபூலஹபின் இரு கரங்களும். அவனும் அழியட்டும். அவன் சேர்த்து வைத்த, சம்பாதித்த

---

*93. தபரி, பா.3, ப.1170*
*94. ஹலபிய்யா, பா.1, ப.311*
*95. தபரீ, பா.3, ப.1170, மனாகிப், பா.1, ப.43-44*

அனைத்து செல்வங்களும் ஒழியட்டும். அவன் கொழுந்து விட்டெரியும் நரக நெருப்பில் தள்ளப்படுவான். விறகு சுமக்கும் அவனது மனைவியின் கழுத்தில் இறுக்கமான கயிறு இறங்கும்." (சூரா அல்லஹப்)

அழைப்பின் எதிரொலி

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களது செம்மையான, அறிவார்ந்த பேச்சும், அழைப்பும் அவற்றை செவிமடுப்போர் மத்தியில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தின. குறைஷியருடைய கூட்டங்களிலும், ஒன்று கூடல்களிலும், முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி கொண்டு வந்துள்ள புதிய மார்க்கத்தைப் பற்றிய பேச்சும், அதன் பரவலும் ஆரம்பமாயின.

அங்கு நிலவி வந்த அநீதி, மற்றும் பகைமையுணர்வின் சூழலை வெறுக்குமளவு உளப்பக்குவம் கொண்டிருந்த சிலர், இந்த இழிநிலைக்குப் பதிலாக சீரான, கண்ணியமான வாழ்வுக்கான அழைப்பாக இஸ்லாத்தின் தூதைக் கிரகிக்கத் தொடங்கினார்கள்.

எனினும், குறைஷியரின் தலைவர்களும் பிரமுகர்களும் இந்தப் புதிய அழைப்புக்குப் பதிலளிக்க முன்வரவில்லை. மாறாக, அதனை, முளையிலேயே கிள்ளி எறியவும் அதற்கு முன்னால் தடைக் கற்களை ஏற்படுத்தவும் முயற்சி செய்தனர். தாமும் தமது மூதாதையரும் வணங்கி வருகின்ற தமது கடவுளர்களை, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி ஏசுவதாக அவர்கள் உணர்ந்தனர். தமது கொள்கையின் திரிபுகள், பொய்மைகளுக்கு மத்தியிலும் அதிலிருந்து பின்வாங்கிச் செல்வதற்கான எந்த சந்தர்ப்பத்தையும் அவர்கள் ஏற்படுத்திக் கொள்ள விரும்பவில்லை.

உண்மையென்னவெனில், முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களது மார்க்கத்திலும், அதற்கான அழைப்பிலும் தமது ஆட்சியையும், அந்தஸ்தையும் ஆட்டங் காணச் செய்யக்கூடிய பெரும் அச்சுறுத்தலை அவர்கள் உணர்ந்தார்கள். மனிதர்கள் சிலைகளையும் சிலை வணக்கத் தையும் விட்டு விட்டு அல்லாஹ் ஒருவனை மட்டுமே மகத்துவப்படுத்தத் திரும்பி விடுவார்களாயின், இந்த ஆட்சித் தலைவர்களின் சுயநலன்கள் எங்கே செல்லும்? பின், இவர்களுடைய கட்டளைகளுக்கு அடிபணியவும், சிறப்பான அவர்களது சமய ஸ்தானத்திற்கு கீழ்ப்படியவும் எவர் முன்வருவார்.?

இதனால், தமது ஆலோசனை மண்டபத்தில் ஒன்றுகூடி, இந்த செழிப்பான வழிமுறை முன்னேற விடாது தடுப்பதன் அவசியம் பற்றி அவர்கள் ஆய்வு செய்தார்கள். அவர்கள் அனைவரதும் அபிப்பிராயம், முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களின் தந்தையின் ஸ்தானத்தி லிருந்த, குறைஷிப் பிரமுகர் ஹஸ்ரத் அபூதாலிப் அவர்களிடத் தில் சென்று, நபியவர்கள் தமது அழைப்புப் பணியைத் தொடர்ந்து செல்லாது தடுக்கும்படியாக கோரிக்கை விடுக்க வேண்டும் என்பதாக இருந்தது.

இதன்படி, குறைஷி முக்கியஸ்தர்களில் சிலர் அபூதாலிபி டம் சென்றனர். அவர்களில் முதன்மையானவராக அபூசுப்யான் இருந்தார். அவர்கள், அபூதாலிபிடம் முஹம்மத் ஸல்லல் லாஹு அலைஹி வஆலிஹி அவர்களைப் பற்றி உரையாடிய தோடு, அவர் தங்களது கடவுளர்களை ஏசுவதாகவும், தங்க ளது சமயத்தை பழிப்பதாகவும் எடுத்துரைத்தனர்.

ஆனாலும், அபூதாலிப் அவர்கள், குறைஷியருக்கு அழகிய பதிலையும் ஆறுதலையும் கூறி அனுப்பி வைத்தார்கள்.

### அபூதாலிபிடம் வந்த குறைஷியர்

தமது முதல் நடவடிக்கை பயனளிக்கவில்லையென்பதையும், முஹம்மத் (ஸல்) அவர்கள் தொடர்ந்தும் தமது பிரசாரப் பணியில் ஈடுபட்டுக் கொண்டிருப்பதையும் அவர்களை ஏற்றுக் கொள்வோரின் தொகை நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டிருப்பதையும் அவதானித்த குறைஷியர்கள், மீண்டும் அபூதாலிபிடம் சென்று சொன்னார்கள்:

"அபூதாலிபே! எங்களிடத்தில் சிறப்பும் அந்தஸ்தும் முதிர்வும் உங்களுக்கு இருக்கின்றது. உங்களது சகோதரரின் மகனை தடுக்கும் படியாக நாம் உங்களைக் கோரினோம். ஆனால், நீங்கள் அவரைத் தடுக்கவில்லை.

அல்லாஹ் மீது ஆணையாக, நீங்கள் அவரைக் கட்டுப்படுத்தும் வரை, அல்லது இவ்விஷயத்தில் தலையிடும் வரை, அவர் எங்களது மூதாதையரை ஏசுவதையும் எங்களது பெரியார்களை முட்டாள்களாக்குவதையும் எங்களது கடவுளர்களை குறைசொல்வதையும் நாங்கள் பொறுமையாகப் பார்த்துக் கொண்டிருக்க முடியாது.

இறுதியாகச் சொல்ல விரும்புகிறோம். நீங்கள் முஹம்மதைத் தடுத்து நிறுத்தா விட்டால் நாம் அவருக்கும் தங்களுக்கும் எதிராகப் போர் புரிய வேண்டிய கட்டாய நிலை வரும் என்பதை எச்சரிக்கிறோம்."

ஹஸ்ரத் அபூதாலிப் அவர்கள், முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களை அழைத்து, குறைஷியர் சொன்ன விடயங்களைத் தெரிவித்ததோடு, "உங்களது அபிப்பிராயம் என்ன"வென்றும் கேட்டார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அதற்கு மிக உறுதியாகப் பதிலளித்தார்கள்: 'பெரிய தந்தையே! அல்லாஹ் மீது ஆணையாக, அவர்கள், இந்தப் பணியை கைவிடுவதற்குப் பகரமாக, சூரியனை எனது வலது கையிலும் சந்திரனை எனது இடது கையிலும் வைத்தாலும் கூட, அல்லாஹ் இதனை பலப்படுத்தும் வரை அல்லது நான் இப்பாதையில் மரணிக்கின்ற வரை அதனைக் கைவிடவே மாட்டேன்.'

அபூதாலிப், நபியவர்களை ஆசுவாசப்படுத்திச் சொன்னார்: 'என் சகோதரரின் மகனே! இங்கே வாருங்கள். நீங்கள் சென்று, உங்கள் பணியை நீங்கள் தொடருங்கள். அல்லாஹ் மீது ஆணையாக, இவ்விடயத்தில் உங்களுக்கு எந்த ஆபத்தும் வருவதற்கு நான் விடமாட்டேன்.'[96]

நபியவர்களுக்கு உதவி செய்வதிலிருந்தும் அவர்களைப் பாதுகாப்பதிலிருந்தும் அபூதாலிபை தடுப்பதற்காக குறைஷியர் மற்றொரு வழிமுறையைக் கையாண்டனர். அம்மாரா இப்னு வலீதிப்னு முகீரா என்ற இளைஞனை தம்முடன் அழைத்துக் கொண்டு அபூதாலிபிடம் சென்றனர். அவரைப் பார்த்துக் கூறினர்;

'அபூதாலிபே! இவர் அம்மாரா இப்னு வலீத். குறைஷியரில் அழகான, வலுவான இளைஞர். இவரை எடுத்துக் கொள்ளுங்கள். இவரை உங்களது பிள்ளையாகத் தத்தெடுத்து, இவருக்கு உதவி செய்து வளர்த்து வாருங்கள். இவர் உங்களுக்குரியவராவார். இதற்குப் பதிலாக உங்களது சகோதரரின் மகனை எங்களிடம் ஒப்படைத்து விடுங்கள். நாங்கள் அவரைக் கொலை செய்து விடுகின்றோம். ஆளுக்கு ஆள் என்ற ரீதியில் கணக்கு சரியாகி விடும்.'

---

*96. இப்னு ஹிஷாம், பா.1, ப.265-266*

இதைக் கேட்டு மிகுந்த கோபமுற்ற அபூதாலிப், 'அல்லாஹ் மீது ஆணையாக, நீங்கள் கேட்கின்ற விடயம் மிகக் கெட்டது. உங்களது பிள்ளையை உணவளித்து வளர்ப்ப தற்காக நீங்கள் என்னிடம் தருவீர்கள். எனது பிள்ளையைக் கொன்று விடுவதற்காக நான் உங்களிடம் தரவேண்டுமா? இது, அல்லாஹ் மீது ஆணையாக, ஒரு போதும் நடக்காது' என்று உறுதியாகக் கூறினார்கள்.[97]

## ஆசையூட்ட முனைந்த குறைஷியர்

நபி ஸல்லலலாஹு அலைஹி வஆலிஹி அவர்களுக்கு செல்வம், சிறப்பு, அதிகாரம், தலைமைத்துவம் போன்றவற்றில் ஆசை காண்பிப்பதனூடாக, அவர்களது பிரசாரத்தை தடுத்து நிறுத்த முடியும் என்று குறைஷியர் கருதினர்.

இதற்காக, ஒரு தடவை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களிடம் வந்து, 'முஹம்மதே! இந்த செய்திகளை நீங்கள் எங்களிடம் கொண்டு வந்திருப்பது செல்வத்தைத் திரட்டிக் கொள்ள வேண்டும் என்பதற்காக என்றிருந்தால், நாங்கள் சேமித்து வைத்துள்ள செல்வங்களை உங்களுக்குத் தந்து, எங்கள் அனைவரையும் விட அதிக செல்வந்தராக உங்களை ஆக்குகின்றோம். அல்லது, எங்களை விட அந்தஸ்தில் சிறந்தவராக வேண்டுமென்பதை நீங்கள் வேண்டினால், நாங்கள் உங்களை எங்களது தலைவராக நியமித்துக் கொள்கின்றோம். அல்லது, அதிகாரத்தை நீங்கள் வேண்டினால், நாங்கள் உங்களை எங்களது ஆட்சியாள ராக்கிக் கொள்கின்றோம்.

அல்லது, நீங்கள் கொண்டு வந்துள்ள விடயம், உங்களது கட்டுப்பாட்டுக்கு அப்பாற்பட்டதாக -பைத்தியத்தின்

---

*97. மே.கு., பா.1, ப.266-267*

ஒரு வகையாக- இருப்பதாக நீங்கள் கருதினால், உங்களை குணப்படுத்துவதற்கென, அல்லது உங்களை விட்டும் அதனை நீங்கச் செய்வதற்கென, ஒரு வைத்தியரை அழைத்து, உங்களது வைத்தியத்துக்கென எங்களது செல்வங்களையெல் லாம் உங்களுக்காகத் தருகின்றோம்' என்று கூறினார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, குறைஷிய ருக்கு இவ்வாறு பதிலிறுத்தார்கள்: 'நீங்கள் கூறுகின்ற எவையும் எனக்குத் தேவையில்லை. நான், உங்களது செல்வத் தையோ, உங்களிடத்தில் சிறப்பையோ, உங்கள் மீது அதிகாரத் தையோ கோரவில்லை. அல்லாஹ் என்னை தன் தூதராக உங்களிடத்தில் அனுப்பியுள்ளான். என் மீது வேதத்தையும் இறக்கியுள்ளான். உங்களுக்கு எச்சரிக்கை செய்யுமாறும், நன்மாராயம் கூறுமாறும் பணித்துள்ளான். நான் எனது இரட்சகனுடைய தூதை உங்களிடத்தில் எடுத்துரைத்து, உங்களுக்கு உபதேசமும் செய்கின்றேன். நீங்கள் அதனை ஏற்றுக் கொண்டால், அது இம்மையிலும் மறுமையிலும் உங்களுக்குரிய விமோசனமாக இருக்கும். நீங்கள் என்னை நிராகரித்து விட்டால், எனக்கும் 'உங்களுக்குமிடையில் அல்லாஹ் தீர்ப்பளிக்கும் வரை, அவனுடைய கட்டளைக்காக நான் பொறுமையோடிருப்பேன்.'[98]

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களை, அவர்களது தூதுத்துவ பிரசாரத்திலிருந்து தடுக்கின்ற விடயத்தில், தமது வழிமுறைகள் எவையும் பயனளிக்கவில்லை என்பதை உணர்ந்த குறைஷியர், குறைந்தபட்சம் தமது கடவுளர்களை ஏசுவதையேனும் கட்டுப்படுத்திக் கொள்ளும்படி நபியவர்களை கேட்டு, அதன் பின் அவர்களை அவர்களது விடயத்தில் தலையிடாது விட்டுவிடுவதெனத் தீர்மானித்தார் கள். அதன் பின் அபூதாலிபிடம் சென்று, தமது கூற்றை

98. *மே.கு., பா.1, ப.295-296*

முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களிடம் எடுத்துரைக்குமாறு வேண்டினர். அபூதாலிப் அவர்கள், நபிகளாருக்கு செய்தியனுப்பினார்கள். நபியவர்கள் அங்கு வந்து சேர்ந்த போது, குறைஷியரின் ஆலோசனையை அபூதாலிப் எடுத்துக்கூறினார்.

நபியவர்கள் கேட்டார்கள்: 'பெரிய தந்தையே! அவர்களுக்கு நன்மை பயக்கின்ற அதேவேளை அவர்களுக்கு விமோசனத்தையும் கண்ணியத்தையும் தருகின்ற ஒரு வசனத்தை அவர்கள் ஒருமுறை கூறினால் போதுமானது. பிரச்சினை தீர்ந்து விடும்.'

அபூஜஹ்ல் கேட்டான்; 'அது என்ன வசனம்? ஒரு முறை என்ன பத்து முறை நாங்கள் சொல்லி விட்டுப் போகின்றோமே.'

உடனே நபியவர்கள் கூறினார்கள்; 'நீங்கள் -லாயிலாஹ இல்லல்லாஹ்- வணக்கத்திற்குரிய இறைவன் ஒருவனேயன்றி வேறில்லை என்க்கூற வேண்டும்.'

அதைக் கேட்டு வெருண்ட குறைஷியர், 'இதைத் தவிர வேறு எதையாவது கேளுங்கள்' என்று கூறினர். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி கூறினார்கள். 'நீங்கள் சூரியனை எனது கையிலே கொண்டு வந்து வைத்தாலும், இதைத் தவிர வேறெதையும் நான் உங்களிடத்தில் கேட்கமாட்டேன்.' [99]

நபிகளாருடனான உரையாடல், புனித பிரசாரத்திலிருந்து அவர்களது கரங்களைத் தடுக்கக்கூடிய எந்த இணக்கத்திற்கான முடிவையும் ஏற்படுத்தித் தரவில்லை யென்பதை

---

*99. தபரி, பா.3, ப.1176*

குறைஷியர் உணர்ந்தனர். எந்த எச்சரிக்கையும் அச்சுறுத்தலும் நபியவர்களின் உறுதியையும், நம்பிக்கையையும் தகர்க்க முடியவில்லை என்ற காரணத்தினால், அவர்களுக்கு மிகக் கடினமான தடையொன்றை முன்வைப்பதென்ற முடிவுக்கு அவர்கள் வந்தனர்.

# 10. குறைஷியரின் கொடுமைகள்

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, இஸ்லாத்திற் கான தமது பகிரங்க அழைப்பை ஆரம்பித்ததிலிருந்து, அந்த தூய சப்தத்தை ஒடுக்கி விடவும், பரிசுத்தமான அழைப்பை நபியவர்கள் தொடர்வதிலிருந்து அவர்களைத் தடுக்கவும் குறைஷியர், ஒன்றன் பின் ஒன்றாக பல்வேறு வழிமுறைகளைக் கையாண்டு கொண்டே வந்தார்கள்.

ஆரம்பத்தில் அவர்கள் -இது போன்ற நிலைகளில் வழமை போன்று- செல்வம், தலைமைத்துவம், பெண்கள் மற்றும் ஏனைய இலௌகீக அம்சங்களில் ஆசையூட்ட முனைந்தார்கள். அதிலும் நம்பிக்கையிழந்த போது எச்சரிக்கை, அச்சுறுத்தல் போன்ற வழிமுறைகளைக் கையாளத் தலைப்பட்டனர். இறுதியாக, புதிய மார்க்கத்தைப் பின்பற்றுவதை விட்டும் மனிதர்களைத் தடுப்பதற்காக தாங்கொணாக் கொடுமைகளை அவர்கள் மீது திணிக்கத் தீர்மானித்தனர்.

இதனால், தமது நலன்களையும் தமது உயர்ந்த ஸ்தானம், பலவீனர்களுடைய கழுத்தின் மீதான தமது அதிகாரம் என்பவற்றையும் பாதுகாத்துக் கொள்வதற்காகவும், இஸ்லாமிய தூதுத்துவத்தின் விரிவையும் பரவலையும் தடுப்பதற்காகவும் குறைஷியரின் புறத்திலிருந்து மிருகத் தனமானதும், பொறாமைத்தனமானதுமான தாக்குதல் கட்டவிழ்த்து விடப்பட்டது.

நபியவர்களுக்கும் மனிதர்களுக்கான அவர்களது தூதுத்துவ பிரசாரத்திற்கும் இடையே பிளவை ஏற்படுத்தும் விடயத்தில் மனிதாபிமான ஒழுங்குகள், ஒழுக்கத்தின் அடிப்படைகள் என்பவற்றைக் கூட அவர்கள் கவனிக்கவில்லை.

அக்காலத்திலிருந்த சிந்தனை மற்றும் அறிவு ரீதியான முதிர்ச்சியின்மையே இத்தகைய பெரும் எதிர்ப்புக்குக் காரணமாக அமைந்தது. இந்த தூது வெற்றியடைந்தால் தங்களுக்கான பலமான ஒரு பாதிப்பு இருக்கின்றது என்பதை உணர்ந்த போது, குறைஷியரின் முரண்பாடும், பகைமையுணர்வும் மேலும் அதிகரித்து வலுவடைந்தது.

"கற்களினாலும் பலகைகளினாலும் உருவாக்கப்பட்ட, செழிப்பை ஏற்படுத்த முடியாத, ஊமையான இந்த சிலைகள் எவ்வித செயலையும் செய்வதற்கு சக்தியற்றவையாகும்" என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள் வினா எழுப்பினார்கள்.

இதனை, தம்மை எதிர்நோக்கிய பலமான அடியாகவே அவர்கள் கருதினர் ஏனெனில், தமது பெற்றோர்கள், மூதாதையர்கள், பெருமைக்குரிய தலைவர்களிடமிருந்து வாரிசுரிமைச் சொத்தாகப் பெற்றவற்றின் ஒரு பகுதியென்றே சிலைவணக்கத்தை அவர்கள் கருதி வந்தனர்.

எனினும், இவையனைத்தை விடவும் அவர்களது எதிர்ப்புக்கான முக்கியமான விடயம், குறைஷிகளின் அடக்குமறை அதிகார வர்க்கத்தின் நலன்களோடு இஸ்லாம் முரண்பட்டமையாகும். ஏழைகளின் ஒழைப்பை உறிஞ்சி, வட்டியால் மக்களைப் பிழிந்து அடாவடித்தனத்தால் ஆட்சி நடத்தும் கூட்டம் சீர்திருத்தக் காற்றைச் சுவாசிக்க விரும்பவில்லை.

தீய சமூக ஒழுங்கு, அநீதி, மனித உரிமை மீறல்கள், சுரண்டல், அடக்குமறை போன்ற அனைத்திற்கும், தனது ஆரம்பம் முதலே எதிர்ப்பையும் முரண்பாட்டையும் தெரிவித்து வந்த இந்த புதிய தூது, முந்திய ஒழுங்கின் மூலமாக பயனடைந்து கொண்டிருந்த, சமூக ஏற்றத்தாழ்வுகளைத் தோற்றுவித்த அதிகார வர்க்கத்தினரின் எதிர்ப்புக்கும் பகைமைக்கும் இயல்பாகவே முகங்கொடுக்க வேண்டி ஏற்பட்டதென்பதை நாம் புரிந்து கொள்ளலாம்

இந்தப் புதிய மார்க்கத்திற்கான எதிர்ப்பைத் தெரிவித்தவர்களில் பின்வரும் குறைஷியரை குறிப்பிட்டுச் சொல்ல முடியும். அவர்களாவன, அபூஜஹ்ல், அபூசுப்யான், அபூலஹப், அஸ்வத் இப்னு அப்து யகூன், அவ்ஸ் இப்னு வாயில், உத்பா இப்னு ரபீஆ, ஷைபா இப்னு ரபீஆ, வலீத் இப்னுல் முகீரா, உக்பா இப்னு அபீ முயீத்.

இவர்களும், இவர்களைப் பின்பற்றியோரும், பொருளாதாரத் தடை, வீணான நிந்தனை, குற்றச்சாட்டுகள். மற்றும் நபியவர்களையும், அவர்களைப் பின்பற்றுபவர்களான முஸ்லிம்களையும் வேதனைப்படுத்தல் என மனிதாபிமானமற்ற சகல நடவடிக்கைகளையும் மேற்கொண்டனர். அவற்றில் சில நிகழ்வுகளை இங்கு சுட்டிக் காட்டுகின்றோம்;

1. ஒருமுறை நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள், தொழுகையின் போது சுஜூதிலிருந்து வணங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு அருகாமையில் நின்ற சில குறைஷியர்கள், ஒட்டகத்தின் அழுகிய குடலை எடுத்து வந்து, 'இந்த அழுகிய குடலை அந்த மனிதருடைய முதுகின் மீது போடுபவர் யார்?' என்று கேட்டனர். அப்போது, உக்பா இப்னு நாபிஃ இப்னு அபீமுயீத் என்பவன் அதனையெடுத்துக் கொண்டு சென்று நபிகளாரின் புனித முதுகின் மீது வீசினான். அதனைக் கேள்வியுற்று அங்கு ஓடி வந்த நபிகளாரின் மகள் ஹஸ்ரத் பாத்திமா ஸலாமுல்லாஹி அலைஹா, தந்தையாரின் முதுகிலிருந்த அழுக்குகளை அகற்றியதோடு, அதைச் செய்தவர்களுக்கு எதிராக துஆவும் செய்தார்கள்.[100]

2. தாரிக் அல்மஹாரிபீ என்பவர் அறிவிக்கின்றார்; ஒருமுறை, நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள், மக்காவின் துல்மஜாஸ் சந்தையில் நின்று கொண்டு, 'லாயிலாஹ இல்லல்லாஹ் என்று கூறுங்கள்; வெற்றியடைவீர்கள்' என்று கூறியவாறு, இஸ்லாத்தின் பக்கமும், ஏகத்துவத்தின் பக்கமும் அழைத்துக் கொண்டிருப்பதை நான் கண்டேன். அவ்வேளையில் அங்கு வந்த அபூலஹப், கற்களையெடுத்து நபிகளாரை நோக்கி எறிந்ததோடு, அவர்களது புனித பாதங்களில் இரத்தம் வழிந்தோடவும் செய்தான். மேலும், 'மனிதர்களே! இவருக்கு வழிப்படாதீர்கள். இவர் ஒரு பொய்யர்' என்றும் கூறினான்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள் மட்டுமன்றி, அவர்களை விசுவாசம் கொண்டு, அவர்களது திருக்கரங்களில் இஸ்லாத்தைத் தழுவியிருந்த அவர்களது தோழர்களும், அவர்களைப் பின்பற்றியவர்களும் கூட,

---

*100. அஃலாமுல் வரா, ப.57*

மனிதாபிமானமற்ற மிருகத்தனமான கொடூரத் தாக்குதலுக்கு உள்ளாக்கப்பட்டார்கள்.[101]

3. ஜாபிர் (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்; ஹஸ்ரத் அம்மார் (ரழி) அவர்களது பெற்றோர்கள் குறைஷியரால் வேதனை செய்யப்பட்டுக் கொண்டிருந்த நிலையில், ஒருமுறை நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள் அம்மார் (ரழி) அவர்களுக்கு அருகாமையில் நடந்து சென்றார்கள். அப்போது சொன்னார்கள்; "அம்மாருடைய குடும்பத்தினருக்கு நன்மாராயம் கூறுவீர்களாக. நிச்சயமாக அவர்களுக்கு சுவனம் வாக்களிக்கப்பட்டு விட்டது"[102]

இப்னுல் அதீர் குறிப்பிடுகின்றார்; இணைவைப்பாளர்கள், அம்மாரையும், அவரது தாய், தந்தையையும் மிகக் கடுமையாக வேதனை செய்து கொண்டிருந்தார்கள். அவர்களை வறண்ட பாலைநிலத்துக்கு அழைத்துச் சென்று, கொளுத்தும் சூரியனின் உஷ்ணத்தில் அவர்களை வேதனை செய்வார்கள்.

அபூஜஹ்லின் ஈட்டியிலான தாக்குதலினால் கொலை செய்யப்பட்ட அம்மாருடைய தாய் ஹஸ்ரத் சுமையா (ரழி) அவர்களே இஸ்லாத்தின் முதல் பெண் தியாகியாவார். இவ்வாறே அம்மாரின் தந்தையான ஹஸ்ரத் யாசிர் (ரழி) அவர்களும் அடுத்ததாக முஷ்ரிகீன்களின் கொடுமைகளினால் கொலை செய்யப்பட்டார்கள்.

அம்மார் (ரழி) அவர்கள் மீது தமது கொடுமைகளை கடுமையாக்கிய முஷ்ரிகீன்கள், சில சமயம் சூரிய உஷ்ணம்

---

*101. மனாகிப், பா.1, ப.51இ்.லாமுல் வரா 48*
*102. அ்.லாமுல் வரா, ப.58*

நிறைந்த பாலைவனத்திலும், சில சமயம் அவர்களது நெஞ்சில் பாறாங்கல்லை வைத்து அழுத்தியவாறும் வேதனைப்படுத்தினர். அம்மார், முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்களை நிந்திக்க வேண்டும், நிராகரிப்பை வெளிப்படுத்த வேண்டுமென்பதே அந்தக் காபிர்களின் விருப்பமாக இருந்தது. ஈமானினால் உள்ளம் அமைதி பெற்றிருக்கும் நிலையில், அவர்களிடமிருந்து தப்பித்துக் கொள்வதற்கான அனுமதி வரும் வரை அம்மார் அவர்கள், அச்செயலிலிருந்து தவிர்ந்து கொண்டார்கள். பின், காபிர்களது கைகளில் எதிர்பார்த்துக் கொண்டிருந்த அந்த மரணத்திலிருந்து அவர்கள் ஈடேற்றமும் பெற்றார்கள்.[103]

4. கறுப்பு அடிமையாக இருந்த ஹஸ்ரத் பிலால் (ரழி) அவர்கள், நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்களிடத்தில் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டிருந்தார்கள். இதனால் அவர்களது எஜமான், சூரியன் உச்சியில் நிற்கக் கூடிய உஷ்ணமான நேரத்தில், அவர்களை பாலைவனத்தில் வீசி, அவர்களது நெஞ்சில் பெரும் பாறாங்கல்லை வைத்து அழுத்துமாறு கட்டளையிடுவான். அவர்களைப் பார்த்துக் கூறுவான்; 'நீ மரணிக்கின்ற வரை, அல்லது முஹம்மதை நிராகரித்து விட்டு லாத், உஸ்ஸா கடவுள்களை வணங்குகின்ற வரை இப்படியே இருப்பாய்.' இந்த கொடூரமான வேதனையையும் அச்சுறுத்தலையும் தாங்கிக் கொண்டு மிகுந்த பொறுமையோடும், அமைதியோடும் இருக்கும் பிலால் (ரழி) அவர்கள், 'அல்லாஹ் ஒருவன், அல்லாஹ் ஒருவன்' என்ற வார்த்தையையே மீண்டும் மீண்டும் சொல்லிக் கொண்டிருப்பார்கள்.[104]

---

*103. காமில், இப்னுல் அதீர், பா.2, ப.66-67*
*104. மே.கு.*

இஸ்லாத்தின் ஆரம்பத்திலும், அதன் முதல் நாட்களிலும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்களும் முஸ்லிம்களும் எதிர்நோக்கிய துன்பியல் நிகழ்வுகள் அனைத்தையும் எடுத்துரைப்பது, இந்த சிறிய நூலில் சாத்திய மில்லாதிருப்பதையிட்டு நாம் வருத்தம் கொள்கின்றோம். எனினும், சுட்டிக்காட்டுதலுக்காக சில விடயங்களை இங்கு முன்வைக்கின்றோம். முஷ்ரிகீன்களும், இஸ்லாத்தின் எதிரிகளும் இஸ்லாத்தை தடுத்து நிறுத்துவதற்கும், அதனுடன் போராடுவதற்கும் அதற்கெதிராக கிளர்ந்தெழுவதற்கும் எதையும் விட்டுவைக்காமல், அனைத்து சாதனங்களையும் பயன்படுத்தினார்கள். அந்த சாதனங்கள், வழிமுறைகளில் சிலவற்றை சுருக்கமாக இங்கு சுட்டிக் காட்டுகின்றோம்.

1. பொருளாதாரத் தடை: இணைவைப்பாளர்கள், நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள் மீதும், அவர்களது குடும்பத்தினர்கள், மற்றும் அவர்களைப் பின்பற்றிய முஸ்லிம்கள் மீதும் பொருளாதார ரீதியான கடின யுத்தமொன் றைத் தொடுத்தனர். அவர்களுடனான சகல வர்த்தக கொடுக்கல் வாங்கல்களையும் தடைசெய்தனர். இது, நபியவர் களுக்கும் அவர்களுடன் இருந்தவர்களுக்கும் பெரும் சிரமத்திற்கும், கடுமையான சுமைக்கும் காரணமாக அமைந்தது.

2. உளவியல் தாக்குதல்: சூனியம், அல்லது பொய்ப்பிராசாரம் தொடர்பில் நபியவர்கள் மீது கொண்டுள்ள சந்தேகத்தின் படி, நபியவர்களோடு உள்ளவர்களுடன் திருமண உறவுகளை ஏற்படுத்திக் கொள்ளாதிருப்பது உட்பட, அவர்களுடனான சமூகத் தொடர்புகள் அனைத்தையும் துண்டிப்பதாக இது அமைந்திருந்தது. எனினும், இது முஸ்லிம்களிடையே அவர்களது ஆன்மீக உயிரோட்டத்தை பலவீனமடையச் செய்யவில்லை.

3. சரீர வேதனை: இஸ்லாத்தின் புதிய எழுச்சியையும், அதன் தலைவர் மற்றும் பின்பற்றுனர்களையும் அழிப்பதற்காக குறைஷியர் கையாண்ட மனிதாபிமானமற்ற மிருகத்தனமான வழிமுறைகளில் இறுதியானதே இதுவாகும். இந்த வேதனைகளும் கொடுமைகளும் இஸ்லாத்தின் ஆரம்பத்தில் அதிகமான முஃமின்களை ஷஹீதாகச் செய்தன.

நபியவர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் எதிரான கிளர்ச்சி யிலும் யுத்தத்திலும் முஷ்ரிகீன்கள் கையாண்ட இத்தகைய மூர்க்கத்தனமான வழிமுறைகள் அதிகரித்திருந்த போதிலும், இஸ்லாமோ தன் முன்னேற்றப் பாதையிலும் பரவலிலும் தொடர்ந்து பயணித்துக் கொண்டேயிருந்தது. அவ்வாறே, நபியவர்கள் நேர்வழியின் பால் மக்களை அழைப்பதிலும், முஸ்லிம்கள் தமது நிலையான மார்க்கத்திலும் தொடர்ந்து பயணித்துக் கொண்டேயிருந்தனர்.

அவர்கள், பெருமிதத்தினால் நிரம்பிய கண்ணியத்திற் குரிய இந்தப் பாதையில் வழிநடந்தார்கள். அதிகமான பிரச்சினைகள், கொடுமைகள், நெருக்கடிகள், நிர்ப்பந்தங்கள், சிரமங்கள் மற்றும் ஹிஜ்ரத் முதலான பல சோதனைகளை தாங்கிக் கொண்டார்கள். இவையனைத்தும், தமது மார்க்கத்திலும் தமது கொள்கை, விசுவாசம் என்பவற்றிலும் அவர்களுக்கிருந்த பிடிப்பினால் நிகழ்ந்தவையாகும்.

ஆரம்ப கால முஸ்லிம்களுடைய வரலாற்றிலும் வாழ்க்கை யிலும் நாம் அறிந்து கொள்ளக்கூடிய முக்கிய விடயம் வாளினதும் யுத்தத்தினதும் துணை கொண்டு இஸ்லாத்தின் முன்னேற்றம் அமைந்திருக்கவில்லை என்பதாகும். மாறாக, சுமார் பதின்மூன்று வருடங்களாக, எதிரிகளின் கடுமையான கொடுமைகளை முஸ்லிம்கள் அனுபவித்தார்கள். இவை யனைத்தையும் முறியடித்து, இஸ்லாம் முன்னேறி பரவி வந்தது.

## II. ஹிஜ்ரத்

### வரலாற்றின் புதிய ஆரம்பம்

மக்காவாசிகளுடைய முகங்களின் ஒவ்வொரு பகுதியிலும் தெரிந்த, அவர்களது உள்ளங்களை அதிகாரம் செலுத்திக் கொண்டிருந்த பொய்மைகளையும் இஸ்லாத்தின் பாதையில் அவர்கள் விதைக்க இருக்கின்ற நெருக்கடிகள், இடையூறு களையும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள் வாசித்துணரக் கூடியவர்களாக இருந்தார்கள்.

அறியாமையிலும், மூடக்கொள்கையிலும் மூழ்கிப் போயுள்ள இந்த சமூக மக்கள், தமது இந்த வழிமுறைகளை இலகுவாக விலக்கிக் கொள்ளவோ, இருளிலிருந்து ஒளியை நோக்கிய வெளிப்பாட்டை பூரணமாகப் புரிந்து கொள்ளவோ மாட்டார்கள் என்பதை நபியவர்கள் அறிந்து கொண்டார்கள். எனவே, எதையும் சாதிப்பதெனின் கடினமான போராட்ட மொன்றை மேற்கொள்வது அவசியமாக இருந்தது.

ஏவ்வளவு தான் நோக்கினாலும் மக்காவில் முஸ்லிம்களின் எதிர்காலம் இருண்டதாகவே தோன்றியது. முஸ்லிம்கள் ஒறுதியோடிருந்த போதும் எதிரிகளும் விட்டுக் கொடுக்காமல் 13 வருடங்களாக அடாவடித்தனங்களைத் தொடர்ந்தனர்.[105]

உலகளாவிய செய்தியைக் கொண்டிருந்த இஸ்லாம் இந்த நெருக்கடிகளில் இருந்து விடுபட்டு தன் சர்வதேசியப் பணிக்கு அடித்தாளமிட வேண்டிய அவசரத்தையும் நபியவர்கள் உணர்ந்தார்கள். ஏனவே மக்காவில் இருந்து வேறொரு வாய்ப்பான இடாத்துக்கு ஹிஜ்ரத் மேற்கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டது.

வளம் பொருந்திய யத்ரிப்

ஹஜ்ஜுடைய காலமொன்றின் போது, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள், மஸ்ஜிதுல் ஹராமில் வைத்து, மதீனாவின் கஸ்ரஜ் கோத்திரத்தைச் சேர்ந்த சில பிரமுகர்களைச் சந்தித்தார்கள். தூய சகோதரத்துவமும் நீதியும் மிக்க புனித இஸ்லாத்தைத் தழுவிக் கொள்ளுமாறு அவர்களுக்கு அழைப்பு விடுத்தார்கள். இஸ்லாத்தைத் தழுவியதன் பின் தம்மைப் பிணைத்திருந்த வழிகேடுகளை உணர்ந்து கொண்ட இந்த நபர்கள், தம்மோடு போரில் ஈடுபட்டுக் கொண்டிருந்த பகைமைக் குழுவான அவ்ஸ் கோத்திரத்தைச் சேர்ந்த அதிகமானோருக்கு உதவி புரிய முன்வந்தனர்.

இதன் விளைவாக, அதே காலப் பகுதியில் புதிய குழுவொன்று நபியவர்களிடத்தில் அனுப்பி வைக்கப்பட்டது. அக்குழுவினர் நபிகளாரின் அழைப்பை மிகுந்த பயபக்தியுடன்

---

*105. மே.கு., பா.2, ப.108*

ஏற்றுக் கொண்டார்கள். மார்க்க விடயங்களைக் கற்றுத் தருவதற்காக தம்முடன் ஒருவரை அனுப்பி வைக்குமாறு அவர்கள் வேண்டிய போது, நபியவர்கள் முஸ்அப் இப்னு உமைர் (ரழி) அவர்களை அனுப்பி வைத்தார்கள்.

இவ்வாறு யத்ரிபில் இஸ்லாம் பரவ ஆரம்பித்தது. அந்நகர மக்கள், கூட்டம் கூட்டமாக அல்லாஹ்வுடைய மார்க்கத்தில் நுழையலாயினர். அவர்கள் இந்தப் புதிய மார்க்கத்தைத் தழுவிக் கொள்வதில் முக்கிய பங்கு வகித்தது அவர்கள் மீது ஓதப்பட்ட தெளிவான அல்லாஹ்வின் வசனங்களாகும். ஹஸ்ரத் முஸ்அப் அவர்கள், அவ்ஸ், கஸ்ரஜ் கோத்திரங்களைச் சேர்ந்த பெருந்தொகையானோர் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டுள்ள செய்தியை நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்களுக்கு எழுதினார்.

இதன் பிறகு, ஹஜ் கடமையை நிறைவேற்றுவதற்காக வருகை தந்திருந்த யத்ரிப் நகர மக்களில் பெரிய ஒரு குழுவினரை நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள் சந்தித்தார்கள். நபியவர்கள் தங்களது நகருக்கு வரவேண்டுமென்று அழைப்பு விடுத்த அக்குழுவினர், அவ்வாறு வந்தால், தமது பெண்கள், பிள்ளைகளைப் பாதுகாப்பது போன்று முழுமையான பாதுகாப்பை தம்மால் வழங்க முடியும் என்று உறுதி கூறி, நபிகளாரது கைகளில் விசுவாசப் பிரமாணமும் செய்து கொண்டனர்.[106]

இஸ்லாமிய வரலாற்றிலான இந்த சிறப்பான விசுவாசப் பிரமாணம், இஸ்லாத்தின் வித்து, அதன் விளைச்சலைத் தர ஆரம்பித்தமைக்கு ஆதாரமாக விளங்கியது.

---

*106. அ'.லாமுல் வரா, (நஜப், 1390) ப.55 - 61*

கொலைச் சதி

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களுடனான யத்ரிப் மக்களின் விசுவாசப் பிரமாணம், அவர்களது தொடர்புகள் என்பவை பற்றிய செய்தியை அறிந்ததிலிருந்து குறைஷியருக்கு இருப்புக் கொள்ளவில்லை.

அந்த நிகழ்வின் தாக்கத்தினால், நபியவர்களுக்குக் கிடைக்கவிருக்கின்ற உதவியை இல்லாமற் செய்ய வேண்டுமென்பதற்காக இணைவைப்பின் பெரியவர்கள் அனைவரும் தமது ஆலோசனைக் கூடமான தாருந்நத்வாவை நோக்கி விரைந்தனர்.

பேச்சுகள், மறுப்புகள், வாதிடல்கள், தெளிவுபடுத்தல்கள் எல்லாவற்றுக்குப் பின்னால், அன்றிரவு நபியவர்களின் வீட்டைச் சூழ்ந்து, அவர்களைக் கொலை செய்து விடுவதென்றும் தீர்மானிக்கப்பட்டு அதற்காக குறைஷியரின் ஒவ்வொரு கோத்திரத்திலிருந்தும் ஒவ்வொரு வாலிபர் தெரிவு செய்யப்பட்டனர். நள்ளிரவில் நபியவர்களின் வீட்டை முற்றுகையிட்டு ஒரேயடியாகத் தாக்கி அவரைத் தீர்த்துக் கட்டுவது என்பது தான் அவர்களது திட்டம். நபியவர்களை அழித்து விடுவதனால், அவர்களது மார்க்க அழைப்பையும் அழித்துவிட முடியும், மேலும் எல்லா விடயங்களும் நிறைவு பெற்று விடும் என்று அவர்கள் கருதினர்.[107]

இறை நிராகரிப்பாளர்கள் இவ்வாறு தான் விரும்பினர். ஆனால், அல்லாஹ்வோ வேறொரு விடயத்தை நாடியிருந்

---

*107. தபரி பா.3, ப.1229*

தான். அவன், அன்றிரவே மக்காவிலிருந்து வெளியேறுமாறு நபிகளாருக்கு ஆணை பிறப்பித்தான்.[108]

## கட்டிலில் அலீ

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள், மக்கள் தம்மிடம் அமானிதமாகத் தந்து வைத்திருந்த பொருட்களையெல்லாம், உரியவர்களிடம் மீள ஒப்படைக்குமாறு ஹஸ்ரத் அலீயிடம் கையளித்தார்கள். மக்காவை விட்டுப் புறப்படும் நிலையில், நபியவர்கள் வீட்டிலில்லை என்பதை உணர்ந்து எதிரிகள் விழித்துக் கொள்ளக் கூடாது என்பதற்காக, தமது படுக்கையில் தூங்குமாறு ஹஸ்ரத் அலீயை நபிகளார் பணித்தார்கள். ஹஸ்ரத் அலீ அவர்கள், நபியவர்களின் ஏவலுக்கு வழிப்பட்டு, அந்த ஆபத்தான காரியத்தைப் பொறுப்பேற்று நபிகளாருக்குப் பதிலாக அவர்களது படுக்கையில் தூங்கிக் கொண்டார்கள்.[109]

ஹஸ்ரத் அலீயினுடைய இந்த தியாகம் பற்றி அல்லாஹ் புனித அல்குர்ஆனில் விதந்துரைத்து புகழும்படியானதாக அமைந்திருந்தது.[110]

## தௌர் குகையை நோக்கி

மாலையில் இருள் சூழத்தொடங்கியதும், நபியவர்களின் வீடு முற்றுகையிடப்பட்டது. குறைஷியரின் ஒவ்வொரு கோத்திரத்திலிருந்தும் தெரிவு செய்யப்பட்டிருந்த அல்லாஹ் வின் எதிரிகள், தாம் சரியான ஒரு திட்டத்தை எடுத்துள்ள தாக எண்ணிக்கொண்டனர்.

---

*108. மே.கு., பா.3, ப.1231, பிஹார், பா.19, ப.60*
*109. இப்னு ஹிசாம், பா.1, ப.481, தபரீ, பா.3, ப.1232*
*110. பிஹார், பா.19 ப.78*

நபியவர்களின் வீட்டினை அவர்கள் சூழ்ந்திருக்கின்றனர். வீட்டினுள்ளே ஹஸ்ரத் அலீ அலைஹிஸ் ஸலாம் அவர்கள், உறங்கிக் கொண்டிருக்கிறார்கள்.

ஆயினும், சூரா யாசீனின் சில வசனங்களை ஓதியவர்களாக வீட்டிலிருந்து வெளியான நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள், தமது பயணத்தில் ஹஸ்ரத் அபூபக்கர் அவர்களையும் தம்மோடு அழைத்துக் கொண்டு, தௌர் குகையை நோக்கி விரைந்தார்கள்.[111]

விடிந்ததும், வீட்டைச் சூழ்ந்து நின்றிருந்த அந்தக் கொடியவர்கள், தமது வாட்களை உருவிக் கொண்டு, நபிகளாரின் வீட்டினுள் நுழைந்து அவர்களது படுக்கையை தாக்கினர். அப்போது, நபிகளாரின் படுக்கையில் ஹஸ்ரத் அலீயை கண்டதும் ஏமாற்றத்தின் திடுக்கமும் சீற்றமும் ஒரசேர அவர்களைத் தாக்கின.

ஹஸ்ரத் அலீயைப் பிடித்து உலுக்கி, 'உமது சிறிய தந்தையின் புதல்வர் எங்கே?' என்று அதட்டிக் கேட்டனர். ஹஸ்ரத் அலீ கூறினார்கள்; 'அவர்கள் மீதான கண்காணிப் பாளராகவா என்னை நியமித்திருந்தீர்கள்? நீங்கள் அதைக் கூறவில்லையே! இங்கிருந்து வெளியேறிவிடுங்கள். அவர்கள் உங்களிடமிருந்து சென்று விட்டார்கள்.[112] இப்போது என்ன செய்யப் போகிறீர்கள்?'

தமது முயற்சியெல்லாம் வீணாகி விட்டதைக் கண்ட குறைஷியர், அது தமது பெருமைக்கு பேரிழுக்கை ஏற்படுத்தி விட்டதை உணர்ந்தார்கள். நபியவர்களைக் கண்டுபிடிக்க

---

*111. துபரி, ப.2, ப.1234*
*112. அஃலாமுல் வரா, ப.63*

பெரும் பிரயத்தனம் மேற்கொண்டார்கள். எனினும், வெற்றி யடையவில்லை.

### யத்ரிபை நோக்கி

நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள், தௌர் குகையில் மூன்று நாட்கள் தங்கியிருந்தார்கள். பின்பு, யத்ரிபை நோக்கிப் புறப்பட்டார்கள்.[113] இந்தக் குறுகிய காலமானது, நபியவர்களைப் பிடித்துவிட முடியும் என்பதில் குறைஷியருடைய உள்ளத்தில் அவநம்பிக்கையை ஏற்படுத்தப் போதுமானதாக இருந்தது.

மக்காவைச் சேர்ந்த சுராகா இப்னு மாலிக், நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்களின் காலடித் தடங்களை அடையாளங்கண்டு அவர்களைப் பிடிக்க வந்தார். எனினும் பூமி அவரது குதிரையின் கால்களைப் பிடித்துக் கெள்ள அவர் கீழே விழுந்தார். மூன்று முறை இவ்வாறு நடந்தது. பின்னர் நபிகளாரிடம் பாவமன்னிப்புக் கோரி திரும்பிச் சென்றார்.[114]

ரபீஉல் அவ்வல் பன்னிரெண்டாம் நாள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள், குபா எனும் பிரதேசத்தை வந்தடைந்தார்கள்.[115] அங்கு, ஹஸ்ரத் அலீயின் வருகையை எதிர்பார்த்தவர்களாக சில நாட்கள் தங்கியிருந் தார்கள்.[116] ஹஸ்ரத் அபூபக்கர் அவர்கள், மதீனாவுக்குச் செல்வோம் என நபியவர்களிடம் கூறிய போதும், நபியவர்களோ, "நான் அலீ வரும் வரை வர முடியாது.

---

*113. இப்னு ஹிசாம், பா.1, ப.489*
*114. மே.கு. பா.1, ப.489*
*115. காமில், ப.2, பா.1385*
*116. தபரி, பா.3, ப.1345*

அவா் தன் உயிரை மதிக்காது எனக்காக வீட்டில் உறங்கினாா். எனது பெரிய தந்தையின் புதல்வரும் எனது சகோதரருமான எனது குடும்பத்தாாில் எனக்கு மிகப் பிரியமானவருமான அவா் வரும் வரை நான் இவ்விடத்திலிருந்து அகன்றுவிட மாட்டேன். அவர், தன்னை அர்ப்பணித்து, முஷ்ரிகீன்களிடமிருந்து என்னைக் காப்பாற்றினார்' என்று கூறி, தமது தரிபடுதலுக்கான நியாயத்தை எடுத்துக் கூறினார்கள்.[117]

ஹஸ்ரத் அலீ அவர்கள், அமானிதங்களையெல்லாம் உரியவர்களிடம் மீள ஒப்படைத்ததன் பின், நபிகளாருடன் வந்திணைந்து கொண்டார்கள். காபிர்கள், ஹஸ்ரத் அலீயை தடுத்து வைத்துக் கொள்ள முயன்ற போதும், அவர், காபிர்களை எதிர்கொண்டு போராடினார். அல்லாஹ் அவர்களைப் பாதுகாத்தான். அதன் பின் ஹஸ்ரத் அலி அவர்கள், மிகவும் சடைவுற்ற நிலையில் களைப்படைந்தவர்களாக குபாவை வந்தடைந்தார்கள். அலீயைக் கண்ட நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள், இரக்கம் மேலிட்டு, அவர்களைக் கட்டியணைத்துக் கொண்டார்கள்.[118] அவர்களது பாதங்களிலிருந்த வீக்கங்களையும், கைகளிலிருந்த கொப்புளங்களையும் தடவிக் கொடுத்தார்கள்.

யத்திப் வரவேற்றது

யத்ரிபில், மக்களெல்லோரும் தமது பெரும் தலைவரின் வருகையை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர். அந்நகரத்தை புதியதொரு உயிரோட்டம் ஆட்கொண்டிருந்தது. விசேடமான சில நிகழ்வுகள், நபிகளாரை வரவேற்பதற்கென அங்கு ஒழுங்கு செய்யப்பட்டிருந்தன. பெருநாள் தினத்தைப்

*117. பிஹார், பா.19, ப.116*
*118. காமிலுத்தவாரிஹ் பா.2, ப.106*

போன்றிருந்த அன்றைய நாளில், இமை மூடாத கண்களும், எட்டிப் பார்க்கும் கழுத்துகளுமாக குபாவை நோக்கியவாறு மக்கள் எதிர்பார்ப்பிலிருந்தனர்.

செழிப்பு மிக்க ஒரு வெள்ளிக்கிழமை நாளில், நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி, தமது மதீனா முனவ்வராவை வந்தடைந்தார்கள். அவர்களை, வரவேற்பாளர் கள் சூழ்ந்து கொள்ள மக்கள் அன்புடன் வரவேற்றனர். நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்களை சந்தித்த தன் மூலமாக அருளைப் பெற்றுக் கொண்ட அந்த மக்களின் மகிழ்ச்சிக்கு அளவே இருக்கவில்லை.[119]

இது, நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்களது மதீனா வரலாற்றின் ஆரம்பமாகும். மதீனாவிலே, நபியவர்கள், இஸ்லாத்தின் அடித்தளத்தை நிறுவியதோடு, அதன் சட்டதிட்டங்களையும் உறுதிப்படுத்தினார்கள்.

நபியவர்கள் வந்ததன் பின்னர் தான் யத்ரிபின் பெயர் மதீனத்துன் னபி, –நபிகளாரின் பட்டணம்– என பெயர் மாற்றம் செய்யப்பட்டது.[120] பின்னாளில், நபியவர்கள், மக்காவிலிருந்து மதீனாவுக்குச் சென்ற இந்த வருடமே இஸ்லாத்தின் வருடப் பிறப்பாகவும் கணிப்பிடப்பட்டது.

ஏனெனில், ஹிஜ்ரத் நிகழ்வு, தெளிவான பல உள்ளர்த் தங்களைக் கொண்டிருந்ததோடு, மதீனா முனவ்வராவிலேயே இஸ்லாம் தொடராக நிலைபெற்று நிற்கவும் வழிகோலியது. மூட நம்பிக்கைகளின் பாதிப்பற்ற ஒரு புதிய வாழ்க்கை வடிவம், கலாசாரம் இங்கு ஆரம்பமாகியது.

---

*119. இப்னு ஹிஷாம் பா.1, ப.494*
*120. மு:.ஜமுல் புல்தான், மஜமஉல் பஹ்ரைன்*

"இந்த நிராகரிப்போர் வெறுத்த போதிலும், அல்லாஹ் தனது ஒளியை பூர்த்தியாக்கி வைக்காமல் இருக்கப் போவதில்லை" (அத்தௌபா - 32)

## ஹிஜ்ரத் தரும் படிப்பினை

இன்று, இந்த மாபெரும் நிகழ்வு நடந்தேறி பதினான்கு நூற்றாண்டுகள் கடந்து விட்டன. ஹிஜ்ரத்தை மேற்கொள்ளவும் அதன் விளைவாக புதியதோர் உலகம் படைக்கவும் என முஸ்லிம்கள் பட்ட இன்னல்களும் செய்த தியாகங்களும் தனியாக ஆய்வுக்கு உட்படுத்த வேண்டியவையாகும்.

இதிலிருந்து நாங்கள் அதிகம் பயனடைந்து கொள்ள வேண்டிய பாடம் என்னவெனில், குறைஷியரின் தீங்குகளிலிருந்தும், சிரமங்களும், கஷ்டங்களும் நிரம்பிய மக்காவின் சூழலிருந்து விடுபட்டு, நிம்மதியையும் அமைதியையும் நிர்மூலமாக்காத, அமைதியான மதீனாவின் சூழலுக்குத் திரும்பிய அந்த முஸ்லிம்கள், தம்மை நிலைப்படுத்திக் கொண்ட போதிலும், தமது நேற்றைய கஷ்டங்களிலிருந்து ஒதுங்கிவிடவில்லை. அல்லாஹ் விரும்பிய சமூகமாக தாம் இருக்க வேண்டும் என்பதற்காக, தொடர்ந்தும் அல்லாஹ்வின் பாலும், அவனது மார்க்கத்தின் பாலும் அழைப்பதிலேயே நிலைபெற்றிருந்தார்கள்.

அவர்களது அர்ப்பணிப்புகளும் முயற்சிகளுமே இந்த உயர்ந்த அந்தஸ்துகளையும் வாழ்வின் செழிப்பையும் ஏற்படுத்தக் கூடிய விரைவானதும் வியக்கத்தக்கதுமான மாற்றத்தின் பின்னாலிருந்த இரகசியமாகும்.

நிச்சயமாக முஸ்லிம்களுடைய கண்ணியமானது, விசுவாசத்தினதும் நல்லமல்களினதும் நிழலிலே தான்

அமையப்பெற்றிருந்தது என்ற என்ள உயரிய படிப்பினையை ஹிஜ்ரத் நமக்கு வழங்குகிறது. ஹிஜ்ரத் பற்றிய ஒவ்வொரு நினைவின் போதும் உயிர் பெறச் செய்ய வேண்டிய சிந்தனைகளில் இதுவும் முக்கியமான ஒன்றாகும்.

# 12. மதீனாவில் இஸ்லாம்

## இஸ்லாமிய சகோதரத்துவம்

தனிநபர்களிடையிலான பரஸ்பர நம்பிக்கை, அன்புப் பரிமாற்றம், ஒத்துழைப்பு என்பவற்றிலே தான் ஒரு சமூகத்தின் பலமும் வளர்ச்சியும் பூரணத்துவமும் தங்கியிருக்கின்றன. இத்தகைய ஒரு சமூகத்தில் மகிழ்ச்சி கூடாரமிட்டுத் தங்கியிருக்கும்.

புனித இஸ்லாம், இத்தகைய ஒரு சமூகத்தைக் கட்டியெழுப்பவே முனைந்தது. இதனடிப்படையில் தான், தேசிய, இன, பிராந்திய வேறுபாடுகளையும் மொழியியல் முரண்பாடுகளின் திரைகளையும் முற்றாக அழித்தது. அனைத்து மனிதர்களும் நேராக உள்ள சீப்பின் பற்களைப் போன்று சமனானவர்கள் எனவும் இறையச்சம் மட்டுமே, மனிதர்களின் தரநிர்ணய அளவுகோல் எனவும் பிரகடனப்படுத்தியது.[121] அல்குர்ஆனின் கூற்று: 'நிச்சயமாக உங்களில்

121. பிஹார், பா.73, ப.293

அல்லாஹ்விடத்தில் மதிப்புக்குரியவர் உங்களில் அதிகம் இறையச்சமுள்ளவராவார்' (அல்ஹுஜுராத் - 13)

இஸ்லாமிய சகோதரத்துவம் என்பது, முஸ்லிம்களின் ஒன்றிணைப்பையும், ஒற்றுமையையும் குறிக்கின்ற சிறந்த சொல்லாடலாகும். அல்லாஹ் கூறுவதாவது: 'நிச்சயமாக முஃமின்கள் எல்லோரும் சகோதரர்களாவர்' (அல்ஹுஜுராத் - 10)

நபிகளாரின் முன்மாதிரி

நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள், மதீனாவில் இஸ்லாமிய அழைப்பின் மத்திய நிலையமாகவும் அனைத்து துறைகளுக்குமான நடைமுறைக் காரியாலயமாகவும் அமைந்த பள்ளிவாயலை நிர்மாணித்ததன் பின்னால், முஸ்லிம்களிடையே சிறந்த சமூகக் கட்டமைப்பை ஏற்படுத்துவதிலும் அவர்களிடையே உயர்ந்த சகோதரத்துவ உணர்வை உறுதிப்படுத்துவதிலும் தமது கவனத்தைத் திருப்பினார்கள்.

இந்த சகோதரத்துவ வாஞ்சையானது, முஹாஜிரீன் களுக்கு, அவர்கள் தமது குடும்பத்தினரையும் தமது தாயகத்தையும் இழந்து வந்திருந்த போதிலும், ஹிஜ்ரத்தினுடைய கசப்பை மறக்கடிக்கச் செய்து, அதிகமான நேசர்களையும், நம்பிக்கையாளர்களையும் அவர்களுக்குப் பெற்றுக் கொடுத்தது.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள், ஒவ்வொரு முஸ்லிமுக்கும் மத்தியில் பொதுவான சகோதரத் துவத்தை மாத்திரம் கட்டியெழுப்பவில்லை. மாறாக, ஒவ்வொரு இரு முஸ்லிம்களுக்கிடையிலும் விசேடமான உடன்படிக்கை மூலமான சகோதரத்துவத்தை ஏற்படுத்தினார்கள். அவர்கள்,

தமக்குரிய சகோதரராக ஹஸ்ரத் அலீயைத் தெரிவு செய்து, 'இவர் என்னுடைய சகோதரர்' என்று கூறினார்கள்.[122]

புனித அல்குர்ஆன், இஸ்லாமிய சகோதரத்துவத்தை புகழ்ந்துரைத்ததோடு, அதன் பெறுமதியையும் அறிவித்தது: 'உங்கள் மீதுள்ள அல்லாஹ்வின் அருட்கொடைகளை நினைவு கூருங்கள். நீங்கள் ஒருவருக்கொருவர் பகைவர்களாக இருந்த போது, உங்களது உள்ளங்களிடையே அவன் இரக்கத்தை ஏற்படுத்தினான். அவனுடைய அருட்கொடைகளி னால் நீங்கள் சகோதரர்களானீர்கள்.' (ஆலஇம்ரான் - 103)

இஸ்லாமிய சகோதரத்துவம் என்பது அழகான வார்த்தை வடிவம் அன்று, அது ஈமானுடைய உயிரின் பிரதிபிம்பமான யதார்த்த நிகழ்வாக அமைந்துள்ளது. அதன் பிரதிபலிப்புகள் தெளிவாகி, ஒன்றன் பின்னொன்றாக அவை வெளிப்படும். இமாம் ஸாதிக் அலைஹிஸ் ஸலாம் அவர்கள் இந்த பிரதிபலிப்புகளின் நிலை பற்றி தெளிவுபடுத்தும் போது இவ்வாறு கூறுகின்றார்கள்;[123] 'ஒரு முஃமின், மற்றொரு முஃமினின் சகோதரராவார். ஒருவர் மற்றவரை ஏமாற்றவோ. காட்டிக் கொடுக்கவோ, அடக்கியாளவோ மாட்டார்.'

உண்மையான இஸ்லாமிய சகோதரத்துவம் வலியுறுத்தக்கூடிய முக்கிய விடயங்களில், தனக்கு விருப்ப மானதையே தனது சகோதரனுக்காகவும் விரும்புவது, முடியுமான எந்த வழியிலேனும் தனது சகோதரனுக்கு உதவிக் கரம் நீட்டுவது என்பவை முக்கியமானவையாகும்.

அதேவேளை, மார்க்க ரீதியான உனது சகோதரன் தொடர்ந்து பசியிலும் தாகத்திலும் வாடி, வாழ்க்கையை

---

*122. இப்னு ஹிசாம் பா.2,ப.504-505*
*123. உஸுலுல் காபீ, பா.2, ப.166-167*

நடாத்த மூலதனமின்றி சிரமப்படும் போது, பெருமைக்குரிய ஆடைகளுடன் கண்ணியத்தை ஏற்படுத்திக் கொண்டு, தாகம் தீர்ந்தவனாகவும் வயிறு நிரம்பியவனாகவும் உலகில் வாழ்வதென்பது, இஸ்லாமிய சகோதரத்துவத்தில் இல்லாதது மட்டுமல்ல, அதை விட்டு வெகு தூரமானதும் கூட.

இமாம் ஸாதிக் குறிப்பிடுகின்றார்கள்; "ஒரு சகோதரனின் பசியை தீர்த்தல், அவனது மானத்தை மறைக்க ஆடையளித்தல், அவனது கஷ்டங்களைப் போக்குதல், அவனது கடனை அடைத்தல், அவன் மரணித்து விட்டால், அவனது குடும்பத்தையும், அவனது பிள்ளைகளையும் பொறுப்பேற்றுக் கொள்ளல் என்பவை ஒரு முஃமின், தனது சகோதர முஃமினுக்காக செய்ய வேண்டிய கடமைகளில் உள்ளவை."[124]

இஸ்லாமிய சகோதரத்துவம் என்பது, இஸ்லாத்தின் பார்வையில், பரம்பரை ரீதியான உறவு உட்பட, அனைத்து தொடர்புகளை விடவும் சக்தியும் உறுதியும் கொண்டதாகும்.

அல்லாஹ் கூறுகின்றான்; "(நபியே!) எந்த ஜனங்கள் அல்லாஹ்வையும், மறுமை நாளையும் விசுவாசங் கொண்டிருக்கின்றார்களோ அவர்கள், எவர்கள் அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் மாறு செய்பவர்களாக இருக்கின்றார்களோ அவர்களை நேசிக்கமாட்டார்கள். அவர்கள், தங்களுடைய மூதாதைகளாயிருந்த போதிலும், அல்லது தங்களுடைய சகோதரர்களாயிருந்த போதிலும் அவர்களுடன் இவர்கள் உறவாடுவதை நீர் காணமாட்டீர். இத்தகையோருடைய இருதயங்களில் தான் அல்லாஹ் விசுவாசத்தைப் பதியவைத்துத் தன்னுடைய உணர்வைக் கொண்டும் இவர்களைப் பலப்படுத்தி வைத்திருக்கின்றான்" (அல்முஜாதலா - 22)

---

*124. அல் காபீ, பா.2, ப.169*

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள் ஏற்படுத்திய இந்த புரட்சியின் பிரதிபலிப்பாக, பாரசீக ஸல்மானும், எத்தியோப்பிய பிலாலும் சமத்துவத்தின் கீழ் சகோதரர்களாகவும், நபிக்கு மிக நெருக்கமானவர்களாகவும் ஆனார்கள்.

இந்த ஆரம்பமானது, அச்சமூகத்தை சீர்திருத்துவதிலும், அவர்களுடைய நடைமுறைகளைக் கட்டுப்படுத்துவதிலும், இந்த சகோதரத்துவத்துவ அருளைப் பெற்றுக் கொண்டதன் மூலமாக, எல்லோரும் ஒரே குடும்பமெனக் கருதும் படியான சூழல் உருவாகுமளவு, பரஸ்பர அன்பு, இரக்கம், விட்டுக்கொடுப்பு, ஒத்துழைப்பு என்பவற்றின் உயிரோட்டத்தை விதைப்பதிலும் காரணமாக அமைந்தது. அவர்களில் ஒவ்வொரு தனிநபரும் மற்றவரின் மகிழ்ச்சியையும், வாழ்வையும் முக்கியத்துவப்படுத்தக் கூடியவர்களாக மாறினர்.

நாம் ஏற்கனவே கூறியிருந்தோம், இஸ்லாமிய சகோதரத்துவம் என்பது, சுற்றிச் சுழலக்கூடிய ஒரு பொறுப்பாகும். அதன் விளக்கத்திலிருந்து சிலவற்றை இங்கு பகிர்ந்து கொள்கின்றோம்.

சகோதரத்தும் என்பது பொதுவான கடமையென இஸ்லாம் தீர்மானித்துள்ளது. அதாவது, ஒவ்வொரு மனிதனும், பிறரது பிரச்சினைகளைத் தீர்த்து வைப்பதும், அப்பிரச்சினை யிலிருந்து அவரை விடுவிப்பதில் முடியுமானளவு பங்களிப்பு செலுத்துவதும் அவசியமாகும். எந்தவொரு மனிதனும், பிறரையும் அவர்களது வாழ்க்கைத் தேவைகளையும் உணராது, தனது நலன், தனது ஆன்மா, தனது வாழ்க்கையென கதவை இறுகப் பூட்டிக் கொண்டிருக்க முடியாது. இத்தகைய பொதுவான பொறுப்பின் அம்சங்களில் பின்வருபவை முக்கியமானவையாகும்:

1. பொருளாதார உதவி: இது, உடல் ஆரோக்கியம், கலாசாரம், தங்குமிட ஏற்பாடு, உழைப்பதற்கான கருவிகள் முதலான பலதரப்பட்ட பொருளாதார தேவைகளைக் குறிக்கும் சொல்லாகும். இது தொடர்பான விளக்கம், அனைத்தையும் உள்ளடக்கியதாகவும், மிகவும் நுணுக்கமாகவும் அல்குர்ஆனி லும் ஹதீஸிலும் பரவலாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

2. கல்வி மற்றும் பயிற்றுவிப்பு உதவி: இது, நன்மையை ஏவி, தீமையைத் தடுத்தல், பிறரை நெறிப்படுத்தி அவர்களுக்கு நேர்வழி காண்பித்தல் போன்றவற்றைக் குறிக்கிறது. ஒவ்வொரு முஸ்லிமும் தான் அறிந்ததவற்றை மற்றவரும் அறிந்து கொள்ளச் செய்ய, கற்றுக் கொடுக்க கடமைப்பட்டுள்ளான்.

எனினும், இந்த மாபெரும் கடமையை முஸ்லிம்கள் புறக்கணித்திருப்பதுதான் மிகவும் வருந்தத் தக்க விடயமாகும். ஆம். முஸ்லிம்கள் இந்த செழிப்பான சுன்னாவை விட்டு விட்டார்கள். தீமைகளும், பாவங்களும் பரவாமலிருக்க அவர்கள் எவ்வித முயற்சியும் எடுக்கவில்லை. நற்செயல்களின் பக்கமோ, அதன் பால் ஆசையூட்டுவதற்கோ அவர்கள் எவருக்கும் அழைப்பு விடுக்கவில்லை. இஸ்லாமிய சகோதரத்துவத்தின் முக்கிய மான ஒரு வெளிப்பாடே .ந்த பரஸ்பர அறிவூட்டல்இ கல்வி நடவடிக்கை.

## தற்காலத்தில் இஸ்லாமிய சகோதரத்துவம்

சென்ற காலங்கள் அனைத்தையும் விட, தற்காலத்தில் ஐக்கியம், சகோதரத்துவம் என்பவற்றின் பால் அதிகம் தேவையுடையவர்களாக முஸ்லிம்கள் இருக்கின்றனர். உலகில் முஸ்லிம் உலகம் எனப் பிரஸ்தாபிக்கப்படும் பிரதேசங்கள் அனைத்தும் இயற்கையிலேயே பொருளாதார வளங்கள் நிறைந்த செல்வப் பிரதேசங்களாக காணப்படுகின்றன.

அல்லாஹ் எமது முஸ்லிம் நாடுகளில் வாரிவழங்கியுள்ள அடர்த்தியான இயற்கை வளங்கள், இஸ்லாத்தின் எதிரிகளான ஏகாதிபத்தியவாதிகளின் கண்களைக் கவர்கின்றன. அதனால், இப்பிரதேசங்களின் வளங்களே அவர்களின் ஒரே கவலையாக மாறிவிட்டது.

அவர்கள் எங்களிடையே ஏற்படுத்தக்கூடிய பிளவுகள், எங்களிடையே தோற்றுவிக்கக்கூடிய குழப்பங்கள் என்பவையெல்லாம், எங்களிடையிலான முரண்பாடும், பிளவும், எமது வீழ்ச்சிக்கு வழிவகுப்பதோடு, எமது நாடுகளில் அல்லாஹ் வழங்கியுள்ள அருட்கொடைகளை கொள்ளையிட்டுக் கொள்வதற்கான வாய்ப்பையும் அவர்களுக்கு வழங்குகின்றது.

எனவே, எம்மை துண்டம் துண்டமாக பிளவுபடுத்தப்பட்ட சமூகமாக மாற்றிவிடுவதையே நோக்காகக் கொண்ட முயற்சிகள் அனைத்தையும் வெற்றி கொள்வதற்கு நாம் விழிப்புடனும் புத்திக்கூர்மையுடனும் நடந்து கொள்ள வேண்டியது அவசியமாகும்.

எப்போது முஸ்லிம்களின் சக்தி வலுப்பெறுகின்றதோ, அப்போது, தம்மிடையிலான ஐக்கியத்தினதும் சகோதரத்துவத்தினதும் தேவையை அவர்கள் உணர்ந்து கொள்வார்கள். இத்துறையிலான முக்கிய விடயம் யாதெனில், எமது கல்வி நிறுவனங்களில் மாணவர்கள், சகோதரத்துவத்தின் பால் அதிக ஆர்வம் கொள்ளக்கூடிய வகையில், அதுபற்றிய அறிவை அவர்களுக்கு ஊட்ட வேண்டியது அவசியமாகும்.

இந்த விவகாரம் பல்கலைக்கழக மற்றும் உயர்கல்வி நிறுவனங்களின் பாடபோதனைகளில் உள்வாங்கப்பட்டு அதன் அவசியத்தை உணர்த்தும் படியாக நல்ல ஆசிரியர்களால் முன்னெடுக்கப்படுவது சிறப்புக்குரியதாகும். மேலும், தமது குழந்தையை ஆரோக்கியமான இஸ்லாமிய சூழலில்

வளர்ப்பதும் சம வயதுடைய பிறரின் கஷ்டங்களை அவர்கள் உணர்ந்து கொள்ளச் செய்வதும் அவ்வீட்டின் கடமையாகும்.

ஆகவே எங்களுடைய உணர்வுகளெல்லாம் புதிய இஸ்லாமிய சகோதரத்துவத்தை நோக்கியதாக அமைய வேண்டும். எங்களுடைய செயல்களெல்லாம் முஸ்லிம்களின் ஒற்றுமையை உறுதிப்படுத்துவதிலும் அவர்களிடையே சகோத ரத்துவத்தை ஏற்படுத்துவதிலும் உலகம் முழுவதிலும் ஒரே கரமாக மாறுவதிலுமான பாதையில் அமைய வேண்டும்.

## 13. இறைபாதையில் ஜிஹாத்

நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள், சமாதானத்தினதும் சகோதரத்துவத்தினதும் கொடியை உயர்த்தியவர்களாக, அவற்றின் இறுதிவரையான முடிவை எய்தும் சக்தியுள்ளவர்களாக அனுப்பப்பட்டார்கள்.

அல்குர்ஆன் கூறுவதாவது; "நபியே! அகிலத்தார் அனைவருக்கும் அருட்கொடையாகவே உம்மை நாம் அனுப்பியுள்ளோம்" (அல்அன்பியா - 107)

திரிபுக்குட்படாத, சரியான, நிம்மதியான வாழ்வினதும், சர்வதேச சமாதானத்தினதும் அடிப்படைகள் இங்கு வலியுறுத்தப்படுவதை நாம் உணர முடியும்.

இஸ்லாம், ஏற்றத்தாழ்வுகள் மற்றும் அதிகமான சண்டைகளில் தூண்டற் காரணியாக அமைந்திருந்த தேசிய, வகுப்பு வேறுபாடு என்பவற்றின் மூலமான பிரச்சினைகளைக் களைவதற்கு சக்தி பெற்றிருந்ததோடு, இப்பிரச்சினைகளுக்கு மிகச்சிறப்பான தீர்வுகளையும் முன்வைத்தது. இன்றைய எமது உலகில் நாகரிகத்தின் வெளிப்பாடுகள் உள்ள போதிலும் அவை இன்று வரை இந்த நெருக்கடிகளிலிருந்தான

விடுதலையை அடைந்து கொள்ளச் சக்தி பெறவில்லை. இதனால், யுத்தங்களின் கொடூரங்கள், தொடர்ந்து உலகை அழித்துக் கொண்டிருப்பதை நாம் பார்க்கின்றோம்.

இஸ்லாத்தில் நீதியும் சமாதானமும் மிக உயர்ந்த, தெளிவான அந்தஸ்தைப் பெற்றுள்ளன. இதனாலேயே வேதத்தையுடையவர்களுக்கும் ஒற்றுமையின் பால் அது அழைப்பு விடுக்கின்றது.

"வேதத்தையுடையவர்களே! (அதாவது) 'நாம் அல்லாஹ்வைத் தவிர வேறொன்றையும் வணங்கோம். நாம் அவனுக்கு யாதொன்றையும் இணைவைக்கோம். நம்மில் எவரும் அல்லாஹ்வையன்றி எவரையும் ஆண்டவனாக எடுத்துக் கொள்ளோம் எனும் எங்களுக்கும் உங்களுக்கும் மத்தியில் காணப்படும் ஒரு பொதுவான அம்சத்தின் பால் வருவீர்களாக." (ஆலஇம்ரான் - 64)

முஸ்லிம்கள் மதீனாவுக்கு ஹிஜ்ரத் சென்ற போது, அவர்களது தலைகளின் மேல் வெற்றிக் கொடி பறக்கவிடப் பட்டது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்க ளிடம் சமாதானத் தேட்டமுடைய வேண்டுகோள்கள் பல தரப்பினரிடமிருந்தும் முன்வைக்கப்பட்ட போது, அவர்கள் அதனை ஏற்றுக் கொண்டார்கள். ஹிஜ்ரி முதலாம் வருடத்தில் யூதர்களின் பல கூட்டத்தினருடன் அவர்கள் செய்துகொண்ட சமாதான உடன்படிக்கைகள் இதற்கு ஆதாரமாகும்.[125]

இதன் மூலமும், ஏனைய விடயங்கள் மூலமும், ஓர் ஆய்வாளர், இஸ்லாம் மனித சமூகத்திற்கு நிம்மதியையும் அமைதியையும் விரும்புகின்றது என்பதை அறிந்து கொள்ள முடியும்.

---

*125. அஃலாமுல் வரா, ப.69*

## ஜிஹாதின் நோக்கங்கள்

இஸ்லாம், உயர்வும் உயிரோட்டமும் மிக்க களமாகும். அது, சமூக, பொருளியல் ஒழுங்குகளை தனித்துவமான வழிமுறையூடாக சீர்படுத்தும் இயல்பைக் கொண்டுள்ளது. இஸ்லாம், குறிப்பிட்ட சமூகத்திற்கு அல்லது குறிப்பிட்ட காலத்திற்கு மட்டும் பொருத்தமுடையதாக இருந்த, புராதன ரோமர்களினதோ யூதர்களினதோ சட்டதிட்டங்களைப் போன்றதல்ல.

மாறாக, இஸ்லாம் உலகின் அனைத்து சமூகத்திற்குமுரிய பொது மார்க்கமாகும். இஸ்லாத்தினுடைய நீதி, சமாதானம் என்பவற்றின் கோட்பாடுகளை உறுதிப்படுத்துவதற்காக செயற் படுதல், உரிமை மறுப்புகளும் அநீதியும் இருக்கக்கூடிய தாழ்ந்த மக்களாயினும், அவர்களுக்கும் இஸ்லாம் சென்றடையச் செய்வதில் முடியுமான அனைத்து நடவடிக்கை களையும் மேற்கொள்தல் போன்றவற்றை சமயம் முஸ்லிம்களுக்குக் கடமையாக்கிறது.

உலகை விழிப்படையச் செய்யவும் சங்கையும் சுதந்திரமும் உள்ள வாழ்வை உறுதிப்படுத்தக்கூடிய சிறந்த வழிகளின் பால் மக்களை நெறிப்படுத்தவும் செயலில் இறங்குவது முஸ்லிம்கள் மீது கடமையாகும்.

இங்கு, தெளிவாக விளங்கிக் கொள்ள வேண்டிய விடயம் யாதெனில், முஸ்லிம் முஜாஹிதீன்கள், பூமியின் நிலப்பகுதிகளைக் கைப்பற்றி, தமது இஸ்லாமிய சாம்ராஜ்யத்துடன் அவற்றை இணைத்துக் கொள்ள வேண்டும் என்ற நோக்கின் அடிப்படையில் தமது ஜிஹாதை மேற்கொள்ளவில்லை. ஏனெனில், நீதியும் ஒழுங்கும் பேணப்படும் இடங்களினதும் அவை போன்ற இடங்களினதும் ஆட்சியை அவர்கள் மாற்றக்கூடியவர்களாக இருக்கவில்லை.

நிச்சயமாக ஜிஹாத் என்பது, எவ்வித கலப்புமற்ற ஒரு தூய முயற்சியாகவும் சமாதானத்தை நிலைநாட்டுவதற்காகவும், குழப்பங்களின் தீயை அணைப்பதற்காகவும் அல்லாஹ்வுடைய வழியிலும் அவனது அடியார்களை விடுவிக்கின்ற வழியிலும் முயற்சியை ஈட்டிக் கொள்ளக்கூடிய நன்றிக்குரிய பிரயத்தன மாகவும் இருக்கின்றது.

இந்த நோக்கம், இந்த உயர்வான பயிற்றுவிப்பு, வரலாறு நெடுகிலும் அதிகமதிகமான மனித சமூகத்தை நிர்ப்பந்தித்து வந்த சுயநலம், உலகாசை, ஆணவம் போன்றவற்றை முற்றாக அழிக்க உதவியது.

முறையான விழுமியங்களைக் கொண்ட சுதந்திரம், நீதி என்பவற்றின் பால் தாகமுடைய ஒவ்வொருவரும் இந்த ஒழுங்கின் படி தமது கடமைகளை நிறைவேற்றவும், இந்த வழியில் ஈட்டிக் கொள்ளக்கூடிய அனைத்து படித்தரங்களை யும் உறுதிப்படுத்திக் கொள்வதற்காக உழைக்கவும் விரையக் கூடியவர்களாகவே இருப்பார்கள் என்பதில் ஐயமில்லை.

அல்லாஹ் சொல்வது

'மனிதர்களில் தீங்கு செய்யும் சிலரை அவர்களில் சிலரைக் கொண்டே அல்லாஹ் தடுக்காவிட்டால், இப்பூமி அழிந்தேயிருக்கும். ஆயினும், நிச்சயமாக, அல்லாஹ் அகிலத்தார் மீது கருணையுடையோனாக இருக்கின்றான்' (அல்பகரா - 251)

யுத்தம் என்பது, இஸ்லாத்தில் முடிவான விடயமாகவோ, இறுதி இலக்காகவோ இல்லை. மாறாக, அது, சக்தியுள் ளோரின் சப்தத்தை மட்டுமே செவிமடுக்கக் கூடிய பலவான் களை வீழ்த்துகின்ற ஒரு கருவியாகவும், தம்மைத் தற்காத்துக்

கொள்ள முடியாத நிலையில் அநீதியிழைக்கப்படுவோரை விட்டும் அநீதியைத் தனிமைப்படுத்துவதற்கான உபாயமாகவுமே அமைந்துள்ளது. இதற்காகவே -பலவீனர்களை ஒடுக்குவதற் காகவே- ஆதிக்க வெறியாளர்களினதும் அழிச்சாட்டியம் புரிவோரினதும் பொருட்கள் கனீமத்தாக சுவீகரித்துக் கொள்ளப்படுகின்றன.

ஜிஹாத் என்பது, இஸ்லாத்தில், மனிதர்களுடைய நன்மைக்கான சிறந்த நற்செயலாக அமைந்துள்ளது. அது, எதிர்விளைவுகள், தீமைகள், அழிவுகள் என்பவற்றை விட்டும் தூரமானதாகும்.

பாரசீக தளபதி ருஸ்தும் என்பவரிடம் ஒரு முஸ்லிம் இஸ்லாமிய அழைப்பு விடுத்த அந்த வார்த்தைகளை நான் இங்கு வாசிக்கின்றேன். 'அல்லாஹ் தான் எங்களை இங்கு அனுப்பி வைத்தான். விருப்பமுடையவர்களை, அடியார்களை வணங்குவதை விட்டு அல்லாஹ்வை வணங்குவதன் பக்கமும் உலகின் நெருக்கடியிலிருந்து அதன் விசாலத்தின் பக்கமும் சமயங்களின் தீங்குகளிலிருந்து இஸ்லாத்தின் நீதித்துவத்தின் பக்கமும் எங்களை வெளியேற்றினான். அவன், தனது மார்க்கத்தின் பால் அழைப்பு விடுப்பதற்காக அவனது படைப்புகளிடம் எங்களை அனுப்பியுள்ளான். எங்களிடமிருந்து யார் இதனை ஏற்றுக் கொள்கின்றாரோ, அவரிடமிருந்து அதனை நாம் ஏற்றுக் கொள்வோம். அவரையும் அவரது நிலத்தையும் விட்டுவிட்டு நாம் திரும்பி விடுவோம்.' [126]

## இஸ்லாம் வாளால் பரவியதா?

ஆடக்குமறை ஆட்சியாளரின் அடாவடித்தனங்களால் துன்பப்பட்டுக் கொண்டிருந்த அப்பாவி ஒடுக்கப்பட்ட

---

*126. தாரீகுத்தபரி, பா.5, ப.2271*

மக்களுடன் தொடர்புகளை ஏற்படுத்துவது இஸ்லாமிய ஜிஹாதின் ஒரு நோக்கமாக இருந்தது. அடக்குமுறையில் இருந்து அவர்களை விடுவிப்பதோடு அம்மக்கள் தலை நிமிர்ந்து சுதந்திரமாக வாழ்ந்து நாகரிகம் படைப்பதற்கு வாய்ப்பைத் தரும் வகையில் அமைந்த இஸ்லாதடதினட் நெறிமுறைகளையும் புரிந்து கொள்வதற்கு வாய்ப்பளிக்கப் படுகின்றது. அவர்கள் மிக விருப்பத்துடன் இஸ்லாத்தின் தூதைப புரிந்து கொண்டு தமது வாழ்க்கை முறையாவும் அதனைக் கொள்கின்ற வாய்யப்பும் இருந்தது.

ஏனினும் முஸ்லிம்கள் ஏனையோரை வெற்றிகொண்ட எந்த சந்தர்ப்பத்திலும் அவர்கள் இஸ்லாத்தைத் தழுவுமாறு நிர்ப்பந்தித்ததாக எந்த வரலாற்றிலும் பதிவு செய்யப்பட்டிருக்கவில்லை.

வேதத்துடையவர்கள், இஸ்லாமிய சாம்ராஜ்யத்தின் நிழலில், அந்த நாட்டுக்கென குறிக்கப்பட்டிருந்த ஒப்பந்த நிபந்தனைகளைப் புறக்கணித்தவாறு வாழவும் சக்தி பெற்றிருந் தார்கள். அதேவேளையில், முஸ்லிம்களுக்கு வழங்கப்பட்டு வந்த பாதுகாப்பைப் போன்றே அவர்களுக்கும் பாதுகாப்பு வழங்கப்பட்டிருந்தது.

நபி (ஸல்) அவர்கள், ஹுதைபியா உடன்படிக்கையில் குறிப்பிட்டிருந்ததாவது: மக்காவாசிகளில் ஒருவர் இஸ்லாத்தை ஏற்று, மதீனாவுக்கு வந்தால், 'மக்காவிலுள்ள முஸ்லிம்கள் தமது இஸ்லாத்தை வெளிப்படுத்தியமைக்காக வேதனை செய்யப்படக்கூடாது, அவர்கள் நிர்ப்பந்திக்கப்படக்கூடாது, இஸ்லாமிய ஷரீஆவில் உள்ள செயல்களை செய்வதற்கு தடை விதிக்கப்படக்கூடாது' என்ற சரத்தின் அடிப்படையில், அவர்கள் மக்காவுக்கு திருப்பி அனுப்பப்படுவார்கள் என்று நிபந்தனையிட்ட போது, குறைஷியர் அதனை ஏற்றுக்

கொண்டனர்.[127] நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள் இவ் உடன்படிக்கையிலும் அதனை நடைமுறைப் படுத்துவதிலும் மிகவும் உறுதியாக இருந்து வந்தார்கள்.[128]

மக்கா வெற்றியின் போது, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள், குறைஷியரை அவர்களுடைய சுயவிருப்பிலேயே விட்டிருந்தார்கள். இஸ்லாத்தைத் தழுவுமாறு எவரையும் அவர்கள் நிர்ப்பந்திக்கவில்லை. இஸ்லாத்தின் கோட்பாடு அவர்கள் மீது திணிக்கப்படவில்லை. அவ்வாறு திணிக்கப்படவும் முடியாது. இந்தப் புதிய மார்க்கத்தை அறிவது, அதைக் கற்றுக் கொள்வது என்பன அவரவர் விருப்பத்துக்கு விடப்பட்டிருந்தது.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள், தம்மை வேதனைப்படுத்திய ஒரு சிலரைத் தவிர, ஏனைய எவரையும் தண்டிக்க வேண்டாமென முஸ்லிம்களுக்கு கட்டளையிட்டிருந்தார்கள்.[129]

காபிர்கள், பாதுகாப்பை நபியவர்களிடம் கோரிய போதெல்லாம், அவர்களுக்கு நபிகளார், உரிய பாதுகாப்பை வழங்கினார்கள். அது அவர்கள் இஸ்லாம் பற்றிய தெளிவைப் பெற்று அதனை ஏற்க வழிவகுத்ததல்லாமல் அவர்கள் மீது இஸ்லாம் திணிக்கப்படவேயில்லை.

உதாரணமாக, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களுடைய விடயத்தில் மிகக் கடுமையாக நடந்து கொண்டிருந்த ஸப்வான் இப்னு உமையா என்பவர், மக்கா வெற்றியின் பின் அச்சத்தின் காரணமாக ஜித்தாவுக்கு

---

*127. பிஹார், பா.20, ப.350*
*128. மே.கு., பா.20, ப.362*
*129. அ.்.லமுல் வரா, ப.110*

தப்பியோடினார். உமைர் இப்னு வஹப் என்பவர் நபிகளாரிடம் வந்து, 'அல்லாஹ்வின் தூதரே! ஸப்வான் என்னுடைய கோத்திரத்தின் முக்கியஸ்தர். தங்களைப் பயந்தவராக இங்கிருந்து விரண்டோடியுள்ளார். அவருக்கு பாதுகாப் பளியுங்கள்' என்று வேண்டிக் கொண்ட போது, நபியவர்கள், 'அவர் பாதுகாப்பளிக்கப்பட்டவர்' என்று கூறியவர்களாக, நபிகளாரின் பாதுகாப்பைப் பெற்றவர் என்பதை முஸ்லிம்கள் அறிந்து கொள்வதற்காக, மக்காவினுள் நுழையும் போது கொண்டு வருவதற்காக தமது தலைப்பாகையை அவரிடம் கொடுத்தனுப்பினார்கள்.

அதை எடுத்துக் கொண்டு வெளியான உமைர், ஜித்தாவை வந்தடைந்தார். நபியவர்களின் பாதுகாப்புக் கிடைத்த விடயம் பற்றி எடுத்துரைத்து, 'நிச்சயமாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள் மனிதர்களில் மிகவும் இரக்கமுள்ளவர்களும் மிகவும் அன்புள்ளவர்களு மாவார்கள். அவர்கள், உமது சிறிய தந்தையின் புதல்வருமா வார்கள். அவர்களது கண்ணியமே உமது கண்ணியமும், அவர்களது சிறப்பே உமது சிறப்பும்' என்றும் கூறினார்.

அதற்கு ஸப்வான், 'நான் எனது உயிருக்குப் பயப்படுகின்றேன்' என்று கூறினார். 'அவர்கள் மிகவும் இரக்கமுள்ளவர்கள்' என்று உமைர் மீண்டும் கூறியதன் பின், ஸப்வான் மக்காவுக்குத் திரும்பி நபிகளாரிடம் வந்தார். 'தாங்கள் எனக்கு பாதுகாப்பு வழங்கியுள்ளதாக இவர் உறுதிப்படுத்தினார்' என்று உமைரைக் குறித்துச் சொன்னார். அதற்கு நபியவர்கள், 'அவர் உண்மைதான் சொல்லியிருக் கிறார்' என்று கூறினார்கள். ஸப்வான், 'தங்களது மார்க்கத்தை ஏற்றுக் கொள்வதற்கு எனக்கு இரண்டு மாத காலக்கெடு தாருங்கள்' என்று வேண்டினார். நபியவர்கள் கூறினார்கள்; 'உமக்கு நான்கு மாதங்கள் தருகிறேன்.' அதன்பின், ஹுனைனிலும் தாயிபிலும் நீண்ட காலம்

காபிராகவே வாழ்ந்த அவர், பிறகு இஸ்லாத்தை சுயமாகத் தெரிவு செய்து ஏற்றுக் கொண்டார்.[130]

முடிவாக..

இவ்வாறு தான், இஸ்லாத்தில் யுத்தமென்பது, உண்மையை நன்கறிந்து கொண்ட பின்னரும் முரண்டுத் தனத்தால் அடுத்தவர்கள் மீது பலவந்தத்தைப் பிரயோகித்துஇ உண்மையின் பிரகாசத்தை அவர்கள் அடைந்து கொள்ள முடியாமல் தடுத்து அடாவடித்தனம் புரிகின்றவர்களுக்கு எதிராக தொடுக்கப்படுவதாகும். அதாவது அப்பாவி மக்களை அடக்குமறையாளர்களின் அழுங்குப் பிடியில் .ருந்து அவர்களை சுதந்திரக் காற்றை அனுபவிக்கச் செய்வதாகும்.

ஆரம்ப முஸ்லிம்களுடைய விசுவாசமும், அவர்களது உறுதியான நிலைப்பாடும், இஸ்லாம் வாளின் பலத்தினால் பரப்பப்படவில்லை என்பதற்கு சிறந்த சான்றாக விளங்குகின்றது.

இஸ்லாத்தின் ஆரம்ப கால முஸ்லிம்கள், தமது மார்க்கத்துடன் இறுக்கமான தொடர்பு கொண்டவர்களாக இருந்தார்கள். அவர்களது நடைமுறை வாழ்க்கைக்கு இடையூறு ஏற்படுத்தக்கூடிய அனைத்து நெருக்கடிகளையும் உயர்ந்த மனப்பக்குவத்துடன் அவர்கள் எதிர்கொண்டார்கள். ஒப்புவமையற்ற பொறுமையையும் கடைப்பிடித்தார்கள்.

இத்தகைய சூழலைச் சேர்ந்தவர் தான் ஹஸ்ரத் பிலால் (ரழி) அவர்கள். அவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டதை அறிந்ததும், அபூஜஹ்ல், கொதிக்கும் பாலைநில சுடுமணலில்

---

*130. காமில், பா.2, ப.248-249*

அவர்களை எறிந்து, அவர்களது நெஞ்சின் மேல் பெரும் பாறாங்கல்லை வைத்து அழுத்திக் கொடுமை செய்தான்.

ஆயினும், கொடிய வேதனைக்குள்ளாக்கப்பட்டுக் கொண்டிருக்கும் அந்த மனிதரின் 'அல்லாஹ் ஒருவன், அல்லாஹ் ஒருவன்' என்ற வார்த்தை அபூஜஹ்லை அதிர்ச்சியில் உறைய வைத்தது.[131]

இது, ஆரம்ப கால முஸ்லிம்கள், கொண்டிருந்த உறுதியான நிலை பற்றி நாம் முன்னர் கூறிய விளக்கச் சித்திரமாகும். இதற்குப் பின்னரும், இஸ்லாம் வாளினால்தான் பரவியது என்று யாரேனும் கூறமுடியுமா? இஸ்லாத்திற்கு பலவீனமான ஒரு புள்ளியாக அமையும் என்று - தமது ஆய்வுக்கும் தேடலுக்கும் பின்னால் - அவர்கள் கருதிக் கொண்ட இந்த தீய சந்தேகத்தை ஊக்குவித்த இஸ்லாத்தின் எதிரிகள், இந்த நிரந்தரமான மார்க்கம், தனது தனித்துவங்கள், சிறப்புகள் என்பவற்றின் மூலமாகத்தான் பரவியது என்பதை அறியத் தவறிவிட்டார்கள். இது, இயற்கையான மார்க்கமாகும்; இது நீதியான மார்க்கமாகும்; மேலும், இது, வாழ்வின் அனைத்து துறைகளையும் பொதிந்துள்ள அற்புத மார்க்கமுமாகும்.

கலாநிதி கூஸ்தாப் லெபோன், இஸ்லாத்தின் நடைமுறைகள், அதன் இலகுவான, சிறப்பான முன்னேற்றம், முஸ்லிம்கள் நுழைந்த பிரதேசமெங்கும் அதன் நிரந்தரத் தன்மை என்பவற்றைக் கண்டு பெரிதும் வியப்புறுகின்றார்.[132] ஒரு கிறிஸ்தவ எழுத்தாளர், இஸ்லாத்தின் தனித்துவங்கள் குறித்து இவ்வாறு கருத்துரைக்கின்றார்:[133] "இஸ்லாத்தின்

---

*131. உஸுதுல் காபா, பா.1, 206*
*132. தமத்துனெ .ஸ்லாம் வ அரப், ப.807*
*133. இஸ்லாத்தில் யுத்தமும் சமாதானமும், (பார்ஸீ), ப.345*

பரம்பலில் அதன் இராணுவ ரீதியான செயற்பாடுகளை விட எல்லைகளுக்கப்பாலும் அவர்கள் வைத்துக் கொண்ட வர்த்தக மற்றும் கலாசார தொடர்புகள் காத்திரமானவையாக அமைந்தன."

## 14. யுத்தங்கள் ஏன்?

இஸ்லாமிய அழைப்பின் முன்னேற்றத்திற்கு கஷ்டங்கள், தடுப்புகளாக அமைதல், அநீதியும், அதிகார துஷ்பிரயோகமும் இடம்பெறுதல் போன்ற நிர்ப்பந்த சூழ்நிலைகளில் இறுதித் தீர்வு என்ற நிலையில் அன்றி, நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள், யுத்தத்தை தீர்வுக்கு வழியாகக் கண்டதில்லை.

மனித, இயற்கை வளங்களை உறிஞ்சிக் கொள்வதற்காகவும் நில விஸ்தரிப்பை ஏற்படுத்திக் கொள்வதற்காகவுமே பெரும்பாலான ஆட்சியாளர்கள் போர் தொடுப்பது வழமை, இதற்கு முற்றிலும் முரணானவர்க ளாகவே நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள் காணப்பட்டார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்களுடைய காலத்தில் இடம்பெற்ற யுத்தங்களெல்லாம், உண்மையை அதன் இடத்திற்கு மீளச் செய்வதையும், அல்லாஹ்வின் அடியார்களை அடிமைப்படுத்தக் கூடிய

சுயநல ஏற்றத்தாழ்வுகளை நீக்குவதையும் மற்றும் அவசியமான சர்வதேச வாழ்க்கைத் திட்டத்தை உறுதிப்படுத்தக் கூடிய நேர்மையும் நடுநிலையும் மிக்க நீதியான ஆட்சியை நிலைநாட்டுவதையுமே நோக்காகக் கொண்டிருந்தன.

இத்தகைய ஒரு யுத்தம் சட்டபூர்வமற்றதாக எவ்வாறு கொள்ளப்பட முடியும்? நிச்சயமாக ஒவ்வொரு நபிக்கும் ஏதோ ஒரு ரூபத்தில் போராட்டம் அவசியமாகவே இருந்துள்ளது என்பது தெளிவான விடயமாகும். ஏனெனில், அவர்கள் சிரமத்திற்குள்ளாக்கப்படும் போது அல்லது யுத்தத்தின் பால் நிர்ப்பந்திக்கப்படும் போது இதைத் தவிர வேறு வழி அவர்களுக்கு இருக்கவில்லை.

நபி ஈஸா அலைஹிஸ் ஸலாம் அவர்களது நுபுவ்வத்துடைய காலம் குறுகியதாகும். தவிரவும், யுத்தத்தை நிர்ப்பந்திக்கக்கூடிய சூழ்நிலைகளும் அப்போது தோன்றியி ருக்கவில்லை. அவ்வாறு இல்லையென்றிருந்தால், குழப்பங் களை வேரோடு களைவதற்காக, போராட்டம் நடாத்த அவர்களும் முன்வந்திருப்பார்கள்.

இங்கு, கிறிஸ்தவப் பிரசாரகர்களின் செயற்பாடுகள், நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள் மேற்கொண்ட யுத்தங்களில் கொல்லப்பட்டோரின் எண்ணிக் கையை அதிகரித்துக் காண்பிக்கச் செய்து, அவ் யுத்தங்களை மிகக் கொடூரமானதாகச் சித்தரித்துக் காட்ட முனைந்த மைக்கு இரண்டு காரணங்களை நாம் கூறலாம்.

ஒன்று, இஸ்லாமிய சமூகத்தின் மத்தியில் புரட்சியின் உணர்வலைகளை மழுங்கடித்தல். நாளுக்கு நாள் விரிவடைந்து கொண்டிருந்த இஸ்லாத்தின் பரவலைத் தடுப்பதற்கான முடிவுச் செயற்பாடாக அது அமைதல்.

அடுத்தது கிறிஸ்தவத் தலைவர்கள், சிலுவை யுத்தத்தில் இலட்சக்கணக்கான முஸ்லிம் அப்பாவிப் பொதுமக்களை கொன்ற இழிவான குற்றச் செயல்களிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்வதற்கான தீய முயற்சி.

இங்கு, நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்களின் தற்காப்புப் போர்கள் பற்றிய சுருக்கமான விவரணத்தை விளக்க முனைகின்றோம். அதன்பின், உண்மை தெளிவாக வேண்டும் என்பதற்காகவும், மதிப்புக்குரிய வாசகர்கள் இந்த யுத்தங்களின் தத்துவத்தை விளங்கிக் கொள்ள வேண்டும் என்பதற்காகவும், இந்த யுத்தங்களின் போது உயிரிழந்தோரின் எண்ணிக்கையையும் தெளிவாக முன்வைக்கின்றோம்.

I. பத்ர் யுத்தம்:

நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள், நுபுவ்வத்தின் பின் பதின்மூன்று வருடங்கள், இரத்தம் ஒட்டுதலைத் தவிர்ந்த பல்வேறு கொடுமைகளை தாங்கிக் கொண்டு மக்காவில் வசித்தார்கள். இறுதியில், அவர்கள் தமது தாயகத்தை விட்டு மதீனாவுக்கு ஹிஜ்ரத் சென்றார்கள். எனினும், இவற்றுடன், நபியவர்களை துன்புறுத்துவதை காபிரகள் விட்டுவிடவில்லை. அவர்கள், தனிமைப்படுத்தப்பட்ட முஸ்லிம்களைக் கொடுமைப்படுத்தியதோடு, அவர்களை மக்காவிலிருந்து ஹிஜ்ரத் செல்ல விடாது தடுத்தும் வைத்திருந்தனர்.[134]

மேலும், அவர்கள், நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள் மீதும் அவர்களது தோழர்கள் மீதும்

---

*134. பிஹார், பா.19, ப.143*

கடினமான பொருளாதாரத் தடையைத் திணிப்பதில் உறுதியாக இருந்தனர். மதீனாவுக்கு உணவுப் பொருட்களை ஏற்றிச் செல்லும் பிரயாணக் கூட்டங்களைத் தடுத்து வைத்தனர். இந்தத் தடையானது நீண்ட காலம் நீடித்து, மதீனாவாசிகள் மீது பெரும் சுமையையும், கஷ்டத்தையும் ஏற்படுத்தியதோடு, அத்தியவசியமான உணவுப் பொருட்களைப் பெற்றுக் கொள்வதற்காக செங்கடல் ஓரங்களுக்கு பயணம் செய்ய வேண்டிய நிர்ப்பந்தத்திலும் அவர்களைத் தள்ளியிருந்தது.[135]

அபூஜஹ்ல், கடினமான வார்த்தைப் பிரயோகம் கொண்ட ஒரு கடிதத்தை நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்களுக்கு அனுப்பியிருந்தான். அதில், நபியவர்கள் மீதான தாக்குதலுக்கும் யுத்தத்திற்குமான ஏற்பாடு பற்றி குறிப்பிட்டிருந்தான்.[136]

இவ்விடத்தில் இரண்டு புனித அல்குர்ஆன் வசனங்கள் இறங்கின;

"அநியாயத்திற்குள்ளானவர்களுக்கு, யுத்தம் செய்ய அனுமதியளிக்கப்பட்டு விட்டது. நிச்சயமாக அல்லாஹ், இவர்களுக்கு உதவி செய்யப் பேராற்றலுடையோனாக இருக்கின்றான். இவர்கள், நியாயமின்றித் தங்கள் வீடுகளிலிருந்து துரத்தப்பட்டார்கள். எங்களுடைய இறைவன் அல்லாஹ் ஒருவன் தான் என்று கூறியது தான் இவர்கள் செய்த குற்றம். மனிதர்களில் அக்கிரமம் செய்யும் சிலரை, சிலரைக் கொண்டு அல்லாஹ் தடுக்காதிருந்தால், கிறிஸ்தவர் களின் ஆலயங்களும், அவர்களுடைய மடங்களும், யூதர்களு டைய ஆலயங்களும், அல்லாஹ்வுடைய திருநாமம் அதிகமாக ஸ்தோத்திரம் செய்யப்படும் மஸ்ஜித்களும் அழிக்கப்பட்டே

*135. முஹம்மத் மக்காவில் ஜொலித்த தாரகை, (பார்ஸி) ப.345*
*136. பிஹார், பா.19, ப.265-266*

போயிருக்கும். அல்லாஹ்வுக்கு எவர் உதவி செய்கின்றாரோ அவருக்கு, நிச்சயமாக அல்லாஹ்வும் உதவி செய்கின்றான். நிச்சயமாக அல்லாஹ் மிக்க பலவானும் யாவரையும் மிகைத் தோனுமாக இருக்கின்றான்' (அல்ஹஜ்: 39-40)

முஸ்லிம்களுடைய வாழ்வியல் உரிமைகளைப் பாதுகாப்பதற்காகவும், முஷ்ரிகீன்களுக்கு சாதகமான ஒரு சந்தர்ப்பத்தை முறியடிப்பதற்காகவும் ஹிஜ்ரி இரண்டாம் வருடம், நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள், குறைஷியரை எதிர்கொள்ள வெளிப்பட்டார்கள். பத்ரில், காபிர்களின் எண்ணிக்கையில் மூன்றிலொரு பங்கினராக மட்டுமே முஸ்லிம்கள் இருந்து, அவர்களை நேருக்கு நேர் எதிர்கொண்டார்கள். தமது ஈமானுடைய பலத்தினாலும், அல்லாஹ்வுடைய நாட்டத்தினாலும் வெற்றி பெற்றார்கள்.[137]

2. உஹத் யுத்தம்

பத்ர் யுத்தத்தில் பெருந்தொகையான காபிர்கள் கொல்லப்பட்டதைத் தொடர்ந்து, அவர்கள் அடுத்த தாக்குதலுக்கான ஆயத்தங்களை மேற்கொண்டார்கள். அவர்கள், மதீனாவை நோக்கி பெரும் படை திரட்டி வந்த போது, உஹத் எனுமிடத்தில், முஸ்லிம்களினதும், காபிர்களினதும் படைகளுக்கிடையே யுத்தம் மூண்டு பின் நிறைவு பெற்றது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள் குறிப்பிட்டிருந்த சில நடைமுறைகளைப் போராளிகள் சிலர் தவறவிட்டதன் காரணமாக இந்த யுத்தத்தின் முடிவு முஸ்லிம்களுக்குச் சாதகமானதாக அமையவில்லை.[138]

---

*137. காமில், பா.2, ப.118*
*138. தபகாத் பா.1, ப. 25 - 29*

3. கந்தக் (அஹ்ஸாப்) யுத்தம்:

ஹிஜ்ரி ஐந்தாம் வருடம் பனூநழ்ர் கோத்திரத்தைச் சேர்ந்த யூதர்களில் பலர், முஸ்லிம்களுக்கெதிராக குறைஷி யரைத் தூண்டி விடுவதற்காக மக்காவுக்குச் சென்றனர். சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்ட குறைஷியர், பல்வேறு கோத்திரங்களிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்ட வீரர்களைக் கொண்ட பெரும் படையொன்றைத் தயார் செய்தனர்.

முஸ்லிம்கள் தமது தலைநகருக்கு பூரண பாதுகாப்பை ஒழுங்கு செய்வதற்காக, மதீனாவைச் சூழ ஆழமான குழிகளை வெட்டிக் கொண்டனர். முஷ்ரிகீன்கள், சுமார் பத்தாயிரம் வீரர்களைக் கொண்ட பெரும் படையினராக இருந்த போதிலும், பெரும் வீரன் எனக்கருதப்பட்ட அவர்களது தலைவன் அம்ர் இப்னு அப்துவுத் என்பவனை ஹஸ்ரத் அலீ அவர்கள் வெட்டி வீழ்த்தியதும் எதிரிகள் தோல்வி கண்டு பின்வாங்கினர். முஸ்லிம்களுக்கான இந்த உதவி அல்லாஹ்விடமிருந்து வந்ததாகும்.[139]

4. பனூ குரைழா

பனூகுரைழா கோத்திரத்தினர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களுடன் சமாதான உடன்படிக்கை யொன்றை செய்திருந்தனர்.[140] எனினும், தமது உடன்படிக் கையை மீறி கந்தக் யுத்தத்தின் போது, முறித்து விட்டு, குறைஷியரின் தரப்பில் நின்று, முஸ்லிம்களுக்கு எதிராகப் போரிட்டனர்.[141] உடன்படிக்கையை முறித்து, எதிர்ப்போராளி களாக மாறியதனால், இஸ்லாத்தின் மீது ஏற்பட்ட அச்சுறுத்

---

*139. அத்தபரி, பா.3, ப.1463 - 1476*
*140. மதீனாவை அண்மித்து வாழ்ந்த ஒரு யூத கோத்திரம்*
*141. பிஹார், பா.20, ப.191, தபரி, பா.3, ப.1472*

தலின் காரணமாக, அவர்களுடனான யுத்தத்தை அவசியமெனக் கருதிய நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள், கந்தக் யுத்தத்தின் பின், பனூ குறைழா கோத்திரத்தினரை நோக்கி ஒரு படையை ஏவினார்கள். இருபத்தைந்து தினங்கள் தொடர்ந்த முஸ்லிம்களின் முற்றுகையின் பின்னால், எதிரிகள் சரணடைந்தனர்.

முஸ்லிம்களுக்கு எதிராக போர் செய்திருந்த அவ்ஸ் கோத்திரத்தினரில் சிலர், நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்களிடம் வந்து, தம்மை மன்னிக்கும் படியாக வேண்டினர்.

அவ்ஸ் கோத்திரத்தினரின் முக்கியஸ்தர்களில் ஒருவராக இருந்த ஸஅத் இப்னு முஆதை, -ஸஅத், தனது கோத்திரத்தார் மீது இரக்கமாக நடந்து கொள்வார் என்று எண்ணியவர்களாக- அவர்களுக்கு மத்தியில் இவ் விடயத்தில் தீர்ப்பளிக்கும் மத்தியஸ்தராக நியமிப்பது பற்றி நபியவர்கள் கேட்டார்கள்.

அவ்ஸ் கோத்திரத்தினர் அதனை ஏற்றுக் கொண்டார்கள். ஆனால், அவரோ, தமது கோத்திரத்தில் போர் செய்த அனைவரையும் கொலை செய்து விடும் படியும், அவர்களது பொருளாதாரங்களை பிறருக்கு பங்கிட்டு வழங்கும் படியும், அவர்களது பெண்களையும் சிறுவர்களையும் அரச பொறுப்பில் கொண்டு வரும்படியும் தீர்ப்பளித்தார்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள் ஸஅதிடம் கூறினார்கள்; "நிச்சயமாக நீங்கள், அல்லாஹ்வுடையவும், தூதருடையவும் தீர்ப்பை வழங்கியுள்ளீர்கள்"[142]

---

*142. தபரி, பா.3, ப.1487 - 1493*

5. பனூ முஸ்தலிக்

பனூல்முஸ்தலிக் என்போர், குஸாஆ கோத்திரத்தின் ஒரு குழுவாக இருந்தனர். அவர்கள் முஸ்லிம்கள் மீது காழ்ப் புணர்வு கொண்டவர்களாக இருந்தனர். இஸ்லாத்தின் மீதான அவர்களின் சதியை அறிந்த போது, நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள், முஸ்லிகளின் படையொன் றைத் தயார் செய்து, அவர்களுடைய திட்டங்களை அமுல்படுத் துவதிலிருந்து அவர்களைத் தடுப்பதற்காக, அவர்களை எதிர்கொள்ள அனுப்பினார்கள். இந்த யுத்தம் மரீஸா எனுமிடத்தில் நடந்தது. இதில் முஸ்லிம்களுக்கே வெற்றி கிடைத்தது. இவ் யுத்தம் ஹிஜ்ரி ஆறாம் வருடம் இடம் பெற்றது.[143]

6. கைபர்

கைபர் கோட்டையில், சுமார் பதினான்காயிரம் நபர்களைக் கொண்ட யூதர்களின் பெரும் மக்கள் கூட்ட மொன்று வசித்து வந்தது. அவர்களுக்கு, குறைஷியருடன் பொருளாதார, இராணுவ ரீதியான தொடர்புகளும் இருந்தன. இது, முஸ்லிம்களுடைய பாதுகாப்பிற்கு பெரும் அச்சுறுத்தலாக அமைந்திருந்தமையினால், ஹிஜ்ரி ஏழாம் வருடம், முஸ்லிம்கள் கைபர் யூதர்களை தாக்க முற்பட்டனர். பெரும் யுத்தத்தின் பின், யூதர்கள் இஸ்லாமிய உலகிடம் சரணடைந்தனர்.[144]

7. முஅத்தா

ஹிஜ்ரி எட்டாம் வருடம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள், தமது கடிதமொன்றைக் கொடுத்து,

---

*143. காமில், பா.2, ப.192*
*144. தபகாத் பா.2, ப.77 - 78*

அதனை, பஸராவின் அரசனிடம் ஒப்படைக்கும் படியாக ஹாரிஸ் இப்னு உமர் என்பவரை அனுப்பி வைத்தார்கள். ஆயினும், நபியவர்களின் தூதுவர் முஅத்தா எனுமிடத்தை அடைந்த போது அவ்விடத்தில் வைத்து கொலை செய்யப்பட்டு விட்டார்.[145] இதனை அறிந்ததும், நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள், எதிரிகளுடனான யுத்தத்திற்கு முஸ்லிம் களைப் பணித்தார்கள்.

ரோம், மற்றும் ஏனைய பிரதேசங் களைச் சேர்ந்த சுமார் ஓர் இலட்சம் போர் வீரர்களைக் கொண்டிருந்த, ரோமச் சக்கரவர்த்தி ஹிர்க்கலின் படையுடன் முஅத்தாவில் முஸ்லிம்கள் போரிட்டனர். அது மிகக் கடுமை யான ஒரு போராக அமைந்திருந்தது. அதில், முஸ்லிம் படைத் தளபதிகளான ஸைத் இப்னு ஹாரிஸா, ஜஃபர் இப்னு அபீதாலிப் மற்றும் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா உட்பட பலர் ஷஹீதாகினர். யுத்தத்தைத் தொடர முடியாமையால் முஸ்லிம்கள் மதீனாவுக்கு திரும்பினர்.[146]

8. மக்கா வெற்றி

முஸ்லிம்களுக்கும் முஷ்ரிகீன்களுக்கும் இடையில் இடம் பெற்ற ஹுதைபிய்யா உடன்படிக்கையின் நிபந்தனைகளில் ஒன்று, முஷ்ரிகீன்கள், முஸ்லிம்களையும் அவர்களைப் பின்பற்றுபவர்களையும் எவ்வகையிலும் கொடுமைப்படுத்தக் கூடாது என்பதாகும். ஆயினும், அவர்கள் அந்த உடன்படிக் கையை முறித்து, பனூபக்ர் கோத்திரத்தினருடன் இணைந்து கொண்டதோடு, முஸ்லிம்களுடன் உடன்படிக்கை செய்து, அவர்களைப் பின்பற்றக்கூடியவர்களாக இருந்த பனூகுஸாஆ

*145 டமஸ்கஸ் நகருக்கு அண்மையில் உள்ள ஓர் இடம்.*
*146. தபகாத், பா.2, ப.92 - 94*

கோத்திரத்தினரை அழிக்கும் விடயத்தில் தமக்கிடையே உடன்பாட்டுக்கும் வந்தனர்.

இந்த அத்துமீறலுக்கு தண்டனை வழங்கும் விதமாக மக்காவை வெற்றி கொள்வதற்கான திட்டமொன்றை நபியவர்கள் வகுத்தார்கள். அத்திடத்தை அமுல்படுத்தவும் செய்தார்கள்.

முஸ்லிம்கள், அந்த புனிதமான நகரினுள் நுழைந்தனர். சங்கைக்குரிய அல்லாஹ்வின் இல்லத்தில் வைத்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள் தமது வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த உரையை நிகழ்த்தினார்கள்:

"நபியின் அயலவர்களில் கெட்டவர்களாக நீங்கள் ஆகியிருந்தீர்கள்; பொய்ப்படுத்தினீர்கள்; விரட்டினீர்கள்; துன்புறுத்தினீர்கள்; இந்த ஊருக்கு நான் வருவதை விரும்பாது என்னுடன் சண்டையிட்டீர்கள்; ஆயினும், நீங்கள் தண்டிக்கப்படமாட்டீர்கள். விடுதலை தருகின்றேன்." [147]

அக்கூட்டத்தினர், கப்றுகளிலிருந்து எழுந்து வருவதைப் போன்று அங்கிருந்து வெளியாகினர்.

நபிகளாருடைய மகத்தான மன்னிப்பு, விட்டுக்கொடுப்பு என்பவற்றின் பிரதிபலிப்பாக, மக்காவாசிகள் கூட்டங் கூட்டமாக அல்லாஹ்வுடைய மார்க்கத்தில் வந்திணைந்து கொண்டனர்.

இந்த வெற்றியின் போது, தற்காப்புக்காகவேயன்றி போரிடக்கூடாது என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள் கண்டிப்பான உத்தரவு பிறப்பித்

---

*147. அஃலாமுல் வரா, ப.104-112, பிஹார், பா.21, ப.106*

திருந்தார்கள். எனினும், முஷ்ரிகீன்களில் எட்டு பேருக்கு மட்டும் தண்டனை நியமிக்கப்பட்டும் நால்வர் மட்டுமே தண்டிக்கப்பட்டனர். காலித் இப்னு வலீத் தலைமையிலான முஸ்லிம்களின் குழுவொன்றிற்கும் இக்ரிமா இப்னு அபீஜஹ்ல் தலைமையிலான முஷ்ரிகீன்களின் குழுவொன்றிற்கும் இடையே மட்டுமே அச்சமயத்தில் நேருக்கு நேரான மோதல் இடம்பெற்றது. அதில் சிலர் கொல்லப்பட்டனர்.[148]

## 9. ஹுனைன் மற்றும் தாயிப்

நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள் தமக்கு எவ்வித பாதிப்பையும் ஏற்படுத்த மாட்டார்கள் என்று தெரிந்திருந்த போதிலும், ஹவாஸான் கோத்திரத்தினர் இஸ்லாத்துடனான யுத்தத்திற்கென பெரும் படையொன்றை தயார்படுத்தினர். நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்களும் சுமார் பன்னிரெண்டாயிரம் போர் வீரர்களைக் கொண்ட ஒரு படையைத் தயார் செய்தார்கள். இரு படையணிகளும் ஹுனைன் பள்ளத்தாக்கில் சந்தித்து மோதிக்கொண்டன. இதில் காபிர்கள் தோற்கடிக்கப்பட்டு, சரணடைந்தார்கள்.[149]

இந்த யுத்தத்தின் பின், முஸ்லிம்களுடனான யுத்தத்தின் போது ஹவாஸான் கோத்திரத்தினருக்கு உதவி செய்து கொண்டிருந்த தகீஃப் கோத்திரத்தினருடனான யுத்தத்திற்கென, நபியவர்கள் தாயிபை நோக்கிச் சென்றார்கள். தகீஃப் கோத்திரத்தினர் மீதான சில கால முற்றுகையின் பின், நபியவர்கள் அவர்களை விட்டும் தமது அவதானத்தைத் திருப்பி, மக்காவுக்கு திரும்பினார்கள்.[150]

---

*148. காமில், பா.2, ப.247-250*
*149. பிஹாருல் அன்வார், பா.21, ப.149*
*150. இப்னு ஹிஷாம், பா.2, ப.482*

இவை தவிர்ந்த ஏனைய சிறு சிறு படையெடுப்புகளும் பிரசார பயணங்களும் நிகழ்ந்தன. பிரபலமான அறிமுகமுள்ள வரலாற்று நூற்களின் அடிப்படையில், இந்த யுத்தங்கள் அனைத்திலும் கொல்லப்பட்ட முஸ்லிம்களுடையவும், காபிர்களு டையவும் மொத்த எண்ணிக்கைகளை முன்வைக்கின்றோம்.

ஒரு பிரான்சிய அறிஞர் இவ்வாறு எழுதுகிறார்: "ஜிஹாத் செய்வதை முஸ்லிம்கள் மீது கடமையாக்கிய இஸ்லாம், மற்றைய மதத்தவர்களுடன் நீதியாகவும் பண்பாக வும் நடந்துகொள்ளுமாறும கட்டளையிட்டது. ஏனையோரின் சுதந்திரத்தை அது பூரணமாக அங்கீகரித்தது."[151]

| யுத்தம் | தாரீக் கமீஸ் | இப்னு ஹிசாம் | தாரீக் யாகூபி | தபகாத் | பிஹார் | தாரீக் தபரீ |
|---|---|---|---|---|---|---|
| பத்ர் | 84 | 84 | 86 | 84 | 84 | 84 |
| உஹத் | 93 | 92 | 90 | 109 | 109 | 70 |
| கந்தக் | 9 | 9 | 14 | 11 | 9 | 9 |
| பனூ குறைழா | 800 | 850 | 750 | 700 | 900 | 850 |
| பனூ முஸ்தலக் | 12 | – | | – | 10 | – |
| கைபர் | 32 | 23 | – | 98 | – | 3 |
| முவத்தா | 21 | 13 | – | 13 | – | 3 |
| மக்கா | 39 | 20 | – | 33 | – | 21 |
| ஹுனைன் | 96 | 101 | – | 87 | 112 | 85 |
| ஏனையவை | 250 | 122 | – | 119 | 333 | 210 |

குறிப்பு:

1. இந்த எண்ணிக்கைகளை கணக்கிட்ட வேளையில், முரண்பாடான அறிவிப்புகளிலிருந்து கூடுதலான தொகையையே தேர்ந்தெடுத்தோம். தகவல் கிடைக்காதவற்றை வெறுமையாக விட்டுள்ளோம்.
2. தப்ஸீர், தாரீக், ஹதீஸ் என்பவற்றிலான பத்து நூற்களில் தெரிவு செய்யப்பட்ட தொகுப்பான தாரீகுல் கமீஸ் நூலை எங்களுடைய ஆதாரங்களில் ஒன்றாகக் குறிப்பிட்டுள்ளோம்.

---

*151. தமத்துன், ப.148*

# 15. உலகளாவிய இஸ்லாம்

## கிழக்குக்கும் மேற்குக்கும் ஒரே மதம்

இஸ்லாம், அதன் ஆரம்ப நாளில் ஒரு தெளிவான ஊற்றைப் போன்று வெளியானது. பின் படிப்படியாக விருத்தியும் வளர்ச்சியும் அடைந்து, உலகின் பல்வேறு பகுதிகளிலுமுள்ள மனிதர்களின் தாகம் தீர்க்கும் பெரும் ஆறாகப் பெருக்கெடுத்தது.

இஸ்லாம் பரவிய போதெல்லாம் விசாலமாகவும் ஆழமாகவும் அதிகரித்தது. தவறான அமைப்புகள் அனைத்திலு மிருந்து மனித சமூகத்தை விடுவிப்பதற்கும் ஆரோக்கியமும் நன்மையுமுள்ள பாதையின் பால் நேர்வழி காட்டுவதற்கும் அது உண்மையாகவே சக்தி பெற்றது. சர்வதேச வல்லரசுக ளின் அரசியல் நடவடிக்கைகள் இருக்கின்ற போதிலும், இஸ்லாத்தை அழிப்பதற்காக அதன் எதிரிகள் மேற்கொள்ளக் கூடிய மோசமான செயற்பாடுகளுக்கு மத்தியிலும் இஸ்லாம் தொடர்ந்து நிலை பெற்று வருகின்றது. இஸ்லாம் அதிகமான உறுதிப்பாடுகளை அனுபவிக்கின்றது. அதிலுள்ள நிரந்தரத்

தன்மை, சர்வதேசத்தன்மை ஆகிய மாபெரும் அம்சங்களின் அடிப்படையில் தான் அதன் சட்டதிட்டங்களும் மார்க்க வரைமுறைகளும் விதிக்கப்பட்டுள்ளன.

இஸ்லாத்தின் மிகப்பெரும் தனித்துவம், ஒவ்வொரு காலத்திலும் இடத்திலும் மனிதர்கள் அனைவருடையவும் தேவைகளை உள்ளடக்கிய, அவர்களது வாழ்வின் அடித் தளத்தை அதன் மீது கட்டியெழுப்பக் கூடிய மனித இயல்பை ஒத்ததாக அது அமைந்துள்ளமையாகும். இதன்டிப்படையில், சிலரின் 'கிழக்கு கிழக்குதான்; மேற்கு மேற்குதான். கிழக்கிலே உள்ள ஒரு நபிக்கு மேற்கின் தலைமைத்துவத்தை நடைமுறைப்படுத்த முடியாது' எனும் கூற்று மிகப் பெரும் தவறான கூற்றாகவே அமையும். ஏனெனில், இயற்கையின் நியதியில், கிழக்கு மேற்கு என்ற வேறுபாடு கிடையாது. கிழக்கிலே உள்ள ஒரு மனிதன் இயல்பான மார்க்கமொன்றின் பால் தேவையுடையவனாவது போலவே, மேற்கிலே உள்ளவ னும் தேவையுடையவனாகின்றான்.

### மக்கா, நபிகளின் அழைப்பின் நிலையம்

அண்ணல் நபி அவர்கள், இருளடைந்திருந்த மக்கா வின் சூழலில் ஏகத்துவத்தின் உணர்வுகளை எடுத்துக் கூறிய போது, அவர்களது இலக்கு, ஹிஜாஸ் பிரதேசத்தையும், அரபுப் பிரதேசத்தையும் மட்டும் சீர்திருத்துவதாக அமைந்திருக்கவில்லை. மாறாக, அவர்கள் தமது உலகளாவிய தூதுத்துவத்தை அரேபியாவைச் சூழ்ந்துள்ள பகுதிகளிலிருந்து ஆரம்பிக்கும் படியாக ஏவப்பட்டிருந்தார்கள்.

அவர்கள், தமது நெருங்கிய உறவினர்கள் மத்தியிலான தமது முதல் அழைப்பில் கூறிய வார்த்தைகள் இதற்கு ஆதாரமாக விளங்குகின்றன. 'நிச்சயமாக நான், குறிப்பாக உங்களுக்கும், பொதுவாக மனிதர்கள் அனைவருக்கும்

அல்லாஹ்வின் தூதராக இருக்கின்றேன்'[152] இந்த யதார்த்தத்தை அல்குர்ஆனின் அதிக வசனங்கள் உண்மைப்படுத்துகின்றன. அவற்றில் மூன்று வசனங்களை மட்டும் இங்கு சுட்டிக் காட்டுகின்றோம்.

'(நபியே!) நீர் கூறுவீராக. நான் உங்கள் அனைவருக்கும் அல்லாஹ்வின் தூதராக உள்ளேன்.' (அல்அஃராப்: 158)

இங்கு விளிப்புரையானது, அரபியர் அல்லது கிழக்கத்தேயர் என்ற பதங்களை பிரயோகிக்கவில்லை என்பதையும், கிழக்கத்தேயர், மேற்கத்தேயரில் உள்ள அனைத்து மனிதர்களையும் உள்வாங்கிக் கொள்ளக்கூடிய விளிப்புரையாகவே அது அமைந்துள்ளது என்பதையும் நீங்கள் விளங்கிக் கொள்ள முடியும்.

'(நபியே!) உம்மை அகிலத்தார் அனைவருக்கும் அருளாகவே நாம் அனுப்பியுள்ளோம்.' (அல்அன்பியா: 107)

'இந்தக் குர்ஆனின் மூலம் உங்களுக்கும், அதை அடைந்தவர்களுக்கும் நான் எச்சரிக்கை செய்வதற்காகவே இது எனக்கு வஹீ மூலம் அறிவிக்கப்பட்டுள்ளது.' (அல்அன்ஆம்: 19)

இந்த வசனங்களிலிருந்து தெளிவாக விளங்குவதாவது, நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்களுடைய தூதுத்துவம் சர்வதேசத் தன்மை வாய்ந்ததாகும். இந்தத் தன்மையை, மதீனாவில் இஸ்லாம் பரவியதன் பின்னாலேயே அது பெற்றுக் கொண்டது என்பதல்ல. மாறாக, அனைத்து காலங்களையும் அனைத்து இடங்களையும்

---

*152. காமிலுத் தவாரிஹ், பா.2, ப.61*

உள்ளடக்கியதாக இருந்த அதன் அடிப்படை இயல்பிலும் இலட்சியத்திலும் ஆழப்பதிந்துள்ளதாகும்.

"அல் குர்ஆன் வியக்கத்தக்க விதத்தில் எப்போதும் –பலமுறை ஓதிய பின்னரும்– கூட புதுமையாகவே தோன்றக் காரணம் என்ன?" என்று கேட்ட மனிதனுக்குரிய பதிலாக இமாம் ஸாதிக் அலைஹிஸ் ஸலாம் அவர்கள் இவ்வாறு கூறினார்கள்: "ஏனெனில், அல்லாஹ், ஒரு காலத்தை விடுத்து குறிப்பிட்ட காலத்துக்கெனவோ, ஒரு மனிதரை விட்டு குறிப்பிட்ட மனிதருக்கெனவோ குர்ஆனை வழங்கவில்லை. ஏனவே அது, மறுமை வரை ஒவ்வொரு காலத்திற்கும், ஒவ்வொரு கூட்டத்திற்கும் புதியதாகவே இருக்கும்."[153]

உலகளாவிய தன்மைக்கு மற்றொரு சான்று

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள், ஹிஜ்ரி ஆறாம் வருடத்தில், உலகின் ஆட்சியாளர்கள் பலருக்கும் கடிதங்களை அனுப்பினார்கள். அவற்றில், முஹம்மதுர் ரஸூலுல்லாஹ் என்ற தமது திருநாமத்தைத் தீட்டியதோடு, இஸ்லாத்தின் பால் அவ் ஆட்சி யாளர்களை அழைத்துமிருந்தார்கள். இந்தக் கடிதங்களின் கருத்துகளெல்லாம், அல்லாஹ்வை வணங்குவது, ஐக்கியத் தைக் கடைப்பிடிப்பது, அல்லாஹ்வுக்காக சகோதரத்துவம் பேணுவது என்பவற்றின் பாலான அழைப்பைச் சுட்டிய ஒரே கருத்தாகவே இருந்தன. ஏனெனில், இந்த அழைப்பானது அல்லாஹ்வின் புறமிருந்து வந்த கட்டளையாகவும், மனிதர் களுக்கான எச்சரிக்கையாகவும் அமைந்திருந்ததோடு, அது, நஜ்ஜாஷி, முகவ்கஸ் மற்றும் ஏனையோரைப் போன்று

---

*153. சபீனத்துல் பிஹார், பா.2, ப.13*

யதார்த்தத்தை ஆய்வு செய்த ஒவ்வொருவரிடமும் ஆழமான தாக்கத்தை ஏற்படுத்தின.[154]

அரசர்களுக்கும் ஆட்சியாளர்களுக்கும் கோத்திரத் தலைவர்களுக்கும் வணக்கஸ்தலப் பொறுப்பாளர்களுக்கும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள் சுமார் 62 கடிதங்களை அனுப்பியிருந்தார்கள். அவற்றில் 29 இன்றும் காணப்படுகின்றன.[155] அவற்றில் ஒரு சிலவற்றை நாம் நோக்குவோம்.

*பாரசீக மன்னன் கிஸ்ரா(குஸ்ரோ)வுக்கு*

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமான அல்லாஹ்வின் திருநாமத்தால். அல்லாஹ்வின் தூதர் முஹம்மதிடமிருந்து பாரசீக மன்னர் கிஸ்ராவுக்கு. நேர்வழியைப் பின்பற்றி, அல்லாஹ்வை விசுவாசம் கொண்டு, வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை, அவன் தனித்தவன், இணைதுணையற்றவன், நிச்சயமாக முஹம்மத் அவனது அடியாரும் தூதருமாவார்கள் என்று சாட்சியமளித்தவர்கள் மீது சாந்தி உண்டாவதாக. நேர்வழியின் பால், இஸ்லாத்தின் பால் உம்மை அழைக்கின் றேன். நிச்சயமாக நான் மனிதர்கள் அனைவருக்கும் பொதுவான அல்லாஹ்வின் தூதராவேன். அனைவரையும் நான் எச்சரிக்கை செய்து உள்ளங்களை விழிப்பூட்டுகிறேன். காபிர்கள் எந்த சாட்டையும் கூறித் தப்ப முடியாது. நீர் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளும், ஈடேற்றம் பெறுவீர். இதனை மறுத்தால், நெருப்பு வணங்கிகளின் குற்றம் உம்மைச் சேரும்.[156]

---

*154. காமில், பா.2, ப.210*
*155. மகாதிபுர் ரசூல், பா.1, ப.35-41 மற்றும் 60-182*
*156. மே.கு. பா.1, ப.90*

*ரோமாபுரி மன்னன் ஹிர்கலுக்கு*

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமான அல்லாஹ்வின் திருநாமத்தால். அல்லாஹ்வின் தூதர் முஹம்மதிடமிருந்து ரோமாபுரி மன்னர் ஹிர்கலுக்கு. நேர்வழியைப் பின்பற்றிய அனைவர் மீதும் சாந்தி உண்டாவதாக. நான் உம்மை இஸ்லாத்தின் பால் அழைக்கின்றேன். நீர் ஏற்றுக் கொள்ளும், ஈடேற்றம் பெறுவீர். அல்லாஹ் உமது கூலியை இரட்டிப்பாக்கித் தருவான். இல்லாவிட்டால் உன் மக்கள் இஸ்லாத்தை ஏற்பதைத் தடை செய்யாதே. நீர் இதனைப் புறக்கணித்தால் குற்றம் உம்மைச் சேரும்."[157]

இத்தகைய கடிதங்கள் அரசர்களுக்கு மட்டும் எழுதப்படவில்லை. மாறாக, கோத்திரத் தலைவர்கள், சமயத் தலைவர்கள் முதலானோருக்கும், கடிதங்கள் வரைந்தார்கள்.

*யமாமா ஆளுனருக்கு*

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமான அல்லாஹ்வின் திருநாமத்தால். அல்லாஹ்வின் தூதர் முஹம்மதிடமிருந்து ஹூதா இப்னு அலிக்கு. நேர்வழியைப் பின்பற்றிய அனைவர் மீதும் சாந்தி உண்டாவதாக. நிச்சயமாக எனது மார்க்கம் முடிவான மார்க்கமாக வெளியாகும். நீர் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளும், ஈடேற்றம் பெறுவீர்.[158]

*யூதர்களுக்கு*

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமான அல்லாஹ்வின் திருநாமத்தால். அல்லாஹ்வின் தூதர்

---

*157. முஹம்மத் வ ஸமாம்தாரான், ப.162*
*158. அஸ்ஸீரத்துல் ஹலபிய்யா, பா.3, ப.286*

முஹம்மதிடமிருந்து. எனது சகோதரர் மூஸா, அவரது உடன்பிறப்பாளர் எதைக் கொண்டு அனுப்பப்பட்டனரோ அதைக் கொண்டே நானும் அனுப்பப்பட்டுள்ளேன்.

நிச்சயமாக நான், அல்லாஹ்வையும், தூர்சீனாவுடைய நாளின் போது மூஸாவின் மீது அவன் இறக்கியவற்றையும் உறுதிப்படுத்துகின்றேன். அவன், உங்களுக்காக கடலை பிளக்கச் செய்து, உங்களைக் காப்பாற்றினான். உங்களது பகைவர்களையும் அழித்தான். மன்னுஸல்வாவை உங்களுக்கு உணவாக வழங்கினான். உங்களுக்கு மேகம் நிழல் கொடுத்தது.

நிச்சயமாக நான், உங்களுக்கும் பொதுவாக மனிதர்கள் அனைவருக்கும் அல்லாஹ்வின் தூதராக அனுப்பப்பட்டுள்ளேன் என்பதை நீங்கள் உங்கள் வேதத்தில் கண்டுள்ளீர்களா? அவ்வாறெனில் அது உண்மையே. ஆகவே, அல்லாஹ்வை பயந்து கொள்ளுங்கள். இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளுங்கள். அது உங்களிடத்தில் இல்லையெனில் உங்கள் மீது எவ்வித திணிப்புமில்லை".[159]

*நஜ்ரான் பாதிரிமார்களுக்கு*

இப்ராஹீம், இஸ்ஹாக், யஃகூப் ஆகியோருடைய இறைவனின் திருநாமத்தால். அல்லாஹ்வின் தூதர் நபி முஹம்மதிடமிருந்து நஜ்ரான் குழுவினருக்கு. நிற்க, அடியார்களை வணங்குவதை விட்டு, அல்லாஹ்வை வணங்குவதன் பக்கம் உங்களை அழைக்கின்றேன். மேலும், அடியார்களின் அதிகாரத்திலிருந்து அல்லாஹ்வின் அதிகாரத்தின் பக்கம் உங்களை அழைக்கின்றேன்."[160]

---

*159. மகாதீபுர் ரஸூல், பா.1, ப.176*
*160. அல் பிதாயா வந்நிஹாயா, பா.5, ப.53*

நமது பணி

இஸ்லாத்தின் முன்னேற்றம், எல்லா விடயங்களுக்கும் முன்னால். நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்களினதும் அவர்களது அருமைத் தோழர்களினதும் தொடரான முயற்சிகளுக்கும் நிலையான விழிப்பிற்கும் பெரிதும் கடமைப்பட்டுள்ளது. இவ்விடயத்தில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள் இரண்டு காரணிகளைப் பயன்படுத்தினார்கள். அவையாவன:

ஒன்று, இஸ்லாத்தினுடைய யதார்த்தத்தை நன்கு விளங்கிக் கொண்டு, நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்களுடன் திடமான தொடர்பும், அவர்கள் மீது ஆழமான விசுவாசமும் கொண்ட பிரசாரகர்கள்.

மற்றையது, மிகச் சிறந்த வாழ்வின் விழுமியங்களை தெரிவிக்கக்கூடியதும் தெளிவான அமைப்பில் இஸ்லாத்தை பிரதிபலிக்கக் கூடியதுமான கடிதங்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்களின் ஆன்மா, உலகம் முழுவதிலும் இஸ்லாத்தின் தூதுத்துவத்தை பிரசாரம் செய்வதையும், அதற்கென நவீன சாதனங்களையும், புதிய வழிமுறைகளையும் பயன்படுத்திக் கொள்வதையும் முஸ்லிம் சமூகத்திடமிருந்து நிச்சயமாக எதிர்பார்த்த வண்ணம் இருப்பார்.

ஏலவே குறிப்பிட்டது போன்று, மனிதர்கள் அனைவருக்கும் பொதுவாக உள்ள இஸ்லாத்தின் தூதை பிரசாரம் செய்யும் விடயத்திற்காக, நாம் கொண்டுள்ள அனைத்து சாத்தியப்பாடுகளையும் பயன்படுத்திக் கொள்வது எமது கடமையாகும். அதேவேளை, கிழக்கிலும் மேற்கிலும்

உள்ள எமது சகோதரர்களை நேர்வழிப்படுத்துவதற்காக, இஸ்லாத்தைப் பரப்பும் இந்தப் பாதையில் பல தியாகங்களை மேற்கொள்ள வேண்டியிருப்பதையிட்டு கைசேதப்படாதிருப்பது அவசியமாகும். முழுமையான பணிவிடை, சிறப்பு என்பவற்றால் நிரம்பியவாறு இவ்வுலகில் நாம் வாழ்வோம். இதையே தான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள், ஹஸ்ரத் அலீயிடம் இவ்வாறு குறிப்பிட்டார்கள்:

"அல்லாஹ்வின் மீது சத்தியமாக, உங்கள் மூலமாக அல்லாஹ் ஒரு மனிதனுக்கு நேர்வழி காட்டுவதென்பது, பூமியின் மீதுள்ள சூரியனின் ஒளி படுகின்ற எல்லாற்றையும் அனைத்தை விட சிறந்ததாகும்."[161]

---

*161. பிஹாருல் அன்வார், பா.21, ப.361*

# 16. இறைவனின் இறுதித் தூதர்

அண்ணல் முஹம்மத் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களின் நபித்துவம் இறுதியானது என்பது, முஸ்லிம்களின் அனைத்து பிரிவினர் மத்தியிலும் தெளிவான நம்பிக்கையாகும். இறைவனுடைய ஏகத்துவத்தை நம்பிக்கை கொள்வது போன்றே அண்ணலாரின் நபித்துவத்தோடு மனிதர்களுக்கான அல்லாஹ்வின் தூதர்களின் வரிசை முற்றுப்பெறுகின்றது என்ற நம்பிக்கையும் சமயத்தின் அடிப்படையாகக் கருதப்படுகின்றது.

இஸ்லாம் மார்க்கம் எப்போதும் புதிதாகவே உயிரோட்டமாகவே தென்படுகின்றது. மனித சமூகத்தின் சிந்தனை விருத்தியடைந்து, அறிவின் எல்லை விரிவடைகின்ற போதெல்லாம் இந்த மார்க்கத்தின் நிரந்தரத் தன்மையும் புதமையும் பசுமையும் மீண்டும் நிரூபணமாகிறது. இந்த சிறப்பத் தன்மைக்குக் காரணமாக அமைகின்ற அம்சங்கள் சிலதை நாம் இனம் காண முயல்வோம்.

மனித இயல்புடன் ஒட்டியது

மனித இயல்புடன் பொருந்தி வரும் தன்மை மற்றும் அடிப்படையில் இயற்கையுடனான பொருத்தப்பாடு என்பன அதன் நிரந்தரத் தன்மைக்கான காரணங்களில் முக்கியமான தாகும். மனித இயற்கையினதும், அதன் உண்மை நிலையினதும் அடிப்படையில் உறுதி பெற்ற மார்க்கம், அழிவிலிருந்த தன்னைப் பாதுகாத்துக் கொள்ளும். முன்னேற் றங்களும், புதிய பிரச்சினைகளின் உருவாக்கமும் நிகழும் போதிலும், அதன் நிரந்தரத்திற்கும், அனைத்து காலங்களுக்கு மான அதன் பொருத்தப்பாட்டிற்கும் உரிய காரணங்கள் அதனை தற்காத்து வைத்திருக்கும்.

நெகிழ்ந்து கொடுப்பது

இஸ்லாத்தின் உயிர் வாழும் தன்மைக்கு இன்னொரு காரணம் அது ஒரு காலத்துக்கு மட்டும் மட்டுபடுத்த ஒன்றில்லாமல் சகல காலங்களுக்கும் பொருத்தமான வழிகாட்டல்களைக் கொண்டிருப்பதாகும். ஏனெனில், அது குறித்த இடத்துக்கு. இனத்துக்கு அல்லது காலத்துக்கு மட்டும் உரிய தூதாக இருப்பின் கால, தேச, வர்த்தமானங் களின் மாற்றத்துக்கு முகங்கொடுக்க முடியாமலும் மாறும் நிலைமைகளில் மக்கள் பிரச்சினைகளைத் தீர்த்துக் கொள்ள முடியாமலும் திண்டாடும்.

மாறுபடுதலுக்கு இசைந்து கொடுக்காத, குறித்த காலத்திற்கு அல்லது குறிப்பிட்ட இடத்திற்கென மட்டும் வரையறுக்கப்பட்ட சட்டதிட்டங்கள், நிரந்தரமாக உயிர்வாழும் தன்மையைப் பெற்றுக்கொள்ள முடியாது. உதாரணமாக, குதிரை அல்லது அது போன்ற இயற்கையான போக்குவரத்து சாதனங்களைத் தவிர்ந்த ஏனையவற்றை மனிதர்கள்

பயன்படுத்தக் கூடாது என்று சொல்லப்பட்டால், இந்தச் சட்டம் நிரந்தரமானதாக இருக்க முடியாது. ஏனெனில், அத்தியவசியத் தேவையானது, ஏனைய போக்குவரத்து சாதனங்களைப் பயன்படுத்த வேண்டிய நிர்ப்பந்தத்தை மனிதர்களுக்கு ஏற்படுத்துகின்றது. இச்சாதனங்கள் நேரத்தையும் சிரமத்தையும் சேமிக்கின்றன. எனவே, இத்தகைய ஒரு சட்டம் நமது காலத்தில் நிச்சயமாக வெல்லாக் காசாகி விடும் என்பதில் ஐயமில்லை.

உண்மையில், புராதன சமயங்கள் அழிந்து போனமைக்குக் காரணமாக இருந்த குறைபாடுகளில் ஒன்று, அவை நிரந்தரத்தன்மைக்குப் பொருத்தமான ஏற்பாடுகளைக் கொண்டிருக்காததோடு, குறிப்பிட்ட சமூகத்திற்கு, குறிப்பிட்ட காலத்திற்கு மாத்திரம் சொந்தமானவையாக இருந்தமையாகும்.

### பரிபூரண உள்ளடக்கம்

நிரந்தரமான ஒரு மார்க்கம், வாழ்க்கை நிகழ்வுகள் அனைத்திற்கும் சட்டம் வகுத்ததாகவும், பிரச்சினைகள் அனைத்திற்கும் தீர்வை முன்வைத்ததாகவும், மனிதர்களுடைய அனைத்துத் தேவைகளுக்கும் பதிலிறுப்பைக் கொண்டதாகவும் அமைந்திருப்பது இன்றியமையாததாகும்.

ஆம். தாகமுள்ள மனித ஆன்மா, இன்பமான உணவுகள், மதுபான பாவனை, மாலை போன்றவகளை அணிதல் முதலான உயிரோட்டமில்லாத வெற்று வழிமுறைக ளின் மூலமாக தன் தாகத்தைத் தீர்த்துக்கொள்ளாது.

### நேருக்கடிகளுக்குத் தீர்வு

நிரந்தரத் தன்மையைப் பெற்றுக் கொள்வதற்காக அவசியம் கொண்டிருக்க வேண்டிய விடயங்களில்,

நெருக்கடிகள், பிரச்சினைகள், இன்னல்கள் ஏற்படுகின்ற போது மனிதர்களுக்கு சரியான தீர்வுகளை முன்வைப்பதும் ஒன்றாகும். சமபத்துக்கு அடிப்படையாக இருக்கும் சட்டதிட்டங்களோடு உடனுக்குடன் தோன்றுகின்ற பிரச்சினைகளுக்கு முகங்கொடுத்து மார்க்கத்திலிருந்து விலகாமல் தீர்த்து வைக்கக் கூடிய ஏற்பாட்டைக் கொண்டிருத்தல் அவசியமாகும்.

உதாரணமாக, மதுபானம் அருந்துவதற்கான தடை, அதிலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்கான அவசியம் என்பவற்றின் அடிப்படையில், ஒரு நோயாளிக்கு மதுபானம் நிவாரணமாக அமையும் சந்தர்ப்பங்களில் இவ்விரு அம்சங்களும் ஒன்றுடனொன்று வேறுபாடு கொள்கின்றன. இதனால், இவ்விரண்டில் தான் மேற்கொள்ள வேண்டியது எது என்று அறியாத நிலையில், தடுக்கப்பட்ட ஒரு பாதையில் அந்த நோயாளி ஆகிவிடுகின்றான்.

## இஸ்லாம் உயிர்வாழும் மதம்

இஸ்லாமிய மார்க்க வரைமுறைகளும் சட்டதிட்டங்க ளும் மனிதனுடைய தேவையையும் இயற்கையையும் உறுதிப்படுத்தி, கருத்திற் கொள்கின்றன. இதனால், இந்த மார்க்க விதிமுறைகள் மனித இயற்கை உணர்வுகளிடையே நீதத்தை ஏற்படுத்தக்கூடியதாக வந்துள்ளது.

உதாரணமாக, பாலியல் உணர்வுகள், இஸ்லாம் அவற்றுக்கு தெளிவானதும், வித்தியாசமானதுமான தீர்வுகளை முன்வைத்துள்ளது. ஆந்த வரையறை மற்றும் வழிமுறைக்கு உட்பட்டு உணர்வுகளைத் தீர்த்துக் கொள்ள முடியும். அவ்வாறே, மனிதர்களுக்கு ஏற்படக்கூடிய அதிகமான பிரச்சினைகள், குழப்பங்களுக்குக் காரணமாக அமைகின்ற

பாலியல் துஷ்பிரயோகம், எல்லை மீறுதல் போன்றவற்றையும் அது சிறப்பாகத் தீர்த்து வைக்கும்.

இஸ்லாமிய சட்டதிட்டங்கள், கால ஓட்டத்திற்கேற்ப, அல்லது இடமாற்றத்துக்கு ஏற்ப திரிபுகளுக்கு உட்படக்கூடிய வாறு, குறித்த காலத்திற்கோ, இடத்திற்கோ வரையறுக்கப் பட்டதாக அமையும் படியான இயல்பைக் கொண்டதாக இல்லை. மாறாக, அது அனைத்து காலங்களையும், இடங்களையும், நிலைமைகள், விவகாரங்களையும் கவனத்திற் கொள்கின்ற அதி விசாலமான பொதுவான அம்சமாகும். உதாரணமாக, இஸ்லாத்தில் ஜிஹாத் என்பது, வாளைக் கொண்டே போரிட வேண்டும் என வரையறுக்கப்பட்டதாக அமைந்ததாக இருக்காது. மாறாக, முஸ்லிம்கள் தமது உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ளவும், யுத்த களத்தில் வெற்றியை ஈட்டிக் கொள்ளவும் தமக்கு முடியுமான அனைத்து சக்திகளையும் திரட்டிப் போராடுவது அவசியமாகும்.

இந்த சட்டம், எல்லா காலங்களுடனும் நிலைகளுடனும் இணைந்து செல்லக்கூடிய பொதுவான சட்டமாகும்.

இஸ்லாம் மார்க்கம், ஏனைய மார்க்கங்கள் அனைத்தையும் விட உள்ளடக்கத்தில் விசாலமானதாகும். அது, அறிஞர்களின் சிந்தனை கூட தடுமாற்றமும் இயலாமையும் கொள்ளுமளவு நுணுக்கமாகவும் திடமாகவும் பொருளியல், இராணுவ, சட்டவியல், ஒழுக்கவியல் மற்றும் ஏனைய இயல்களை சிறப்பாகத் தன்னகத்தே கொண்டு கையாளுகின்றது. இதற்கு ஆதாரங்கள் அவசியமில்லை. ஏனெனில், அல்குர்ஆன், மற்றும் நபிகளாரினதும் அவர்களது அஹ்லுப் பைத்தினரதும் ஹதீஸ்கள் என்பவற்றின் ஊற்றை அடிப்படையாகக் கொண்டு இத்துறைகளில் முஸ்லிம்

அறிஞர்கள் கோர்வை செய்த, பல்லாயிரக்கணக்கான நூற்களை இவ்விடயத்தில் கவனிக்க முடியும்.

மனிதனுடைய பணிகளை குறிப்பிடக்கூடிய பொதுவான சட்டதிட்டங்களை இஸ்லாம் கொண்டுள்ளதை நாம் காண்கின்றோம். அத்தோடு விசேட சந்தர்ப்பங்களில் தனி மனிதனோ சமுதாயமோ முகங்கொடுக்க வேண்டி ஏற்படுகின்ற நெருக்கடிகளுக்கு சமயாசமயத்தில் பொருத்தமான தீர்வுகளை வழங்கும் வழிமுறைகளையும் வைத்துள்ளது. 'இஸ்லாத்தில் பிறருக்கு தீங்கு விளைவிப்பதோ, தன்னை தீங்கில் உட்படுத்திக் கொள்தோ இல்லை', "நிர்ப்பந்தங்கள் விலக்கப்பட்ட விடயங்களை ஆகுமாக்கி வைக்கும்", "மார்க்கத்தின் நோக்கம் கஷ்டத்தைத் திணிப்பதல்ல".[162] முதலிய சட்டங்களின் அடிப்படையில், நபிகளாரினதும் பரிசுத்த இமாம்களினதும் வழிகாட்டலுக்கேற்ப, இஸ்லாமிய வரையறைகளை நன்கறிந்த மார்க்கச் சட்டவல்லுனர்கள் இத்தகைய தீர்வுகளை வழங்குவார்கள்.

இவ்வாறு, இந்த ஸ்திரமான அம்சங்கள் அனைத்தும் இஸ்லாத்தில் உள்ளவையாகும். இதனால், நாம் பிறிதொரு மார்க்கத்தின் பால் தேவையுடையவர்களல்ல என்பது உறுதி. ஏனெனில், அத்தகைய மார்க்கத்தின் பால் நாம் தேவையுடையவர்களாவதெல்லாம், எமது அனைத்து தேவை களையும் பூர்த்தி செய்யக்கூடிய ஒரு மார்க்கத்தை நாம் இழக்கும் போது தான். இதுபோன்றே, ஒரு சிறந்த மார்க்கத்தை கொண்டு வருவதற்கான புதிய ஒரு நபியின் பாலும் நாம் தேவையுடையவர்களல்ல. ஏனெனில், இது போன்ற மார்க்கத்தை நாம் அவசியமாகப் பெற்றுக்

---

*162. இத்தகைய சட்டங்கள் பிக்ஹ் நூல்களில் விரிவாகவிளக்கப் பட்டுள்ளது.*

கொண்டிருக்கின்றோம். ஒரு புதிய மார்க்கத்தின் பால் தேவையில்லையென்பது, ஒரு புதிய நபி தேவையில்லையென்பதாகும். இஸ்லாமிய மார்க்கத்தின் இறுதித்துவம் என்பது, நபிமார்கள் அனைவரிலும் இறுதியாக வந்த முஹம்மத் (ஸல்) அவர்களையே குறிக்கின்றது.

## இறுதித் தூது

புனித அல்குர்ஆன், இஸ்லாம் மார்க்கத்தின் பரிபூரணத் தன்மையையும் நபிகளாரின் இறுதித் தூதையும் பற்றி பல இடங்களில் குறிப்பிடுகின்றது.

"(நபியே!) உமதிறைவனின் வாக்கு, உண்மையாலும் நீதத்தாலும் பூரணமடைந்து விட்டது. அவனுடைய வாக்குகளை மாற்றுவோர் எவருமில்லை. அவன் யாவற்றையும் கேட்போனும், அனைத்தையும் நன்கறிந்தோனுமாவான்." (அல்அன்ஆம் - 115)

"முஹம்மத், உங்களது ஆண் பிள்ளைகள் எவருக்கும் தகப்பனாக இல்லை. எனினும், அல்லாஹ்வின் தூதரும் நபிமார்களில் இறுதியானவருமாவார். அல்லாஹ் அனைத்து விடயங்களையும் நன்கறிந்தோனாவறான்." (அல்அஹ்ஸாப்: 40)

ஹாதம்\ஹாதிம் என்ற சொல், ஒரு பன்மைச் சொல்லுடன் பொருந்தி வரும் போது ஆக ,றுதியானது அல்லது அத்தோடு முற்றுப் பெற்று விடுகின்றது என்ற அர்த்தத்தைக் கொடுக்கும். இதன்படி ஹாதமுந்நபிய்யீன் என்றால், நபிமார்களில் இறுதியானவர் என்று பொருள்படும்.[163] இதன்படி, எனவே, ஹாதமுன் நபிய்யீன் எனும் அல்குர்ஆன் வசனமானது, நபிமார்கள் அனைவரிலும் இறுதியானவர்

---

*163. ஜாமிஉல் ஜவாமிஉ, ப.275, அல்மீஸான், பா.2, ப.144*

என்பதையும், அவருக்குப் பின் நபியோ, ரசூலோ, வேதமுடையவரோ இருக்கமாட்டார் என்பதையுமே குறித்து நிற்கின்றது.

'நிச்சயமாக இந்த குர்ஆன், மிக உறுதியானதன் பக்கம் வழிகாட்டுகின்றது' (அல்இஸ்ரா: 9)

இவ்வசனம், அல்குர்ஆன், பூரணமான சட்டநூலும், உறுதியான வழிகாட்டலும் என்பதைத் தெரிவிக்கின்றது. இவ்வாறான ஒரு நிலையில் பிறிதொரு சட்டநூலின் பால் தேவை இருக்க முடியாது என்பது இயற்கையான அம்சமாகும்.

இஸ்லாத்தின் மூலாதாரங்களில் நபிகளாரின் இறுதித்துவத்தைக் குறிப்பிடக்கூடிய அதிகமான ஹதீஸ்கள் வந்துள்ளன. அவற்றில் சந்தேகம் கொள்வதற்கு எந்த வழியுமில்லை. அவற்றிலிருந்து சிலவற்றை இங்கு குறிப்பிடுகின்றோம்:

பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி கூறினார்கள்: 'மனிதர்களே! நிச்சயமாக எனக்குப் பின்னால் நபியில்லை. எனது வழிமுறைக்குப் பின்னால் வேறு வழிமுறையில்லை....'[164]

இமாம் பாக்கிர் அலைஹிஸ் ஸலாம் குறிப்பிட்டார்கள்: 'நிச்சயமாக அல்லாஹ், உங்களது வேதங்களைக் கொண்டு ஏனைய வேதங்களுக்கு முத்திரையிட்டுள்ளான். உங்களது நபியைக் கொண்டு ஏனைய நபிமார்களுக்கு முத்திரையிட்டுள்ளான்.'[165]

---

*164. முஸ்தத்ரக் வஸாயிலுஷ் ஷீஆ, பா.2, ப.262*
*165. உசூல், பா.1, ப.177*

இமாம் அலீ அலைஹிஸ் ஸலாம் கூறினார்கள்: "அவரைக் கொண்டு நபித்துவம் பூர்த்தியடைந்தது. அவரைக் கொண்டு வஹியும் நிறைவு பெற்றது."[166]

நபிகள் பெருமான் அருளினார்கள்: "எனக்கு நீ மூஸாவுக்கு ஹாரூனைப் போன்று அமைந்துள்ளீர். வித்தியாசம் என்னவெனில் எனக்குப் பிறகு யாரும் நபியாக மாட்டார்கள்."[167]

இமாம் ரிழா அலைஹிஸ் ஸலாம் குறிப்பிட்டார்கள்: "முஹம்மத் (ஸல்) அவர்களின் மார்க்கம் மறுமை நாள் வரை மாற்றத்திற்குள்ளாகாது. அவருக்குப் பின் மறுமை வரை வேறு நபியுமில்லை."[168]

இந்த அறிவிப்புகளும், இவை தவிர்ந்த ஏனையவைகளும் முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்களின் இறுதித்துவத்தையும் இஸ்லாத்தின் பரிபூரணத் தையும் நிரந்தரத்தையும் பூரணமான தெளிவுடன் அறிவிக்கின் றது. இந்த மார்க்கத்தின் மகத்துவமும் அதன் விழுமியங்களின் உயர்வும் அதன் கோட்பாடுகளின் உள்ளடக்கமும் அல்லாஹ்வின் அருட்கொடைகளில் மிக உயர்ந்த கொடைகளாகும்.

---

*166. நஹ்ஜுல் பலாஹா, குத்பா-133, ப.403*
*167. அல் காமில், பா.2, ப.278*
*168. உயூனு அக்பாரிர் ரிழா, பா.2, ப.80*

# 17. நபிக்குப் பின் தலைமைத்துவம்

கதீர்கும் பிரகடனம்

ஹிஜ்ரி பத்தாம் வருடம் ஹஜ்ஜுடைய காலம் ஹிஜாஸ் பாலைவனங்களில் ஹாஜிகளின் பெருந்தொகையான கூட்டம் ஒன்று குழுமியிருந்தது. அவர்கள் அனைவரும் ஒரே நோக்கத்துடன், ஒரே உணர்வுடன் நடந்து கொண்டிருந்தார்கள்.

இவ்வருட ஹஜ் விசேடமான உஷ்ணத்தினால் தனித்துவம் பெற்றதாக விளங்கியது. முஸ்லிம்கள் தமது பயணத்தை இடைநிறுத்தி, விரைவாகவும் ஆர்வமாகவும் கூடாரங்களை ஏற்படுத்திக் கொண்டார்கள்.

சூடான தல்பியாவின் சப்தம் மக்கா பாலைவனங்களில் உயர்ந்து ஒலித்தது. ஒரே நிறத்திலான இஹ்ராம் உடை தரித்த பாதையின் புழுதி படிந்த கண்ணீர் வழிந்தோடும் கண்களுடனான இந்த ஹாஜிகள், அல்லாஹ்வின் தோழர், நபிமார்களின் தந்தை இப்ராஹீம் அலைஹிஸ் ஸலாம்

கைகளினால் கட்டப்பட்ட, பூமியில் தனது அடியார்களுக்கான புகலிடமாக அல்லாஹ் பிரகடனப்படுத்திய அந்த சங்கைக்குரிய அல்லாஹ்வின் இல்லத்தினை தவாஃப் செய்து கொண்டிருந்தார்கள்.

நபிகள் பெருமான் அவர்கள், கடல் போன்ற ஹாஜிகளின் பெருக்கத்தினால் நிரம்பியிருந்த மஸ்ஜிதுல் ஹராமின் பக்கம் பார்வையை செலுத்தினார்கள். அவர்கள் அனைவரும், முஃமின்கள் எல்லோரும் சகோதரர்கள் என்ற ரீதியில் சகோதரத்துவத்துவத்துடன், நெருக்கமான மலக்குகள் போன்று பயபக்தியுடனும், பணிவுடனும் தொழுகை, பிரார்த்தனை மற்றும் வணக்கங்களில் மூழ்கியிருந்தனர்.

இந்த ஹஜ்ஜில் சுமார் 90,000 பேர் கலந்து கொண்டதாக பரீத் வுஜ்தி எழுதுகிறார்.[169] வேறு வரலாற்றாசிரியர்கள் ஹி. 10ம் ஆண்டில் நடந்த ஹஜ்ஜில் சுமார் ஒரு லட்சத்து இருபத்து நாலாயிரம் பேர் மட்டில் கலந்து கொண்டதாகக் குறிப்பிடுவா.[170]

இந்த மகத்தான நிகழ்வையிட்டு, மகிழ்ச்சியினதும், நிம்மதியினதும் அடையாளங்கள் நபி பெருமானின் முகத்தில் தென்பட்டன. அவர்கள், இந்த நிஃமத்துக்காக அல்லாஹ்வைப் புகழ்ந்து துதி செய்து கொண்டிருந்தார்கள். தமது தூதை பரிபூரணமான முறையில் நிறைவேற்றுவதற்கான சக்தியை அவர்கள் பெற்றுவிட்டிருந்தார்கள். ஆயினும், இவற்றோடு அவர்களது முகத்தில், கவலையினதும் சஞ்சலத்தினதும் பிரதிபலிப்பும் காணப்பட்டது. அண்மைக் காலமாகவே அண்ணலார் ஏதோ கடுமையான சிந்தனையில் அடிக்கடி தன்னை ஈடுபடுத்திக் கொண்டதைக் காண முடிந்தது.

---

*169. பரீத் வுஜ்தி, தாயிரத்துழல் மஆரிப், பா.3,ப.542*
*170. அல் கதீர், பா.1, ப.9*

சிலவேளை அந்த நிலையானது, அவர்களது செழிப்பான இதழ்களில் இருக்கும் புன்முறுவலையும், நபித்துவ மலர்வையும் மறைக்கக் கூடியதாக எழுந்திருந்தது.

அவர்கள், தமது மரணத்திற்குப் பின்னுள்ளவற்றையிட்டு சிந்தனை வயப்பட்டிருந்தார்கள். இந்த சமூக ஒற்றுமை சீர்குலைந்து விடுமா, அதிலேயுள்ள சகோதரத்துவத்தின் உயிர் நீங்கி விடுவமா, முஸ்லிம்கள் தமது முன்னைய அறியாமைக் காலநிலைக்கே மீண்டும் திரும்பிவிடுவார்களோ என்று எண்ணி நபியவர்கள் அச்சம் கொண்டிருந்தார்கள்.

தமது முயற்சிகளை அழிவிலிருந்து பாதுகாக்கக்கூடிய நீதமான, அறிவுமிக்க ஒரு சிறந்த தலைவர் பற்றிய தேவையை அவர்கள் நன்கறிந்திருந்தார்கள்.

அண்ணல் பெருமான், தமது செழிப்பான வாழ்க்கை முழுவதிலும், சிறிய பயணகாலத்திற்காக மதீனாவை விட்டு வெளியேறும் போதெல்லாம், தமது பொறுப்புகளை பொருத்த மான ஒரு மனிதரிடம் ஒப்படைத்து விட்டு அவருக்கு வழிப்படுமாறும் அவருடைய கட்டளைகளை அமுல்படுத்துமாறும் முஸ்லிம்களைப் பணிப்பது வழக்கம்..[171]

நபியவர்கள், ஒருபோதும், மதீனா முஸ்லிம்களை தாம் விரும்பியவாறு நடந்து கொள்வதற் கேற்றாற் போல் கைவிட்டுச் செல்லவில்லை. அவ்வாறிருக்க, நபியவர்கள், தமது மறைவுக்குப் பின் தமது சமூகத்தை ஒரு சரியான தலைவரை நியமித்து விடாமல் அம்போவென்று விட்டுச் சென்றதாக வர்ணிப்பது உண்மையோடு எவ்வளவு பொருந்தி வரும்.

---

*171. காமில், ப.216, 278, 242.*

இவ்விடயத்தை நபியவர்கள் நன்கறிந்திருந்தார்கள். மேலும், இந்த இடம் யாருக்குரியது? இதனை சிறப்பாக சாத்தியமாக்கக்கூடியவர் யார்? என்பதையும், நபியவர்களின் கிலாபத்தை தனக்கு மட்டுமே கொண்டுள்ள அந்த மனிதர் யார் என்பதையும் அவர்கள் நன்கறிந்திருந்தார்கள்.

இதனைத்தான், நபியவர்களின் நெருங்கிய உறவினர்களான குறைஷி குல முக்கியஸ்தர்களின் சமுகத்தில் குறிப்பிட்டார்கள்; "நிச்சயமாக இவர் என்னுடைய சகோதரர், என்னுடைய பின்னுரிமையாளர், உங்கள் மத்தியில் என்னுடைய பிரதிநிதி. அவருக்கு வழிப்பட்டு, அவருடைய சொல்லை செவிமடுங்கள்"[172]

அவர் தான், இமைப்பொழுதேனும் அல்லாஹ்வுக்கு இணைவைக்காத, எந்தவொரு சிலைக்கும் தலைசாய்க்காத தூய்மையும் பரிசுத்தமும் மிக்க மனிதர்.

அவர், போர்களில் தன்னை தானமீந்தவர், நபிகளாருக்காக தன்னுயிரை துச்சமாகக் கொண்டவர். இவையனைத்தும், இஸ்லாத்திற்காகவும் அதன் கொடியை உயர்த்துவதற்காகவுமே அமைந்திருந்தன.

அவர்களது பிரவகிக்கும் அறிவு, அல்லாஹ்வின் தூதருடைய அறிவிலிருந்து பெறப்பட்டதாகும். நபிகளாருடைய தீர்ப்புக்குப் பின் முதலாவது சிறந்த தீர்ப்பு அவர்களுடையது தான்.[173] பிரபலமாக அறியப்பட்ட அவர்தனா ஹஸ்ரத் அலீ இப்னு அபீதாலிப் அலைஹிஸ் ஸலாம் .

---

*172. தபரி, பா.3, ப.1171-73*
*173. பழாயிலுல் கம்ஸா, பா.1, ப.178-186*

ஹஜ்ஜுடைய காலம் முடிவுற ஒவ்வொருவரும் தத்தமது நகரங்களையும் குடும்பத்தினரையும் நோக்கியவாறு சென்று கொண்டிருந்தனர்.

திடீரென ஹாஜிகளை ஒன்று சேருமாறு நபிகளார் விடுத்த அழைப்பு பாலைவனமெங்கும் எதிரொலித்தது. என்ன நடந்தது? ஹஸ்ரத் ஜிப்ரீல் அலைஹிஸ் ஸலாம் நபியவர்களிடம் வந்து, அல்லாஹ்வின் வசனத்தை எத்திவைத்தார்கள்: "தூதரே! உம் இறைவனிடமிருந்து உமக்கு அருளப் பெற்றதை அறிவித்து விடும். நீர் அவ்வாறு செய்யாவிடில், அவனுடைய தூதை நீர் நிறைவேற்றியவராக மாட்டீர். மனிதர்களிலிருந்து அல்லாஹ், உம்மை இரட்சித்துக் காப்பாற்றிக் கொள்வான். நிச்சயமாக அல்லாஹ் நிராகரிக்கும் மக்களை நேரான வழியில் செலுத்தமாட்டான்." (அல்மாயிதா:67)

மிக உறுதியான வார்த்தைப் பிரயோகத்தினால் அல்லாஹ்விடமிருந்து வந்த இந்த கட்டளையை நிறைவேற்றவே இந்த முஸ்தீபு. இது ஹஸ்ரத் அலி அவர்களின் கிலாபத்திற்கான உத்தியோகபூர்வ பிரகடனமாக அமைந்திருந்தது. ஏனெனில், நபிகள் பெருமானார் அவர்கள், இதற்கான பொருத்தமான சூழலை எதிர்பார்த்திருந்த நிலையில் இறைகட்டளை வெளியாகியது. எனவே, நபிகள் ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள், சுட்டெரியும் கற்கள் நிறைந்த ஹிஜாஸ் பாலைவனத்தில் கதீர்கும் எனுமிடத்தில், இஸ்லாத்தின் உயிரும், அதன் உறுதியும் தெளிவாகும் வண்ணம், முஸ்லிம்கள் அனைவரையும் ஒன்றிணைத்தார்கள்.

தாம் எதற்காக இவ்வாறு ஒன்றிணைக்கப்பட்டுள்ளோம்? எந்த முக்கிய விடயம் நிகழ்ந்துள்ளது என்பதை மக்கள்

எவரும் அறிந்திருக்கவில்லை. எனினும், உடனடியாக ஜமாஅத் தொழுகைக்கான அழைப்பு விடுக்கப்பட்டு, ளுஹர் தொழுகை நிறைவேற்றப்பட்ட பின், நபிகள் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள், வானத்தினளவைப் போன்று அதிகரித் திருந்த அந்தக் கூட்டத்தின் மத்தியில் எழுந்து வந்தார்கள். ஒட்டகத்தின் மேலிருக்கையினால் தயார் செய்யப்பட்டிருந்த மிம்பரின் மீது ஏறி நின்றார்கள்.

உஷ்ணம் நிறைந்த அந்த ஹிஜாஸ் பாலைநிலமெங்கும் கூடாரமிட்டிருந்த அமைதியைக் கிழித்து அண்ணலார் உரையாற்றினார். இறைவனைப் புகழ்ந்து விட்டு அண்மித்து விட்ட தம் இறுதி நாட்கள் பற்றிய செய்தியையும் அறிவித் தார்கள். பின்னர் வந்திருந்தோரை விளித்து,

'மக்களே, நீங்கள் என்னைப் பற்றி என்ன கூறுவீர்கள்?' மக்களனைவரும், "நிச்சயமாக தாங்கள் பிரசாரம் செய்தீர்கள்; உபதேசம் புரிந்தீர்கள்; தியாகங்களை மேற்கொண்டீர்கள் என்று நாம் சாட்சி கூறுவோம். அல்லாஹ் தங்களுக்கு நற்கூலி வழங்குவானாக."

நபியவர்கள் மீண்டும் அவர்களை நோக்கி, 'அல்லாஹ்வையன்றி வணக்கத்திற்குரியோன் வேறு யாருமில்லையென்றும், நிச்சயமாக முஹம்மத் அவர்கள் அந்த அல்லாஹ்வுடைய அடியாரும் தூதருமாவார்கள் என்றும், அல்லாஹ்வுடைய சுவர்க்கம் உண்மையானது, அவனது நரகம் உண்மையானது, மரணம் என்பது உண்மையானது, மறுமை நாள் ஐயமின்றி வரக்கூடியது, அல்லாஹ் கப்றில் உள்ளவர் களை எழுப்புவான் என்றும் சாட்சியம் கூறமாட்டீர்களா?' என்று வினவினார்கள். அதற்கவர்கள், 'ஆம். நாம் அவற்றை சாட்சியம் கூறுகின்றோம்' என்று கூறினர். நபியவர்கள்,

'அல்லாஹ்வே! இதற்கு நீயே சாட்சியாக இருந்து கொள்' என்று பிரார்த்தித்தார்கள்.

இதைச் சொன்ன பின் நபிகள் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள், ஹஸ்ரத் அலியின் கரத்தைப் பிடித்து, இருவரதும் அக்குள் பகுதி வெளித்தெரியும் அளவுக்கு மேலுயர்த்தியவாறு கூறினார்கள்:

'நிச்சயமாக அல்லாஹ் எனது எஜமான். நான் முஃமின்களின் பொறுப்பாளன். நான் முஃமின்களுக்கு அவர்களது ஆன்மாக்களை விட உயர்ந்தவன். ஆகவே, நான் யாருக்கெல்லாம் பொறுப்பாளனாக இருந்தேனோ, அவர்களுக்கு அலீ பொறுப்பாளராவார்." (இதனை மூன்று முறை கூறினார்கள். இப்னு ஹம்பலுடைய அறிவிப்பில் நான்கு தடவைகள் கூறினார்கள்) பிறகு கூறினார்கள்: 'அல்லாஹ்வே! என்னுடைய பொறுப்பாளரை நீ பாதுகாப்பாயாக, அவருடைய எதிரிகளை நீயும் எதிரியாக்கிக் கொள்வாயாக, அவரை விரும்புவோரை நீயும் விரும்புவாயாக. அவரை கோபப்படுத்துவோரை நீயும் கோபிப்பாயாக. அவருக்கு உதவி புரிவோருக்கு நீயும் உதவி புரிவாயாக. அவரை தாழ்த்துவோரை நீயும் தாழ்த்துவாயாக. எப்போதும் அவருடன் உண்மை சுற்றிக் கொண்டிருக்கச் செய்வாயாக. மனிதர்களே! இதனை இங்கு சமுகம் தந்துள்ளவர்கள், சமுகம் தராதோருக்கு எடுத்துச் சொல்லவும்."

அதன்பின், ஜிப்ரீல் அலைஹிஸ் ஸலாம் அல்லாஹ்வின் திருவசனத்துடன் இறங்கினார்கள்: 'இன்றைய தினம் உங்களுக்கு உங்களுடைய மார்க்கத்தை பரிபூரணமாக்கி வைத்துவிட்டேன். உங்களுக்காக இஸ்லாம் மார்க்கத்தையும் தேர்ந்தெடுத்து உங்களுக்கு அருட்செய்து அங்கீகரித்துக் கொண்டேன்.' (அல்மாயிதா: 3)

நபிகள் ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள் கூறினார்கள்: 'மார்க்கத்தைப் பூரணப்படுத்தி, அருட்கொடைகளை முழுமையாக்கிய அல்லாஹ் மிகப் பெரியவன். இறைவனின் திருப்தி எனது தூதுத்துவத்தில் இருக்கின்றது. எனக்குப் பின் தலைமைப் பொறுப்பு அலிக்கு உரியதாகும்.'

இதன்பின், கூட்டத்தினர் அனைவரும் ஹஸ்ரத் அலீ அவர்களுக்கு வாழ்த்துத் தெரிவித்து பைஅத் செய்யத் தொடங்கினர். மூத்த ஸஹாபாக்களான அபூபக்கர், உமர் ஆகியோரே முதலில் வாழ்த்தினர். அவர்கள், ஹஸ்ரத் அலீயைப் பார்த்துக் கூறினர்: 'அபூதாலிபின் புதல்வரே! வாழ்த்துக்கள், வாழ்த்துக்கள். எங்களதும், ஒவ்வொரு முஃமினான ஆண், பெண்ணினதும் தலைவராக நீங்கள் ஆகிவிட்டீர்கள்.'[174]

## கதீருடைய ஹதீஸ் அறிவிப்பாளர்கள்

கதீருடைய ஹதீஸின் அறிவிப்பாளர்களின் எண்ணிக்கை சுமார் ஓர் இலட்சத்து இருபதாயிரத்தையும் தாண்டியுள்ளது. 'சமுகமளித்தோர், சமுகம் தராதோருக்கு இதனை எத்திவையுங்கள்' என்ற நபிகளாரின் கூற்றை செயலில் கொண்ட முஸ்லிம்கள் அந்தச் செய்தியைப் பரப்பலாயினர்.[175] அத்தோடு, இந்த நிகழ்வானது, அவ்வருடத்திலான ஹஜ் பயண நிகழ்வுகளில் முக்கியமான ஒன்றாக அமைந்திருந்தது.

அதற்கு இருபத்தைந்து வருடங்கள் கடந்த பின்னரும் - அதாவது, ஸஹாபாக்களில் அதிகமானோர் மரணித்து

---

*174. ஆல் கதீர், பா.1, ப.9-11*
*175. மே.கு., பா.1, ப. 60-64*

சொற்பமானோரே எஞ்சிய சந்தர்ப்பத்தில் ஹஸ்ரத் அலீ அலைஹிஸ் ஸலாம் மஸ்ஜிதுல் கூபாவில் வைத்து, நபிகள் ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்களிடமிருந்து கதீருடைய ஹதீஸை செவிமடுத்தவர்களை, அதனைக் கூறும் படியாக வேண்டிக் கொண்டார்கள். அக்கூட்டத்திலிருந்து முப்பது நபர்கள் எழுந்து, அந்த ஹதீஸை எடுத்துக் கூறினார்கள்.[176]

முஆவியாவுடைய மரணத்திற்கு இரண்டு வருடங்களுக்கு முன்னர், இமாம் ஹுஸைன் அலைஹிஸ் ஸலாம் மினாவில் வைத்து பனூஹாஷிம்களையும், அன்ஸாரீன்களையும் ஏனைய ஹாஜிகளையும் ஒன்று சேர்த்தார்கள். அந்தக் கூட்டத்தாரைப் பார்த்துக் கேட்டார்கள்: 'அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்கிறேன், கதீர்கும்முடைய நாளில், நபிகள் ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள், ஹஸ்ரத் அலியின் தலைமைத்துவத்தை உறுதிப்படுத்தியதையும், சமுகமளித்தோர் சமுகம் தராதோருக்கு எத்திவைக்கும் படியாகப் பணித்ததை யும் நீங்கள் அறிவீர்களா?' என்று கேட்டார்கள். அப்போது அவர்கள் அனைவரும், 'அல்லாஹ்வின் மீது ஆணையாக ஆம்' என்று கூறினார்கள்.[177]

அஹ்லுஸ்ஸுன்னா உலமாக்கள், தமது கிரந்தங்களில், இந்த ஹதீஸைக் கேட்டு அறிவிப்பு செய்த நூற்றுப் பத்து ஸஹாபிகளின் பெயர்களைப் பதிவு செய்துள்ளனர்.[178] அதேவேளை, சுன்னாவின் மீது மிக்க ஞானமுள்ள அறிஞர் களில் பலர், இந்த ஹதீஸுக்கென தனியான பல நூற்களையும் கோர்வை செய்துள்ளனர்.[179]

---

*176. அல்கதீர், பா.1, ப.166-174*
*177. மே.கு., பா.1, ப.198-199*
*178. மே.கு., பா.1, ப.14-61*
*179. ஆல்கதீர், ப.152-157*

## ஹதீஸின் பொருள்

இந்த ஹதீஸிலுள்ள மௌலா, வலீ என்ற சொற்பதங்கள், இஸ்லாமிய சமூகத்தின் தலைவர், நபிகளாரின் பிரதிநிதி என்ற கருத்தையே உணர்த்துகின்றன என்பதை அனைத்து ஆதாரங்களும் தெளிவுபடுத்தியுள்ளன. இதைத் தவிர வேறொரு கருத்தில் இதனைப் புரிந்து கொள்ள முடியாது.

நபிகள் ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள், இந்தப் பிரகடனத்தைச் செய்வதில் உரிய தருணம் வரும் வரை காத்திருந்தார்கள். இறைவனுடைய கட்டளையின் பின்னரே மக்களுக்கு இவ்விடயத்தைத் தெரிவித்தார்கள் என்பதையும் ஏற்கனவே அறிந்தோம்.

இந்நிலையில், நபிகளாரின் இந்தக் கூற்றின் நோக்கம், வெறுமனே நபியவர்களுக்கும் ஹஸ்ரத் அலிக்கும் இடையிலான நெருக்கத்தை குறிப்பிடுவதே என்று நாம் கூற முடியுமா?

இதுதான் நோக்கமாகவும், நாட்டமாகவும் இருந்திருப்பின், அதனைக் கூறுவதற்கு ஏன் தயக்கம் காட்டியிருக்க வேண்டும். ஏன் இது, முஸ்லிம் சமூகத்தின் ஒற்றுமையையும் சகோதரத்துவத்தையும் பலவீனப்படுத்த வேண்டும்? அதுமட்டுமன்றி, அவர்கள் இருவருக்கும் இடையிலான நெருக்கம் என்ற அம்சம், ஒரு திசையில் சூரியனின் உஷ்ணமும், மறுபுறத்தில் பாலைவன சுடுமணலுமாக உள்ள கற்களடர்ந்த எரியும் பாலைவனப் பூமியில், தமது உடைகளின் ஓரங்களை பாதங்களுக்குக் கீழாகவும், சிலர் தலைக்கு மேலாகவும் பிடித்துக் கொண்டிருக்கும் நிலையில், வெறுமனே

நபியவர்களுக்கும் ஹஸ்ரத் அலிக்கும் இடையிலான நெருக்கம் ஹாஜிகளை ஒன்று சேர்த்து வைக்கத் தகுதி பெறுமா?

'நான் யாருக்கெல்லாம் –மவ் லா– தலைவனாக, பொறுப்பாளனாக இருந்தேனோ, அவர்களுக்கெல்லாம் அலி பொறுப்பாளராக இருப்பார்' என்று நபிகள் ஸல் லல் லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள் கூறுவதற்கு முன், தாம் முஃமின்களுக்கு அவர்களது ஆன்மாவை விடவும் உயர்ந்தவர், அன்னாரின் கட்டளைகளுக்கே அடிபணிந்தோம் என்ற விடயத்தையும் முஸ் லிம்கள் கூற வைத்தது எதற்காக.

நபிகள் ஸல் லல் லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள், ஹஸ்ரத் அலீ அலைஹிஸ் ஸலாம் அவர்களிடம் வழங்கிய விலாயத் எனும் பொறுப்பு அல்லது தலைமைத்துவம் என்பது, நபியவர்களுக்கே உரிய தலைமைத்துவமாகும் என்பது தெளிவாகின்றது.

இந்த விலாயத், நட்பு ரீதியான நெருக்கமோ, அன்பின் பிரதிபலிப்போ இன்றி, அது பொதுவான, அனைத்துக்குமுரிய பூரண தலைமைத்துவமாக இருக்கின்றது. அது அன்பையும் இரக்கத்தையும் பொதிந்ததாக இருக்குமானால், நபியவர்கள் முஃமின்களிடத்தில் எப்போதும் இரக்கமுள்ளவர்களாகவும், அன்புள்ளவர்களாகவுமே உள்ளார்கள் என்பது குறிப்பிடத் தக்கது.

ஹஸ்ஸான் இப்னு தாபித், நபிகளாருடைய அனுமதியுடன் கதீருடைய நிகழ்வை ஒரு கவிதையாக வடித்தார். ஹஸ்ஸானுடைய கவிதையில், ஹஸ்ரத் அலியினு டைய விலாயத் பற்றியும் தெளிவாக குறிப்பிடப்பட்டுள்ளது. இவற்றோடு, அந்தக் கவிதையில், மௌலா என்ற சொற்பதத்தின் விளக்கத்தை தவறாகக் குறிப்பிட்டதாகக்

கூறிக் கொண்டு, எந்தவொரு எதிர்ப்பாளரும், அந்தப் பெருந்தொகையான கூட்டத்திலிருந்து மறுப்புத் தெரிவிக்க முன்வரவில்லை. மாறாக, அனைவரும் அந்தக் கவிதையைப் புகழ்ந்து மெச்சக்கூடியவர்களாகவே இருக்கின்றார்கள். அக்கவிதையிலிருந்து சில வரிகள்:

'அவருக்கு நபி சொன்னார், அலியே எழுந்திரும், நிச்சயமாக நான் எனக்குப் பின் இமாமாகவும், வழிகாட்டி யாகவும் உம்மைத் திருப்தி கொண்டேன்

எவருக்கெல்லாம் நான் தலைவராக இருந்தேனோ, அவர்களுக்கு இனி இவரே தலைவர்

ஆகவே, அவரை உண்மையான பற்றுதலுடன் பின்பற்றி நடப்பீர்களாக.'[180]

ஹஸ்ரத் அலி அவர்களுக்குரிய இமாமத்தைச் சுட்டுவதாக, நபியவர்களின் கூற்றை ஹஸ்ஸான் விரிவாக்கம் செய்கின்றார். ஹஸ்ஸான் அறிந்து கொண்டதை, நாம் இன்று அறிந்து கொள்வதையே விளங்கிக் கொண்டுள்ள அனைவரிலிருந்து ஒருவரும் இதனை மறுத்துரைக்க முன்வரவில்லை.

நபிகள் ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள் தமது பிரகடனத்தை முடித்ததன் பின்னால், ஹஸ்ரத் அலி அவர்களுக்கு பெண்கள் உட்பட அனைவரும் வாழ்த்துத் தெரிவிப்பதற்காகவும், அவர்களுக்கு ஸலாம் கூறி, அவர்களிடம் விசுவாசப் பிரமாணம் செய்து கொள்வதற் காகவும் ஹஸ்ரத் அலியை அமரச் செய்வதற்கென ஒரு

---

*180. மே.கு., பா.2, ப.34-41*

கூடாரத்தை அமைக்குமாறு ஏவினார்கள்.[181] இந்த அம்சமானது, தலைமைத்துவத்துடனேயே பொருந்திச் செல்லக் கூடியது என்பது தெளிவான விடயமாகும்.

நபிகள் ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்கள் குறிப்பிட்டார்கள்: "எனக்கு வாழ்த்துத் தெரிவியுங்கள். நிச்சயமாக அல்லாஹ், நபித்துவத்தின் மூலமாக என்னை சிறப்பாக்கினான். இமாமத்தின் மூலமாக எனது குடும்பத்தினரை சிறப்பாக்கினான்."[182]

இவ்வாறு, இந்த சான்றுகள் அனைத்தும் கதீருடைய ஹதீஸையும், அதில் எவ்வித ஐயத்திற்கும் இடமில்லை என்பதையும் தெளிவுபடுத்துவதை மதிப்புக்குரிய வாசகர்கள் காணமுடியும்.

---

*181. மே.கு., பா.1,ப.270-1*
*182. மே.கு., பா.1, ப.274*

## 18. நபிகளாரின் நற்பண்புகள்

**ஒழுக்கம், சமூகத்தின் தேவை**

அறிவியலும் தொழில்நுட்பமும் முன்னேறும் போதெல்லாம் ஒழுக்கத்தின் பாலான மனித சமூகத்தின் தேவையும் அதிகரிக்கின்றது. நபிமார்கள், ஒவ்வொரு சூழலுக்கும் ஏற்ப கொண்டு வந்த ஒழுக்க சட்டதிட்டங்களை, அறிவியில், மற்றும் உற்பத்தித்துறை வளர்ச்சிப் போக்குடன் நடைமுறைப்படுத்துவது இன்றியமையாத விடயமாகும். ஏனெனில், நவீன நாகரிக மானது, நிம்மதிக்கான வழிகளை விட, அந்த நிம்மதியை இல்லாதொழிக்கக்கூடிய பலவகை கருவிகளையுமே முன்வைத் துள்ளது. மேலும், அழிவு தரும் ஆயுதங்கள், மனித சமூகத்திற்கு தீங்கை விளைவிக்கக்கூடிய அவற்றின் பிரயோகங்களிலிருந்து மனிதர்களின் விடுதலையை உறுதி செய்யக்கூடிய எதையும் அது தரவில்லை.

குற்றங்கள், பாவச்செயல்கள், கொலை, தற்கொலை மற்றும் ஏனைய குழப்பமான வெளிப்பாடுகளின் அதிகரிப்பு நமக்குக் கூறுவதென்னவெனில், ஒழுக்கமானது ஒரு சமூகத்தின் நடைமுறையில் மேலாதிக்கம் செலுத்தக்கூடியதாக இல்லாதிருக்கும் பட்சத்தில், வெறும் தொழில் நுட்ப அறிவினாலும் உற்பத்தியினாலும் மனிதர்களுக்கு நிம்மதியையும் அதன் மகிழ்ச்சியையும் ஏற்படுத்திவிட முடியாது.

ஏகாதிபத்தியவாதிகள், தமது நலனுக்காக அறிவையும் உற்பத்தியையும் மட்டுமே பயன்படுத்திக் கொள்கின்றனர். ஏனெனில், ஒழுக்கம் என்பது அவர்களிடத்தில் இல்லை. இலட்சக்கணக்கான ஒடுக்கப்பட்ட மக்களின் உரிமைகளைப் பறிப்பதோடு, அவர்களது குருதியையும் வளங்களையும் உறிஞ்சிக் கொள்ளவும் முனைகின்றனர்.

மனித சமூகத்தின் தீய உணர்வுகளையும், பாவங்களையும், அளவற்ற அழிவுகளையும் தடுக்கக்கூடிய, அறிவை ஆரோக்கியமான மனித வாழ்வின் சீராக்கத்திற்கு பயன்படுத்தக் கூடிய ஒரே அம்சம், அல்லாஹ்வின் மீதான உண்மையான விசுவாசத்திலிருந்து ஊற்றெடுக்கும் ஒழுக்கச் செயன்முறையாகும்.

நபிமார்களுடைய ஒழுக்கப் பயிற்றுவிப்புகளும் நடைமுறை களும் இவ்வுலகை ஓர் உயர்ந்த வாழ்க்கையின் பக்கம் கொண்டு சேர்க்கக் கூடிய மிகச் சிறந்த சாதனங்களாக அமைந்துள்ளன.

ஒழுக்கம் என்பது, தனிமனித வாழ்க்கையிலும், கூட்டு வாழ்க்கையிலும் மனிதர்களுக்கு அத்தியவசியமான விடயமாகும். தலைமைத்துவப் பொறுப்புகளை சுமந்துள்ளவர் களின் ஒழுக்கம் மிகவும் முக்கியமானது. ஏனெனில்,

பாதுகாவலர், வழிகாட்டி என்போர், அழுக்குகளை விட்டும் மனிதர்களுடைய உள்ளங்களை சுத்தப்படுத்தக்கூடிய அளவுக்கு சிறந்த நல்லொழுக்கம், உயர்ந்த மனிதப் பண்புகள் என்பவற்றில் பின்பற்றத் தக்கவராகவும், முன்மாதிரியாகவும் இருப்பது அவசியமாகும்.

அவர் ஒழுக்க உயர் பண்புகளை -அவை அவரது சமூகப் பொறுப்பாக இருக்கும் போதிலும்- கொண்டிருக்க வில்லையெனில், தனது பணியை நிறைவேற்றுவதில் அவர் ஒருபோதும பூரண வெற்றி பெறமாட்டார். மேலும், அவருடைய முன்னெடுப்புகளும், முயற்சிகளும் நிலைபெறாத மேலோட்டமான பிரதிபலிப்புகளாகவே அமைந்திருக்கும்.

இதனாலேயே உயர்ந்த ஆன்மீக உயிரோட்டம், ஆதரவு, அன்பு, மன்னிப்பு மற்றும் ஏனைய சிறந்த ஒழுக்கப் பண்புகளைக் கொண்டவர்களாக நபிமார்களை அல்லாஹ் தெரிவு செய்தான்.

இந்த ஒழுக்கம் என்ற ஆயுதத்தினால் தான், சிலைகளை உடைத்தெறிவதற்கும், தீமைகளில் மூழ்கிப் போன கெட்ட நிகழ்வுகளை மாற்றியமைப்பதற்கும் அவற்றை பூண்டோடு அழித்து விடுவதற்கும், அழிவின் பிடியிலிருந்து அடியார்களை விடுவிப்பதற்கும் நபிமார்கள் சக்தி பெற்றார்கள்.

அண்ணல் முஹம்மத் நபிகள் ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்களைப் பற்றி அல்லாஹ் குறிப்பிடுகின்றான்; "(நபியே!) அல்லாஹ்வுடைய அருளின் காரணமாகவே, நீர் அவர்கள் மீது இரக்கமுள்ளவரானீர். கடுகடுப்பானவராகவும் கடின சித்தமுள்ளவராகவும் நீர் இருந்திருப்பீரானால், உம்மிடமிருந்து அவர்கள் விரண்டோடி இருப்பார்கள்." (ஆலஇம்ரான் : 159)

முஹம்மத் நபிகள் ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி அவர்களது உயர்ந்த ஒழுக்கமே அரபு பிரதேசத் திலும் உலகின் ஏனைய அனைத்து பகுதிகளிலும் இஸ்லாமியப் பெருங் கூட்டத்தை உருவாக்கியது. இந்தத் தூய எழுச்சியின் நிழலிலே, பிரிவினைகள் ஐக்கியமாகவும், நடத்தை பிறழ்வுகள் தூய கற்பொழுக்கமாவும், அடக்குமுறை அன்பாகவும், அகம்பாவம் இரக்கமுள்ள பணிவுத்தன்மை யாகவும் மாற்றம் பெற்றன. அதன் நிழலிலே தான், அவர்களில் ஒவ்வொரு தனிமனிதரும் ஒழுக்கத்தின் முன்மாதிரியாகவும், பிறருக்கு உதவுவோராகவும் தோற்றங் கண்டனர். நபியின் -ஸல்லல் லாஹு அலைஹி வஆலிஹி- ஒழுக்கம், பின்வருமாறு அல்லாஹ் கூறுமளவு மகத்தானதாக அமைந்திருந்தது.

"(நபியே!) நிச்சயமாக நீர் மகத்தான நற்குணமுடையவ ராக இருக்கின்றீர்."

இங்கு, நபிகளாரின் ஒழுக்கப் பண்புகளை, அவற்றில் சிலவற்றை நாம் அறிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக எடுத்துக் கூறுகின்றோம்.

### மனிதர்களுக்கு மத்தியில்

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி , தமக்கென உயர்ந்த நபித்துவ அந்தஸ்தையும், ஆட்சியையும் தலைமைத்துவத்தையும் கொண்டிருந்த போதிலும், அவர்களது வாழ்க்கையும் நடைமுறைகளும், அவர்களது சபைக்கு ஒரு பரதேசி வந்தால், 'உங்களில் முஹம்மத் யார்?' எனக் கேட்குமளவு எவ்வித மிகச் சாதாரணமாக, முழுமையான இயல்புத் தன்மை கொண்டவையாக அமைந்திருந்தன.[183]

---

*183. பிஹார், பா.16, ப.220 - 229*

இவ்வுலகம் அவர்களை ஏமாற்றி விடவில்லை, உலகின் வெளிப்பாடுகளும் கவர்ச்சிகளும் அவர்களை கைசேதங் கொள்ளச் செய்யவில்லை. அதனுடைய வலையின் கயிறுகளுக் குள் அவர்கள் அகப்பட்டுக் கொள்ளவில்லை. மாறாக, அவர்கள் எப்போதும் இறையச்சத்தினதும் பற்றின்மையினதும் கண்களினாலேயே அதனைப் பார்ப்பவராக இருந்தார்கள்.[184]

நபியின் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி பேச்சுகள், சொற்சுருக்கமும், அதேவேளை கருத்துச் செறிவும் உள்ளவையாக அமைந்திருந்தன. தமது தோழர்களுக்கு மத்தியில் தமது கால்களை நீட்டியவர்களாக ஒரு போதும் அவர்கள் காணப்படவில்லை. அவர்களிடத்தில் வருவோரை சங்கை செய்வார்கள். சிலவேளைகளில், தமது உடைகளை விரித்துக் கொடுப்பார்கள். தமக்குக் கீழுள்ள தலையணையில் அவர்கள் சாய்ந்திருக்கச் செய்வார்கள். கண்ணியமான முறையில் மற்றவர்களை அமரச் செய்வார்கள். தமது தோழர் களை செல்லப் பெயர்களால் அழைப்பார்கள். அவர்களை சங்கைப் படுத்துவதற்காக அவர்களுக்கு மிகப் பிரியமான பெயர்களைக் கூறியும் அவர்களை அழைப்பார்கள். ஒருவர் பேசிக் கொண்டிருக்கும் போது, அவரத பேச்சை தடைசெய்ய மாட்டார்கள்.[185]

ஒருவர் பேசும் போது அதனை அலட்சியம் செய்யமாட்டார்கள். மேலும், பேச்சில் இழிவான, தாழ்வான சொற்களையும் அவர்கள் பிரயோகிக்க மாட்டார்கள்.

மேலும், நபியவர்கள் அடிமைகளதும், சுதந்திரவாளர் களதும் அழைப்புக்கு -அவை சிறிய அழைப்புகளாக இருந்தாலும்- பதிலளிப்பார்கள். ஒரு மிடறு பாலாக

---

*184. மே.கு., பா.16,ப.220 - 229*
*185. குஹ்லுல் பஸர், ப.69*

இருந்தாலும் அன்பளிப்புகளை ஏற்றுக் கொள்வார்கள். அவற்றை உண்பார்கள். ஸதகாக்களை உண்ண மாட்டார்கள். பிறரது முகத்தை கூர்ந்து நோக்கமாட்டார்கள். அவர்கள் ஒரு சபையில் நுழைந்தால் நுழையும் போதுள்ள சபையின் முடிவுப் பகுதியிலேயே அமர்ந்து கொள்வார்கள். [186]

நபியவர்கள், தமக்கு முன் எவரும் தாழ்ந்தவர்களாக நிற்பதை விரு க ம்பியதில்லை. [187] அவர்கள் அனைவருக்கும் மரியாதை செலுத்துபவர்களாக இருந்தார்கள்; ஒரு சாதாரண அடிமையைப் போன்று, தரையில் அமர்ந்திருந்தே உணவு உண்பார்கள்; தமது செருப்பை தமது கைகளினாலேயே தைத்துக் கொள்வார்கள்; தமது உடைகளையும் தாமே கழுவிக் கொள்வார்கள்; சாதாரண கழுதைகளின் மீதே பயணம் செல்வார்கள்; அவற்றின் பின்பக்கமாகவே அமர்ந்து கொள்வார்கள். [188]

அல்லாஹ்வுக்காகவும், மார்க்கத்திற்காகவும் அன்றி வேறெதற்காகவும் அவர்கள் கோபப்படவில்லை. அவ்வாறு தான் அவர்களது மகிழ்ச்சியும் இருந்தது. தம்முடன் வருபவர் நடந்து வர, தாம் வாகனத்தில் பயணம் செல்வதை அவர்கள் விரும்பவில்லை.

கூட்டான பயணங்களில் -அதாவது, ஹஜ்ஜுக்காக வெளியாகும் போது, அல்லது யுத்தம் போன்றவற்றின் போது- தம்முடன் இருப்போருக்கு தாம் சுமையாக இருப்பதை அவர்கள் விரும்பவில்லை. ஏதாவது வேலையொன்றை தாமும் மேற்கொள்வார்கள்.

---

*186. பிஹார், பா.16, ப.226-228*
*187. மே.கு., பா.16, ப.240*
*188. மே.கு., பா.16, ப.229, 281, 182*

ஒரு முறை பிரயாணத்தின் போது சமையல் செய்யும் நேரம் வந்தது. ஒவ்வொருவரும் தமக்கிடையில் வேலைகளைப் பகிர்ந்து கொண்டார்கள். 'நான் மாத்திரம் தனியாகப் பிரிந்து நிற்பதை நான் வெறுக்கிறேன். நிச்சயமாக அல்லாஹ், தனது தோழர்கள் மத்தியில் தனித்துவமாகத் தெரியும் அடியானை வெறுக்கிறான்' என்று நபியவர்கள் கூறினார்கள்.[189] அதன்பின், தாமும் விறகு சேர்க்கும் பணியை மேற்கொண்டார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி தமது அனைத்து ஒப்பந்தங்களையும் வாக்குகளையும் முறைப்படி நிறைவேற்றக் கூடியவர்களாக இருந்தார்கள்.

குடும்பத்தினருடன் உறவைப் பேணிக் கொள்வார்கள். மார்க்க ரீதியான விடயத்திற்கேயன்றி, தமது குடும்பத்தினரில் எவரையும் அவர்கள் தம்மை விட்டு விலக்கிக் கொள்ளவில்லை.

ஒருவர், மற்றவரைப் பற்றி தாழ்வாகப் பேசுவதை அவர்கள் எப்போதும் அனுமதிக்கவில்லை. ஆரோக்கியமான நெஞ்சுடன் மக்களிடத்தில் வெளியாகிச் செல்வதையே அதிகம் விரும்பக் கூடியவர்களாக இருந்தார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி ஒழுக்கத்திலும் நாணத்திலும் முன்னுதாரணமாக விளங்கினார்கள். மேலும், அன்பு, மன்னிப்பு, பரந்த மனம் என்பவற்றுக்கும் முன்னுதாரணமாக விளங்கினார்கள்.[190]

---

*189. குஹ்லுல் பஸர், ப. 68*
*190. பிஹார், பா.16, ப.226-232*

அனஸ் இப்னு மாலிக் அவர்கள் குறிப்பிடுவதாவது; நபியிடம் ஒரு உணவுப் பொருள் இருந்தது. அதன் மூலம் தமது நோன்பை திறந்து கொள்வார்கள். மற்றொரு உணவுப் பொருள் ஸஹருக்குரியதாகும். சிலவேளைகளில், ஒரேயொரு உணவுப் பொருள் மாத்திரமே அவர்களிடம் இருக்கும். சிலவேளைகளில் அவர்களிடம் பால் இருக்கும். சிலவேளை களில் காய்ந்த உரொட்டி இருக்கும். ஓர் இரவு, நான் அவர்களுக்காக உணவு தயார் செய்து கொடுத்தேன். நபியவர்கள் அதனை சாப்பிடாது வைத்திருந்தார்கள். ஸஹாபிகள் எவரேனும் நபியவர்களை விருந்துக்கு அழைத்திருக்கக் கூடும் என்று நான் எண்ணிக் கொண்டேன். இஷாவுக்குப் பின் சில மணி நேரத்தில் நபியவர்கள் வந்தார்கள். அவர்களோடு வந்தவர்களில் ஒருவரிடம், 'நபியவர்கள் எங்கேனும் நோன்பு திறந்தார்களா? அல்லது யாரேனும் அவர்களை அழைத்திருந்தார்களா?' என்று நான் கேட்டேன். அதற்கவர் 'இல்லை' என்று கூறினார். நபியவர்கள் நோன்புடனேயே இருந்தார்கள். அந்த உணவைப் பற்றி அவர்கள் கேட்கவேயில்லை.'[191]

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி தொழுகையை அதிகம் விரும்பினார்கள். எனினும், தொழுது கொண்டிருக்கும் நிலையில், ஏதேனும் தேவைக்காக மனிதர்கள், அவர்களிடத்தில் வந்தால், தமது தொழுகையை சுருக்கிக் கொண்டு, மனிதர்களுடைய தேவைகளை செவிமடுப்பார்கள். பின்பு, அதன் சிறப்பில் வியாபகமாக அதனை நிறைவேற்றுவார்கள்.

நபியவர்கள், அனைவரையும் மதித்து நடந்தார்கள். அவர்களிடத்தில், சிறப்பு என்பதற்கான அளவுகோல் இறைவிசுவாசமும், நல்லமலுமாக இருந்தது. அந்தஸ்து,

---

*191. குஹ்ல், ப. 67 - 68*

தலைமைத்துவம், பொருளாதார வளம் என்பவற்றை விரும்புபவராக அவர்கள் எப்போதும் இருக்கவில்லை. அடிமைகள் மீது மிக்க இரக்கமுள்ளவர்களாகவும் அவர்களது விவகாரங்களுக்கும் தேவைகளுக்கும் முக்கியத்துவம் கொடுப்பவராகவும் இருந்தார்கள்.[192]

## சகிப்புத் தன்மையும் மன்னிப்பும்

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி , இயல்பில், தமக்கு தீங்கிழைத்த ஒருவரை பழிவாங்கும் முயற்சியில் ஈடுபடக்கூடியவர்களாக இருக்கவில்லை. பிறரது தீங்குகளை தாங்கிக் கொண்டார்கள். தம் மீதான காபிர்களின் கொடுமைகளை தமது மன்னிப்பு இரக்கம் என்பவற்றின் மூலம் எதிர்கொண்டார்கள்.[193]

இஸ்லாமிய அழைப்பின் ஆரம்பத்தில் குறைஷியரிடமிருந்து கடினமான கொடுமைகளை சந்தித்திருந்த போதிலும், மக்காவை வெற்றி கொண்ட போது, அவர்கள் அனைவருக்கும் பொது மன்னிப்பு வழங்கினார்கள்.[194]

தமது பெரிய தந்தை ஹஸ்ரத் ஹம்ஸா (ரழி) அவர்களைக் கொலை செய்த வஹ்ஷியை மன்னித்தார்கள். அவ்வாறே அபூசுப்யான் அவரது மனைவி ஹிந்தா ஆகியோரையும் அவ்வாறே செய்தார்கள்.[195]

ஆயினும், தமது கடினமான அன்பு, மன்னிப்பு என்பவற்றுடன், அல்லாஹ்வுடைய வரையறைகளை

192. *பிஹார், பா.16, ப.228 - 229*
193. *மே.கு., பா.16, ப.264 - 265*
194. *காமில், பா.2, ப.252*
195. *மே.கு., பா. 2, ப.252*

மீறுவோருடன் சட்டத்தை நடைமுறைப் படுத்துவதில் நெகிழ்ச்சி காட்டியது கிடையாது. மஹ்ஸூமிய்யா கிளையைச் சேர்ந்த பாத்திமா என்ற பெண் திருடிய செய்தி அறிவிக்கப் பட்ட போது, அவருடைய விடயத்தில் உஸாமா இப்னு ஸைதுடைய பரிந்துரையை நபியவர்கள் சிறிதும் ஏற்றுக் கொள்ளவில்லை. அவர்கள் கூறினார்கள்;

"உங்களுக்கு முன்பிருந்த சமூகத்தினர் அழிந்ததெல்லாம் தங்களில் அந்தஸ்துள்ளவர்கள் திருடினால் அவர்களை விட்டு விட்டு பலவீனமானவர்கள் திருடினால் மட்டும் அவர்களுக்கு தண்டனை நிறைவேற்றுவோராக இருந்தமையாகும். அல்லாஹ்வின் மீது ஆணையாக, முஹம்மதுடைய மகள் பாத்திமா திருடியிருந்தாலும், அவருடைய கையை முஹம்மத் வெட்டியிருப்பார்."[196]

ஒழுங்கும் பரிசுத்தமும்

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, தமது உடலும் உடையும் எப்போதும் சுத்தமாகவே இருக்கும் படியாகப் பேணிவந்தார்கள். அத்தர் வகைகளில் மிகவும் நல்லதை பூசிக் கொள்வார்கள்.[197] இமாம் ஸாதிக் அலைஹிஸ் ஸலாம் குறிப்பிடுவதாவது; "நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, தமது உணவுக்காக செலவழிப்பதை விட அதிகமாக மணம் பூசுவதற்கு செலவழிப்பார்கள்"[198] அவர்கள் எங்கு சென்றாலும், நறுமண வாடை நிறைந்திருக்கும்.[199]

---

*196. இாசாதுஸ் ஸரீ லிசரஹி ஸஹீஹுல் புஹாரி, பா.9, ப.456*
*197. வஸாயில், புதிய பதிப்பு, பா.1, ப.442*
*198. மே.கு., பா.1, ப.443*
*199. ஸபீனதுல் பஹார், பா.1, ப.419*

ஒரு நாளைக்குப் பலமுறை அவர்கள் பற்களைத் தீட்டிக் கொள்வார்கள்.[200] உணவு உட்கொள்ள முன்னும் பின்னும் இரண்டு கைகளையும் நன்கு கழுவிக் கொள்வார்கள்.[201]

நபியவர்கள், கண்ணாடியில் முகம் பார்த்து, தலை சீவி தம் முகத்தை அழகுபடுத்திக் கொள்வார்கள். சில சந்தர்ப்பங்களில், தெளிவான நீரில் முகம் பார்த்து, முக அழகை சரிப்படுத்திக் கொள்வார்கள். அவர்கள், தமது குடும்பத்தினருக்காக தம்மை அழகுபடுத்திக் கொள்வது போன்றே, தமது தோழர்களுக்காகவும் தம்மை அழகுபடுத்திக் கொள்வார்கள். மேலும் கூறுவார்கள்; 'நிச்சயமாக அல்லாஹ், ஓர் அடியான் தனது சகோதரனிடம் வெளியாகிச் செல்லும் போது அதற்காக தன்னை தயார்படுத்திக் கொள்வதையும் அழகுபடுத்திக் கொள்வதையும் மிகவும் விரும்புகின்றான்'.[202]

பக்தியும் வணக்கமும்

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி தொழுகையில் கடினமான ஈடுபாடு இருந்தது. அபூஅப்தில்லாஹ் அலைஹிஸ் ஸலாம் குறிப்பிடுவதாவது; 'நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி இறுதி நேர இஷாத் தொழுகையைத் தொழுதால், வுழுவுக்கான தண்ணீரையும், மிஸ்வாக்கையும் தமது தலைப்பக்கமாக எடுத்து வைக்குமாறு பணித்து விட்டு, சிறிது படுத்துக் கொள்வார்கள். பின் எழுந்து பற்துலக்கி, வுழுச் செய்து நான்கு ரகத்துகள் தொழுவார்கள். பிறகு படுத்துக் கொள்வார்கள். பின் மீண்டும் எழுந்து பற்துலக்கி, வுழுச் செய்து தொழுவார்கள். அவர்கள், தமது தூக்கத்திலிருந்து

---

*200. வஸாயில், பா.1, ப.349*
*201. மே.கு., பா.16, ப.472*
*202. மே.கு., பா.3, ப.344*

எழும் ஒவ்வொரு நேரமும் பற்றுலக்கக்கூடியவர்களாக இருந்தார்கள்.[203]

நபியவர்கள், தமது இரு பாதங்களும் வீங்கிவிடுமளவு, அல்லாஹ்வின் முன்னிலையில் நின்று தமது பணிவையும் பக்தியையும் வெளிப்படுத்தி தொழுவதை வழக்கமாகக் கொண்டிருந்தார்கள்.[204]

நபியவர்கள், தம்மைச் சூழவுள்ள வானம், பூமி, சூரியன், மற்றும் ஏனையவற்றை பற்றிய அதிக கவனிப்பும், அதிக சிந்தனையும் கொண்டவர்களாக இருந்தார்கள். அவர்கள் அதிகமாக சிந்தித்த விடயம், சிருஷ்டிகர்த்தாவான அல்லாஹ்வின் மகத்துமாகும். அற்ப உலகின் வெளிப்பாடுகள் எவையும், அவர்களை குழப்பத்திற்குள்ளாக்காத, கவர்ச்சியை ஏற்படுத்தாத அளவு, அவர்களுடைய பற்றற்ற தன்மை மகத்தான இடம்பிடித்திருந்தது.

இயல்பில், சுருக்கமான இந்தக் கட்டுரையின் மூலம், நபிகளாரது ஒழுக்கம் பற்றிய ஆய்வை முழுமையாக முன்வைப்பதென்பது முடியாத ஒன்றாகும். முஸ்லிம்கள், தமது மாபெரும் நபியின் செயற்பாடுகள், நடைமுறைகள் பற்றி அறிந்து, அவற்றை தம் கண்முன்னால் கொண்டு வருவதற்காகவும், தமது வாழ்வில் முன்னுதாரணமாகக் கொள்வதற்காகவும் சிறப்பும், அடிப்படைய இயல்பும், உண்மைத்தன்மையும் கொண்ட அவ்விவரணத்திலிருந்து சில தோற்றங்களை முடியும் போதெல்லாம் உங்களுக்குத் தருகின்றோம்.

---

*203. மே.கு., பா.1, ப.365*
*204. குஹ்லுல் பஸர், ப.78*

முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி சிறப்பான ஒழுக்கப் பண்புகளில் பின்பற்றத் தக்கவர்களாக இருந்தார்கள்.

அல்குர்ஆன் கூறுகின்றது; 'நிச்சயமாக அல்லாஹ்வின் தூதரிலே உங்களுக்கு அழகிய முன்மாதிரி இருக்கின்றது'

அவர்கள் மீது ஸலாம் உண்டாவதாக. நிச்சயமாக அவர்கள் அல்லாஹ்வின் படைப்புகளில் முதன்மையானவராகவும் மிகச் சிறந்தவராகவும் இருக்கின்றார்கள். மலக்குகளுடையவும், நல்லடியார்கள், இறைவனுக்கு நெருக்கமானவர்களுடையவும் ஸலாமும் உண்டாவதாக. மேலும், வாசகர்களாகிய உங்களுடையவும் எங்களுடையவும் ஸலாமும் அவர்கள் மீது உண்டாவதாக.